# உணர்வின் எல்லை

ந. சஞ்சீவி, எம். ஏ.,
தமிழ்த்துறைத் தலைவர்,
பச்சையப்பர் கல்லூரி, காஞ்சிபுரம்.

விற்பனை உரிமை:
பாரி நிலையம்
59, பிராட்வே, சென்னை 1.

# முன்னுரை

திருச்சிராப்பள்ளி அர்ச். சூசையப்பர் கல்லூரியில் 1942-ஆம் ஆண்டில் பழைய இடைக்கலை வகுப்பில் முதலாண்டில் சேர்ந்து படித்துக் கொண்டிருந்தேன். அந்த ஆண்டில்தான் இந்திய விடுதலைப்போர் தனது உச்ச நிலையை யெய்தியது. 1942-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 9-ஆம் நாள்தான் அண்ணல் காந்தி அடிகள் தலைமையில் இந்திய விடுதலை வீரர்கள் ஒன்று கூடி 'வெள்ளையனே வெளியேறு' என்ற விழுமிய முடிவை நிறைவேற்றினர். அதன் விளைவாக மூண்டெழுந்த விடுதலைப் போரில் இந்திய மாணவர் உலகு இரண்டறக் கலந்தது; கொடி உயர்த்திப் போர்ப்பறை கொட்டிக் களம் புகுந்தது. அப்போது என் நெஞ்சம் பாடிய இலக்கியப் பண்ணே, 'பாரதியும்—பாரதியும்' என்ற கட்டுரை.

விடுதலை இயக்கம் வீறு கொண்டிருந்த நிலையில் ஆசிரியர்களும் பெற்றோர்களும் அறியா வகையில் வகுப்பறைகளை விட்டு வெளியேறி மாணவர் ஊர்வலங்களிலும் கிளர்ச்சிகளிலும் கலந்து கொள்ளும் பேறு பெற்ற எனக்கு மகாகவி பாரதியார் பாடல்கள் மந்திர மொழிகளாய் விளங்கின. எனது அருமைத் தந்தையார் இட்ட பிச்சையாய் என்பால் குழந்தைப் பருவம் தொட்டே குடி கொண்டிருந்த இலக்கிய உணர்விற்குப் பெரு விருந்தாய் விளங்கிய பாரதியார் பாடல்களில் தோய்ந்திருந்த எனது உள்ளத்து உணர்வுகட்கு ஓர் உருவம் சமைக்க 1942-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் வெளிவந்த அர்ச். சூசையப்பர் கல்லூரிக் கலைமலர் (Magazine) சிறந்த வாய்ப்பு அளித்தது. அதன் பயனாக அம்மலரில் வெளியிடப் பெற்ற 'பாரதியும்—பாரதியும்' என்ற கட்டுரையே யான்

முதல் முதலாகக் 'கட்டுரை' என்று எழுதியது; அச்சில் வெளி வந்ததும் அதுவே.

பதினாறாண்டு இளைஞனாய் யான் இருந்தபோது எழுதிய அக்கட்டுரையைக் கண்ணுற்றுக் களிபேருவகையுடன் தன்னைப் பதிப்பாசிரியராய்க் கொண்டிருந்த அர்ச். சூசையப்பர் கல்லூரிக் கலைமலரில் கருணை கூர்ந்து வெளியிட்ட அருட்திரு. எஸ். அருள்சாமி, S.J., அவர்கட்கு யான் என்றும் நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளேன்.

எனது அருமைத் தந்தையாரின் புன்முறுவல் பொதிந்த நல்வாழ்த்தோடும் பல்லாண்டுகளாய் எனக்கு உயர்நிலைப் பள்ளியில் அறிவு புகட்டிய ஆசிரியர்கள், அன்பு பாராட்டிய தோழர்கள் ஆகியோர் பாராட்டுதல்களோடும் தொடங்கிய எனது இலக்கிய முயற்சி கடந்த 17 ஆண்டுகளாய் வளர்ந்துள்ள வரலாற்றைக் காட்டுவதே 'உணர்வின் எல்லை.'

பாரதியாரைப் பற்றிய ('பாரதியும்—பாரதியும்') கட்டுரை அப்பெருங்கவிஞரின் நினைவு நாளுக்குரிய செப்டம்பர்த் திங்களிலேயே வெளி வந்ததை எண்ணும் போது யான் அடையும் மகிழ்ச்சி பெரிது. மேலும் அவர் கலைமகளை வழிபட்ட வழிபாட்டின் கருத்தோவியமாகவே அமைந்துள்ள அக்கட்டுரை வெளிவந்த திங்களை ஒட்டியே கலைமகள் விழாவும் அமைவதை எண்ணும் போது இருமடங்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது.

'பாரதியும் பாரதியும்', எனது கல்லூரிப் படிப்பின் முதல் ஆண்டில் முகிழ்த்தது; 'ஆருயிர் மருந்து' எனது கல்லூரிப் படிப்பின் முடிவாண்டில் மலர்ந்தது.

ஏனைய பதினெட்டுக் கட்டுரைகளும் தலை சிறந்த தமிழ் இதழ்கள் பலவற்றிற்கும் அவ்வப்போது என்னால்

எழுதப் பெற்றவை. அவை தாம் வெளிவந்த கால முறைப்படியே பெரும்பாலும் இந்நூலில் அமைந்துள் ளன. அதுபற்றிய பட்டியல் ஒன்றையும் தந்துள்ளேன்.

'உணர்வின் எல்லை'யில் 17 ஆண்டுகளாய் யான் எழு திய தனித்தனி இலக்கியக் கட்டுரைகள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. இலக்கியத் துறையிலேயே ஒரு பொருள் பற்றியே தொடர்ச்சியாக யான் எழுதியவை தனித்தனி நூல்களாக உருப்பெற்றுள்ளன.

இக்கட்டுரைகள் நூல்வடிவம் பெறும் இந்நேரத்தில் எனது இலக்கிய முயற்சிகட்குப் பல்லாற்றானும் துணை புரிந்து வரும் பெருமைமிக்க இதழாசிரியர்கட்கும் பண்பு மிக்க இலக்கிய நண்பர்கட்கும் எனது நன்றியறிதலைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

கடந்த பதினேழு ஆண்டுகளில் ஓர் எளிய கட்டு ரைக் கலைஞன் என்ற முறையில் தமிழ் நாட்டின் தலைசிறந்த இதழ்கள் பலவற்றிலும் யான் வரைந்த இலக்கியக் கட்டுரைகளின் முதல் தொகுதியாகிய 'உணர்வின் எல்லை'யைத் தென்னாட்டின் தனிப்பெருவள்ளல் **டாக்டர்-ராஜா-சர்-அண்ணாமலைச் செட்டியார்** அவர்கள் திருவடி கட்குப் பணிவன்புடன் காணிக்கையாக்குவதில் பெரு மிதமும் மகிழ்வும் கொள்கிறேன். சென்னைப் பச்சையப்பர் கல்லூரி இடைக்கலை வகுப்பில் சிறப்புத் தமிழ் பயிலும் மாணவனாக யான் 1943-ஆம் ஆண்டில் சேர்ந்தபோது அண்ணாமலை அரசர் தம் அருள் நிறைந்த பொருட் கொடையே எனக்கு உதவி நிதியாய் (
அமைந்தது. சிறப்புத் தமிழ் பயிலும்
கருதி 1941-ஆம் ஆண்டில் அரசர் நிறு
நிதியைப் பெறும் வாய்ப்பும் முதன்முத
வாய்த்தது. அப்பொருளுதவியால் யான் ...

யின் விளைவாகிய இக்கட்டுரைத் தொகுதியை அப்பெரு தகையின் மலரடிகளில் காணிக்கையாக்கி வணங் வேண்டுவது நன்றியுணர்வுடைய தமிழ் மாணவனின் தலையாய கடமை அன்றோ?

இந்நூல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் திவான் பகதூர்-உயர்திரு-தி. மு. நாராயணசாமிப்பிள்ளை எம்.ஏ., பி.எல்., அவர்தம் அன்பார்ந்த அணிந்துரையா புகழொளி எய்தியுள்ளது. யான் பிறந்த நாள் முதல் என்னைத் தனது அருமைக் குழந்தைகளுள் ஒருவனாகவே கருதி வளர்த்து வாழ்த்தி வரும் அப்பெருங்கருணை யாளரின் அருளுடைமைக்கு யான் என்ன கைம்மாறு செய்ய வல்லேன்? இன்னும் பல்லாண்டு பல்லாண்டு அவர்தம் பாதுகாப்பில் யான் வாழ இறைவன் அருள் புரிவானாக!

இந்நூலின் கையெழுத்துப் படியைக் கண்ணுற்றுத் திருத்தங்கள் செய்துதவிய மகா வித்துவான் உயர்திரு மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்கும் அச்சாகுங் காலத்து பிழை திருத்தம் செய்த அருந்தமிழ் அறிஞ உயர்திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்கட்கும் யான் மாறா நன்றி பாராட்டுங் கடப்பாடுடையேன். இந்நூலை அழகுற அச்சிட்டு உதவிய முத்தமிழ் அச்சகத்தார்க்கும் விற்பனை உரிமையை ஏற்றருளும் பாரி நிலையத்தார்க்குப் என் உளமார்ந்த நன்றியறிதல் உரியது.

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!

ந. சஞ்சீவி.

# கட்டுரைகளும் அவை வெளிவந்த இதழ்களும் மலர்களும்

1. **பாரதியும்—பாரதியும்**—St. Joseph's College Magazine September—1942
2. **பாடுக பாட்டே**—*தமிழ் முரசு*—ஏப்பிரல்—'48
3. **ஆருயிர் மருந்து**—Pachaiyappa's College Magazine March—1950
4. **உணர்வின் எல்லை**—தமிழ் முரசு—ஆகஸ்டு—'50
5. **வல்லவள்**—*தமிழன் குரல்—செப்டம்பர்*—'54
6. **பொருத்தமான உவமை**—*தமிழன் குரல்*—அக்டோபர்—'54
7. **என்ன வீரம்!** ,, டிசம்பர்—'54
8. **புலமையும் கருணையும்** ,, பிப்ரவரி—'55
9. **வள்ளுவர் ஒரு புரட்சியாளர்**—சுதேசமித்திரன் வாரப் பதிப்பு —ஜூன்—'55
10. **தமிழ் நாடகக் கலை**—சுதேசமித்திரன்—தீபாவளி மலர் —நவம்பர்—'56
11. **வாழ்த்தும் கலை**—மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை மணிவிழா மலர்—டிசம்பர்—'56
12. **மருத நிலத் தலைவன்**—தமிழ் முரசு (மலேயா)—ஜனவரி—'57
13. **அன்றாட வாழ்வில் இலக்கியம்**—கலைக்கதிர்—பொங்கல்மலர் —ஜனவரி—'58
14. **இலக்கியத்தில் குழந்தை**—சுதேசமித்திரன் தீபாவளி மலர் —நவம்பர்—'58
15. **எழுவரை வென்ற இணையிலா வீரம்**—(பம்பாய் கோரேகான் தமிழ்ச்சங்க ஐந்தாம் ஆண்டு நிறைவு விழா மலர்) —டிசம்பர்—'58
16. **உழவர் இலக்கியம்**—தாமரை பொங்கல் மலர்—ஜனவரி—'59
17. **மோகனப் பள்ளு**—சுதேசமித்திரன் ஞாயிறு மலர்—ஜனவரி—'59
18. **பூமிக்குப் பாரம் சோற்றுக்குக் கேடு**—சுதேசமித்திரன் ஞாயிறு மலர்—மே—'59
19. **வையையின் வளம்**—மதுரை சித்திரைப் பொருட் காட்சி மலர் மே—'59
20. **இளங்கோ கூறிய 'என் கதை'**—அமுதசுரபி தீபாவளி மலர்— அக்டோபர் '59

# உணர்வின் எல்லை



## 1. பாரதியும்—பாரதியும்

'ஆயுந் தொறுந்தொறும் இன்பந் தரும் தமிழ்' இலக்கியம் சிலேடைக்குப் பெயர் பெற்றது என்று கூறுவர் தமிழறிஞர். தமிழ் இலக்கியத்தில் சிலேடை, திரிபு முதலியனவெல்லாம் அரியனவல்ல; தமிழுக்கென அமைந்துள்ள தனிச் சிறப்புக்களுள் அவையும் இடம்பெறும். முற்றும் சிலேடையாகவே அமைந்த நூல்கள் சிலவும் தமிழ் இலக்கியத்தை அலங்கரிக்கின்றன.

**சிலேடை**

சிறிய இக்கட்டுரையின் சிகரத்திற் பெயரும் சிலேடையாகவே அமைந்துள்ளது. 'அறிவுத் தெய்வம்' என்று அறிஞர் போற்றிப் பணியும் புனிதத் தேவியாகிய கலைமகளுக்குப் பல்வேறு பெயர்கள் வழங்குகின்றன. அவற்றுள் 'பாரதி' என்பதும் ஒன்ருகும்.

**பாரதி**

'கலைமகள், பனுவ லாட்டி, காயத்ரி ஞான மூர்த்தி,
உலகமா தாபி ராமி, ஒள்ளிய வெள்ளை மெய்யாள்,
இலகுவெண் சலச முற்றுள், பாரதி, இசைம டந்தை,
மலரயன் மனைவி, வாக்காள், வாணி,நா மகள்பே ராமே.'

எனச் சூடாமணி நிகண்டு பாரதியின் பெயர்களைப் பகர்கின்றது.

'பாதாம் புயத்திற் பணிவார் தமக்குப் பலகலையும்
வேதாந்த முத்தியுந் தந்தருள் பாரதி .........'

என்று, தொழுவார்க்கு இரங்கித் தண்ணருள் புரியும் தாவில் கலை மடந்தையை, 'பாரதி' எனக் கம்பரும் பகர்ந்துள்ளார். ஆகலின், 'பாரதி' என்ற சொல்லுக்கு, 'கலைமகள்' என்ற பொருள் உண்டென்பது புலனாகின்றது.

அடுத்து உள்ள, 'பாரதி' என்ற சொல்லைப்பற்றி அறியாதார் யார்? ஒவ்வொரு தமிழன் உள்ளத்திலும் இருந்து ஊக்கிவரும் ஒண்டமிழ்ப் புலவர் பெருமானர் அல்லரோ அவர்? அவர் தாம் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார். அவர், 'பாரதி' என்ற பதத்திற்கு ஏற்ற பண்புடையவர் ஆவர்.

பாரதியார் கலைமகளைக் குறித்துப் பைந்தமிழ்ப் பாடல்கள் பல பாடியுள்ளார். அப்பாடல்கள் படிப்பவர் உள்ளத்தைப் பரவசப்படுத்த வல்லன; கற்றோர் உள்ளம் கசிந்து உருகுமாறு செய்யும் நீர்மையன.

இவ்வியனுலகில் மக்கள் விரும்புவது ஒன்று; வெறுப்பது ஒன்று. விரும்புவது இன்பம்; வெறுப்

பதோ, துன்பம். ஆகலின், தங்கள் மனவிருப்பத்திற்கு ஏற்பத் துன்பத்தைத் தொலைத்து இன்பத்தைப் பெருக்கும் பொருள்களை எல்லாம், 'தெய்வம்' என்று மொழிதல் மக்கள் மரபு; உலக இயல்பு.

மக்கள் மரபு

இன்பந் தருமானல், உயிரற்ற பொருள்களுக்கும் உயிர் கொடுத்து, தெய்விகத் தன்மையையும் மனிதத் தத்துவத்தையும் ஏற்றிக் கூறுவது மக்கள் மரபு. இக்கருத்தில் சாதாரண மக்களுடன் மாபெருங் கவிஞர்களும் கலந்துகொள்கின்றார்கள் அல்லவா?

இவ்வுலகின்கண் மாந்தர்க்கு இன்பந் தரவல்ல பொருள்கள் எண்ணிறந்தன. என்றாலும், ஆன்ற புலமையுடைய சான்றோரால் போற்றி மதிக்கப்படுவது அறிவேயாகும். அதனாலேதான், கற்றோர் கலைமகளை, 'அறிவுத் தெய்வம்' என்று அறைகின்றனர். அறிவைப் பெருக்குவதற்குச் சிறந்த உதவியாய் உள்ளவை சான்றோர் போற்றும் சாத்திரங்களும், கற்றோர் போற்றும் கலைகளுமேயாகும்.

ஓரிடத்தில் பாரதியார் கலைமகளை, 'இன்பமே வடிவாகிடப் பெற்றாள்,' என்று குறித்துள்ளார். பிறிதோர் இடத்தில்,

'வீர மன்னர்பின் வேதியர் யாரும்
தஞ்சமென்று வணங்கிடுந் தெய்வம்
தரணி மீதறி வாகிய தெய்வம்.'

என்று இயம்பியுள்ளார்.

பாரதியார் வாணிக்குப் புதிய வடிவம் ஒன்று கற்பித்துள்ளார். கலைமகளுக்கு அடையாளம் கூற வந்த கவிஞர்களெல்லாம், 'ஒரு கையிலே ஏடு காணப் படும்; மற்றொரு மலர்க் கரத்திலே மணி வடம் மிளிரும்; பிற இரு கரங்களிலும் வீணை விளங்கும்,' என்று கூறியுள்ளார் கள்; ஆனால், நம் வரகவியோ, வேறு ஒருவிதமாக வாணியின் வடிவை விளக்கி விளம்பி யுள்ளார்.

வாணியின் வடிவம்

கலைத் தெய்வத்திற்கு, 'ஞானமே மேனி; சிந்தனையே கூந்தல்; வேதமே விழி; வாதம் தருக்கம் முதலியவைகளே செவிகள்; துணிவே தோடு; போதமே நாசி; சாத்திரமே வாய்; கற்பனையே இதழ்; காவியமே இருதயம்; சிற்பம் முதலான சாத் திரங்களே திருக்கரங்கள்,' என்று ஏட்டிலே—கண் ணுக்கு அன்றி—கருத்திற்கு மட்டும் புலனாகும் எழில் மிக்க சொல் ஓவியம் தீட்டியுள்ளார்:

'வேதத் திருவிழியாள்;—அதில்
மிக்கபல் லுரையெனுங் கருமையிட்டாள்
சீதக் கதிர்மதியே—நுதல்
சிந்தனை யேகுழ லென்றுடையாள்;
வாதத் தருக்கமெனுஞ்—செவி
வாய்ந்தநற் றுணிவெனுந் தோடணிந்தாள்;
போதமென் னாசியினாள்;—நலம்
பொங்குபல் சாத்திர வாயுடையாள்.
'கற்பனைத் தேனிதழாள்;—சுவைக்
காவிய மெனுமணிக் கொங்கையினாள்;

சிற்ப முதற்கலைகள்—பல
தேமலர்க் கரமெனத் திகழ்ந்திருப்பாள்."

பாடல்களைப் பாருங்கள்! பார்த்தல் மட்டும் போதாது; தனிமையாய் இருந்து இனிமையாகப் பாடிப் பார்க்க.வேண்டும்; அப்பொழுதல்லவோ அருமை தெரியும்! கற்பனையென்னும் பொன்மான், கவியின் நாவெனும் புலத்திலே துள்ளிக் குதித்து ஓடுகின்றது! இனி இத்தகைய வடிவுடைய வாணி வாழுமிடங்களைப் பற்றிக் கவியின் கருத்தைக் காண்போம்:

உரைமகள் உறையுமிடங்களை ஒன்று விடாமல் உரைப்பது என்பது ஒல்லாது. ஆனல், சுருங்கச் சொல்லுமிடத்து, 'எங்கெங்கு எழிலும் இன்பமும் நிறைந்துள்ளனவோ, எங்கெங்குத் தூய்மையும் வாய்மையும் திகழ்கின்றனவோ, அங்கெல்லாம் ஆரணப்பாவை அமர்ந்துள்ளாள்,' என்னலாம்.

**வாணி வாழும் இடங்கள்**

'வாணி வெண்டாமரையில் வீற்றிருப்பாள்; வீணையின் நாதத்தில் விளங்குவாள்; கவிஞர் கருத்திலும் உள்ளத்திலும் குடியிருப்பாள்; ஏட்டிலே இயங்குவாள்; மறையின்கண் பிறங்குவாள்; இருடிகள் இயம்பும் இழுக்கில் மொழியின்பால் இருப்பாள்; மாதரின் மதுரப் பாட்டிலும், மக்கள் பேசும் மழலை மொழியிலும் மிளிர்வாள்; குயிலின் குரலிலும், சிறையார் கிளியின் நாவிலும் உறைவாள்,' என்ற இக்கருத்துக்களையெல்லாம், ஒருங்கே

திரட்டிப் பின்வரும் பாடல்களில், சூத்திரம்போலச் சாற்றியுள்ளார்.

"வெள்ளைத் தாமரைப் பூவி லிருப்பாள்;
வீணை செய்யும் ஒலியி லிருப்பாள்;
கொள்ளை யின்பங் குலவு கவிதை
கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்;
உள்ள தாம்பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத்தி னுள்நின் றொளிர்வாள்;
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொரு ளாவாள்.
"மாதர் தீங்குரற் பாட்டி லிருப்பாள்;
மக்கள் பேசும் மழலையி லுள்ளாள்;
கீதம் பாடும் குயிலின் குரலைக்
கிளியி னாவை யிருப்பிடங் கொண்டாள்."

... ... ... ...

பின்னர், பாரதியார் மாந்தர் போற்றும் அம்மலரவள் மாண்பைப் பற்றி விவரித்துள்ளார்.

மலரவள் மாண்பு

'முடிசார்ந்த மன்னரும், அருமறை அந்தணரும்' அடி பணியும் தெய்வம்; அறிவுத் தெய்வம்; விண் கண்ட தெய்வம் பல்கோடியுள்ளும் கண்கண்ட தெய்வம்; 'உய்வம்' என்ற உட்கருத்து உடையோருக்கு உயிரனைய தெய்வம்; எடுத்த கருமம் இனிது கை கூடுமாறு கருணை புரியும் தெய்வம்; மெய் வருந்தி உழைப்பவருக்கு உய்வைத் தரும் தெய்வம்; கலைமலி கவிஞர் தெய்வம்; தெய்வத் தன்மையுடையோர்

போற்றும் தெய்வம்,' என்ற இக்கருத்துக்கள் அப்பாடல்களில் பொதிந்து கிடக்கின்றன.

... ... ...

"வீர மன்னர்பின் வேதியர் யாரும்
தஞ்சமென்று வணங்கிடுந் தெய்வம்
தரணி மீதறி வாகிய தெய்வம்.

... ... ...

"தெய்வம் யாவும் உணர்ந்திருந் தெய்வம்;
தீமை காட்டி விலக்கிடுந் தெய்வம்;
'உய்வம்' என்ற கருத்துடை யோர்கள்
உயிரி னுக்குயி ராகிய தெய்வம்;
'செய்வம்' என்றொரு செய்கை யெடுப்போர்
செம்மை நாடிப் பணிந்திடு தெய்வம்;
கைவ ருந்தி உழைப்பவர் தெய்வம்
கவிஞர் தெய்வம்; கடவுளர் தெய்வம்."

ஒரொருகால் அடியவர் தீய நெறியில் செல்வாராயின், அன்னாரை நன்னெறிப்படுத்த, பொன்னைத் தூய்மைப்படுத்தப் புடமிடல்போல, முதலில் துன்புறுத்திப் பின்னர் இன்பந்தருவது முறை அன்றோ? அதனாலேதான் பாரதியார், 'தீமை காட்டி விலக்கிடுந் தெய்வம்' என்று திறம்படக் கூறியுள்ளார்.

**தமிழ் வாணி**

ஒருபாட்டில் பாரதியார், 'ஒளி வளர் தமிழ் வாணி!' என்று கலைமகளை விளிக்கின்றார். ஆனால் இந்நிலவுலகில் எண்டிசைக்கண்ணும் உள்ள எண்ணரு நாடுகளில் தோன்றும்

கலைகட்கெல்லாம் தாயாகிய கலைமகளை, 'தமிழ் வாணி' என்று அழைக்கின்றார் பாரதியார்.

தாய் ஒருத்தி இருக்கிறாள்; அவளுக்குப் பல குழந்தைகள் உண்டு; ஒருவன் ஒரு குழந்தையைப் பார்த்து, அந்தக் குழந்தையின் அன்னையைச் சுட்டிக்காட்டி, 'யார் அவர்கள்?' என்று வினவினால், அக்குழந்தை, 'எங்கள் அம்மா' என்று சொல்லுமே ஒழிய, அடித்தாலும் அதட்டினாலும், 'என் தம்பிக்கு அம்மா' என்றாவது, 'என் அக்காளின் அம்மா' என்றாவது சொல்லவே சொல்லாது. பல வகைகளில் கவியின் உள்ளமும் குழந்தையின் உள்ளமும் ஒன்றே அன்றோ?

'அருக்கோ தயத்தினும் சந்திரோ தயம்ஒத்து அழகெறிக்கும்
திருக்கோல நாயகி செந்தமிழ்ப் பாவை'

என்று கம்பரே கூறியுள்ளார்.

கலைமகளின் கண்களில் ஒன்றே—அதுவும் வலக்கண்ணே—கன்னித் தமிழ் மொழியின் உருவம் என்று வற்புறுத்திக் கூறுகின்றார், ஒரு பிற்காலப் பைந்தமிழ்ப் புலவர்.

'கலைமகடன் பூர்வதிசை காணுங்கால் அவள்விழியுள்
வலதுவிழி தென்மொழியா மதியாரோ மதியுடையார்'

—மனோன்மணீயம்

... ... ... ... —தண்டமிழே !
... ... ... ... —பூங்கமல

வீடாளும் வாணியங்கை மேலே யிருந்தாயோ?
ஏடாக வுன்மே லிருந்தாளோ?" —தமிழ்விடு தூது

என்று ஐயுற்று நயமாகக் கேட்கின்றார், அருந்தமிழ் அன்னையை ஆர்வத்துடன் ஒரு கவிஞர்.

கலைமகளுக்குக் கவிஞர் கவிதையிலே—அதுவும் கன்னிப் பூந்தமிழ்க் கவிதையிலே ஒரு தனி விருப்பம்—தணியா விருப்பம் உண்டு. பாரதியார் ஒரு பாடலில்,

கலைமகளும் தமிழ்க் கவிஞர்களும்

'கள்ளைக் கடலமுதை—நிகர்
கண்டதோர் பூந்தமிழ்க் கவிசொலவே
பிள்ளைப் பருவத்தில்—எனைப்
பேணவந் தாளருள் பூண வந்தாள்'

என்று இறுமாந்து கூறுகிறார்.

பிறிதொரு பாட்டிலும்,

... ... ... —"என்றன்
வாயிலு மதியிலும் வளர்ந்திடுவீர்!"

என்று 'அன்னை' வாணியை அழைக்கிறார்.

அடுத்தது ஒரு கருத்து: கலைமகள் ஏதோ தெள்ளித்தெளிக்கும் பனுவற்புலவோர் கவிமழை சிந்தக் கண்டு களிக்கலாம் என்று கருதி, அன்னார் பால் அன்பு மீதூர, அவ்வன்பு காரணமாக அருள் செய்கின்றாள். என்றாலும், கவிஞர்கள் வாணியைத் தங்கள் கற்பனை வலையில் சிக்க வைப்பதில் பெருவிருப்புடையவர்கள்.

உதாரணமாகத் திருமகளின் திருவருளை நிரம்பப் பெற நசையுற்ற பாரதியார் 'லக்ஷ்மி பிரார்த்தனை'யிலே ஒரு செய்யுளில்,

'வாணி தன்னை யென்றும்—நினது
வரிசை பாட வைப்பேன்!
நாணி ஏக லாமோ?—என்னை
நன்க றிந்தி லாயோ?'

என்று நயமாக நவின்றுள்ளார்.

கலைமகளும் திருமகளும்

செல்வத்தினும் கல்வியே சாலச் சிறந்தது. 'கேடில் விழுச்செல்வம்' அன்றோ கல்வி? செல்வத்திற்கு உரியவள் திருமகளெனச் செப்புவர். கல்விக்கு உரியவள் கலைமகளெனக் கூறுவர். ஒருவன் திருமகளின் திருவருளைப் பெறாவிடினும் தீதில்லை. ஆனால், கலைமகள் அருளைப் பெறுவது அவசியம். கலைமகள் அருள் இருப்பின், அவ்வருளைக் கொண்டு திருமகளின் திருவருளைப் பெறுவது திண்ணம். கல்வியைக் கொண்டு செல்வத்தை ஈட்டலாம் என்பதுதான் உட்கருத்து. இவ்வுயரிய கருத்தைப் பாரதியார் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கின்றார்; 'அந்தத் திருமகள் சினங்களைத் தீர்த்திடுவீர்,' என்பது அவர் வேண்டுகோள். என்னே சொல் நயம்!

பாரதியார், 'மாயை' என்னும் வலையில் சிக்குண்டு 'வாணி'யை மறந்துவிட்டார். சில நாட்கள் சென்றன. பழைய ஞாபகம் திரும்பவும் வந்துவிட்டது. 'இளங்கன்று பயமறியாது' என்பது போலப்

பாரதியார் கலைமகளை மறந்து வாளாவிருந்தார். எத்துணை நாள்தான் தாயைப் பிரிந்த கன்று தனியாக இருக்க இயலும்? தாயின் ஞாபகம் தானாகவே தோன்றுகின்றது. ஏக்கம் பிடிக்கின்றது; கத்தவும் ஆரம்பிக்கின்றது.

**பாரதியும் பாரதியும்**

தாயின் செவியில் கன்று கத்தும் குரல் சென்று தாக்குகிறது. தாயின் உள்ளம் தணலிடை மெழுகென உருகியது. கன்று இருக்கும் இடத்தை நோக்கித் தாயின்கால்கள்நடந்தன. தாயும் கன்றும் ஒன்று சேர்ந்தன. தாய்ப்பசு கன்றைத் தன் நாவால் நக்குகிறது; கன்றோ, தாயைச் சற்றுக் கோபத்துடன் பார்க்கிறது; 'என்னை விட்டு ஏன் பிரிந்தாய்?' என்று கேட்பது போல இருக்கின்றது அதன் பார்வை. பிரிந்தது தன் குற்றம் என்பதைக் கன்று உணரவில்லை. எனினும், தாய் பிரிந்துவிடுமோ என்று அஞ்சுகிறது. இப்படித்தான் பாரதியாரும்! பாரதியாரது 'ஸரஸ்வதி ஸ்தோத்திரம்' என்ற செய்யுட் பகுதியில் இக்கருத்துக்கள் காணப்படுகின்றன. அன்னையை மறந்தேன் என்பதை,

> 'மாயையி லறிவிழந்தே—உம்மை
> மதிப்பது மறந்தன பிழைகளெல்லாம்'

என்று கூறுமுகமாகப் புலப்படுத்துகின்றார். மறந்தது தம் குற்றமாயினும், கவிஞர்,

> 'எங்கனம் சென்றிருந்தீர்—என
> தின்னுயி ரே !என்றன் இசையமுதே!'

மாதமோர் நான்காநீர்—அன்பு
வறுமையி லேயெனை ஆழ்த்திவிட்டீர்.'

என்று கூறுகின்றார்.

பின்னர்த் தாயை,

... ... ... "என்றன்
பாவ மெலாங் கேட்டு ஞான கங்கை
நாத மொடெப் பொழுதும்—என்றன்
நாவினிலே பொழிந்திடவேண்டும்."

என்று வேண்டுகிறார்.

தாயும் தனயரும் ஒருங்கே கூடி இன்ப அன்பு வெள்ளத்தில் திளைத்துக்கொண்டிருக்கிறார்கள். அளவு கடந்த இன்பம் அனுபவிக்கும் ஒருவனுக்கு, 'இன்பம் அனுபவிக்கும் நம்மைத் துன்பம் வந்து தாக்குமோ!' என்ற பயம் உள்ளூற இருப்பது இயற்கையல்லவா? அதனாலேதான் பாரதியார்,

'அண்மையி லிருந்திடுவீர்—இனி
அடியேனைப் பிரிந்திடில் ஆற்றுவனே?'

என்றார்.

பின்னர்த் தாயைப் பரிந்து நோக்கி,

'ஊனங்கள் போக்கிடுவீர்—நல்ல
ஊக்கமும் பெருமையும் உதவிடுவீர்,

என்று வேண்டுகிறார். இறுதியாகப் பாரதியார் தாம் செய்த பிழைகளையெல்லாம் மறந்து, தம்மை மறவாது இருக்குமாறு வேண்டுகிறார். முன்போலத் தாயை மறக்கவில்லை என்று உறுதி கூறுகின்றார்.

'இனி மறக்கிலேன் எனைநீர் மறக்கிலீர்' என்று இனிமையாக, நயமாக வேண்டுகிறார்.

'தீயினை நிறுத்திடுவீர்—நல்ல
 தீரமும் தெளிவுமிங் கருள்புரிவீர்
மாயையி லறிவிழந்தே—உம்மை
 மதிப்பது மறந்தன பிழைகளெலாம்
தாயென வுமைப்பணிந்தேன்—பொறை
 சார்த்திநல் லருள்செய வேண்டுகிறேன்,
வாயினிற் சபதமிட்டேன்—இனி
 மறக்கிலேன் எனைநீர் மறக்ககிலீர்"

என்கிறார்.

'தமிழ் வாணி' என்று நம்மனோர் போற்றும் வாணியைத் தமிழ் மக்கள் வழிபடும் வகையைக் கண்டு ஒருவாறு வருந்துகிறார் பாரதியார். இப்போக்கு சிலருக்கு இறும்பூது விளைக்கலாம். ஆனால், ஆழ்ந்து எண்ணுங்கால் உண்மை புலனாகும். ஆண்டிற்கொருநாள் ஆங்காங்கு மூலை முடுக்குகளில் முடங்கிக் கிடக்கும் புத்தகங்களைக் குவித்து, விளக்கொன்றை ஏற்றி, பூவைப் பறித்துப் போட்டு, சந்தனத்தைத் தெளித்து, ஒரு மணி நேரத்தில் வாணி வழிபாடு வழிபடும் முறையை நம் வரகவி விரும்பவில்லை—வெறுக்கின்றார்; 'உரைமகளுக்கு அது ஒருபோதும் உவப்பை விளைக்காது,' என்று வற்புறுத்திக் கூறுகின்றார். மேலும், பாரதியாருக்குக் கலைமகளைத் தன்னந்தனியே இருந்து துதித்து அவள் அருளைப் பெறுவதில் நினைத்துணையும் விருப்பமில்லை. தமிழ்க்

கவிஞர்களின்—துறவிகளின் தனிப்பண்பு அது. பாரதியார் எல்லோரையும் 'சேர்ந்தித் தேவை வணங்குவம் வாரீர்,' என்று அழைக்கின்ருர். ஆனல், பாரதியார் ஒரு வேண்டுகோள் மட்டும் செய்துகொள்கிருர்.

'செந்த மிழ்மணி நாட்டிடை யுள்ளீர் !
சேர்ந்தித் தேவை வணங்குவம் வாரீர் ;
வந்த னம்மிவட் கேசெய்வ தென்ருல்
வாழி யஃதிங் கெளிதன்று கண்டீர்;
மந்தி ரத்தை முணுமுணுத் தேட்டை
வரிசை யாக அடுக்கி யதன்மேல்
சந்த னத்தை மலரை யிடுவோர்
சாத்தி ரம்இவள் பூசனை யன்ரும்.'

எனப் பணித்தல் காண்க.

இன்று நாம் போற்றிப் புகழும் பாரதியார், கலைமகளை வழிபடப் புத்தம் புதியதொரு முறையைக் கற்பிக்கிருர்; கலைமகளின் கருணையை விரைந்து பெற வழிகாட்டுகிருர். கவிஞர் காட்டும் வழியில் வழாது நடக்க வேண்டுவது நம் கடமையன்ருே? அன்றேல், பாரதியாரைப்போற்றுவதிலே-புகழ்ந்து பேசுவதிலே பயன் என்ன? பாரதியார் கேவலம் புகழுக்காகக் கவிகளைப் பாடவே இல்லை. செந் தமிழ் நாட்டினர் அந்தமில் சீரும் சிறப்பும் பெற்றுத் திகழவே தம் வாழ்நாளைத் தத்தஞ் செய் தார்; மக்கள் மனத்திலே என்றும் நின்று நிலவி னைக்கும் வண்ணமே மதுரத் தமிழ்க் கவிகள் பாடினர்.

'வீடு தோறும் கலையின் விளக்கம்
வீதி தோறும் இரண்டொரு பள்ளி
நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்க ளெங்கும் பலப்பல பள்ளி
... ... ...
... ... ...
கேடு தீர்க்கும் அமுதமென் அன்னை
கேண்மை கொள்ள வழியிவை கண்டீர்.'

என்று உபதேசிக்கிறார், நம்மனோர்க்குப் பாரதியார். 'தருமங்களில் எல்லாம் தலைசிறந்து விளங்குவது கல்வி கற்பித்தலே,' என்று கூறுகின்றார்.

'அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோ ரேழைக்கு எழுத்தறி வித்தல்'

என்பது காண்க.

அறியாமை இருளைப் போக்குவதில் கண்ணும் கருத்துமாயுள்ள கவிஞர், நம்மவர் உதவியையும் நாடுகிறார்; ஒவ்வொரு தமிழனும் தன்னாலியன்ற உதவியைத் தளராது—தயங்காது செய்ய வேண்டும் என்கிறார்; எவ்வாற்றாலும் செயற்கரிய இச்செயலைத் தமிழர்களாகிய நாம் செய்தே தீரவேண்டுமென்று வற்புறுத்துகின்றார்:

'நிதிமி குத்தவர் பொற்குவை தாரீர்;
நிதிகு றைந்தவர் காசுகள் தாரீர்;
அதுவு மற்றவர் வாய்ச்சொ லருளீர்;
ஆண்மை யாள ருழைப்பினை நல்கீர்;
மதுரத் தேமொழி மாதர்க ளெல்லாம்
வாணி பூசைக் குரியன பேசீர்;

ஏதுவும் நல்கியிங் கெவ்வகை யானும்
இப்பெ ருந்தொழில் நாட்டுவம் வாரீர் !'

கலைகளின் களஞ்சியமாகத் திகழ்ந்த பண்டைய பாரத நாட்டில்—நந்தமிழ் நாட்டில்—தோன்றிய கலைமகள் இன்று ஈங்கில்லை. மேலை நாடுகளில், காலையிரவியெனக் கல்விச்சுடர் கொளுத்தி வாழ்கின்றாள். 'புத்தம் புதிய கலைகள் மெத்த வளருது மேற்கே' என்ற புதுமையுரையும் எழுந்து விட்டது. நம் நாட்டிலோ, அறியாமைப் பேய் தலைவிரித்துத் தாண்டவமாடுகிறது. சோம்பற்பேய் கம்பீரமாக நாட்டை அரசாளுகிறது! இக்கோரக் காட்சிகளையெல்லாம் கண்டும் பாரதியார் எவ்வாறு வாளாவிருப்பார்?

'ஞான மென்பதோர் சொல்லின் பொருளாம்
நல்ல பாரத நாட்டிடை வந்தீர் !
ஊன மின்று பெரிதிழைக் கின்றீர் ;
ஓங்கு கல்வி யுழைப்பை மறந்தீர் ;
மான மற்று விலங்குக ளொப்ப
மண்ணில் வாழ்வதை வாழ்வென லாமோ ?'

என்று நம்மை வினவுகிறார்.

என்ன விடை கூறுவது? என்றைக்குக் கூறுவது ?

பாரதியார், 'மாயையில் அறிவிழந்த' நம்மை மேலும் மேலும் இடித்துரைத்துப் புண்படுத்த விரும்பவில்லை.

'போன தற்கு வருந்துதல் வேண்டா;
புன்மை தீர்க்க முயலுவம் வாரீர்!'

என்று அழைக்கின்றார்.

ஆகவே, ஆகமங்களும் போற்றும் அறிவுத் தெய்வம் இந் நாட்டில் அடியெடுத்து வைக்க வேண்டுமாயின், அறியாமைப் பேயை அழிக்க வேண்டும்; மடியும் மிடியும் மடிய வேண்டும்; அன்பும், அருளும், உழைப்பும், ஊக்கமும், நம்மவர் வாழ்வின் குறிக்கோளாக வேண்டும்.

மலர், மலர்ந்தாலன்றே மணங்கமழும்?
வண்டும் விரைந்து வரும்?



# 2. ஆருயிர் மருந்து

அழகு தெய்வத்தையும் அறிவிழக்கச் செய்யும் அப்பேரழகியின் கண்களினின்றும் நீர் பெருக்கெடுத்தது. இத்தனை ஆண்டுகளாக ஒன்றும் அறியாதிருந்து, திடீரென்று, 'கோற்றொடி மாதரொடு வேற்று நாடடைந்த' தன் அருமைத் தந்தை வாளால் வெட்டுண்ட செய்தி கேட்க அவள் மனம் எப்படிப் பொறுக்கும்? நெஞ்சில் அனல் பொங்க, மனம் வெந்து, கண்ணீர் சிந்தினள்.

மலர் தொடுக்கும் மண்டபத்திலிருந்த மணிமேகலையை இந்நிலையிலேதான் நமக்கு முதன் முதல் காட்டுகிறார் சாத்தனர். ஆனல், இம் முதற்காட்சிக்கும் அவள் அறவாழ்வின் முடிவுக் காட்சிக்கும் இடையிலேதான் எவ்வளவு வேறுபாடு! தந்தைக்காக விம்மி விம்மி அழுத அவள், தவக்கோலம் பூண்டு, 'எவ்வுயிர்க்காயினும் இரங்கி' அன்பு சுரக்கும் காட்சியை இறுதியில் காண்கிறோம். இவ்விரு காட்சிகட்கும் இடையே உள்ள அவள் வாழ்விலேதான் எத்தனை நிகழ்ச்சிகள்! அவற்றை எல்லாம் இலக்கியமாகச் சாத்தனர் தீட்டியுள்ள சொல்லோவியங்களைக் காணுந்தோறும் நாம் பெறும் உணர்ச்சிகள் எவ்வளவு ஆழமானவை!

கொடுமையுள் எல்லாம் கொடுமை பசிக்கொடுமை. அக்கொடுமையை நினைத்தாலும் நெஞ்சம்

குமுறும்! கண்களில் நீர் கலங்கும்! அதனலன்றே, கலைஞர்கள் அதை, 'தீ' என்றும், 'பிணி' என்றும், 'பாவி' என்றும் எண்ணிக் கலங்கினர்கள்? அதனலன்றே சான்றோர்கள், 'அழிபசி,' 'காய்பசி,' 'கொடும்பசி' என்று மனம் நொந்து கூறினர்கள்.

இப்பசியின் கொடுமைக்கு இரையான தனி மனிதனுக்கு ஆறுதல் அளிப்பது, காலனது பாசம் ஒன்றுதான். இவன் உடலை நாயும் நரியும், கழுகும் பருந்தும் கவ்வியும் கொத்தியும் தின்னும். இவன் உள்ளத்தையோ, கொலையும் களவும், பகையும் பொருமையும் பிடுங்கித் தின்னும். தனி மனிதனுக்கு ஏற்படும் இந்நிலை ஒரு சமுதாயத்திற்கே ஏற்பட்டால், கொடுமை அதனினும் வேறில்லை. அக்கொடுமைக்கு ஆளான நாடு, செம்மையெல்லாம் பாழாகிவிட்ட சுடுகாடாகவே இருக்கும். அங்கு அழுகிய பிணங்களின் நாற்றம் மட்டும் அன்றி, அழுகிய மனங்களின் நாற்றமும் வீசும்.

இப்பேரழிவை நினைந்து நினைந்து குமுறிக் குமுறி அயர்வுற்ற சாத்தனரின் இதயத்திலிருந்து பிறந்த காவியமே 'மணிமேகலை'. 'பசிப்பிணி யென்னும் பாவி'க்கு இரையான தனியொருவன் தன் மனிதப் பண்பெல்லாம் இழந்து பாழாகும் நிலையை நெஞ்சுருக எடுத்துக்காட்டும் சாத்தனர், அக்கொடுமைக்கு இரையான ஒரு சமுதாயத்தில், 'இதைவிடக் கொடுமை இனி இல்லை,' என்று நினைக்கச் செய்யும் மிகக் கொடிய காட்சியொன்றையும் சுட்டிக் காட்டுகிருர்.

தான் பெற்ற பிள்ளை பசியால் வெந்து மடிய, அதை மறந்து, தன் வயிற்றுக்கு உணவு தேடித் தின்கிறாளாம் ஒரு தாய். என்ன கொடுமை!

'பன்னீ ராண்டிப் பதிகெழு நன்னாடு
மன்னுயிர் மடிய மழைவளங் கரந்தீங்
கீன்றாள் குழவிக் கிரங்காள் ஆகித்
தான்தனித் தின்னுந் தகைமைய தாயது'!

(காதை-25: 101-4)

இவ்வடிகள், சிலருக்குச் சாத்தனாரின் கற்பனையாகப் படலாம். ஆனால், நாமே கண்ட வங்காளப் பஞ்சம், 'இது கற்பனை அன்று; வரலாறு,' என்று எச்சரிக்கிறது.

பசிக் கொடுமையின் எல்லையைத் தன் வாழ் நாளிலேயே கண்டாள் மணிமேகலை. அவள் அன்பு மனம், அனலில் இட்ட மெழுகாய் உருகியது. விளைவு என்ன? பிச்சைப் பாத்திரம் ஏந்தினாள்; பெருந் துன்பங்கட்கு ஆளானாள். அதுமட்டுமா? எலிசபெத்து பிரை போன்ற பெண்மணிகளும் சிறைச்சாலைகளைச் சீர்திருத்தத்தான் முன் வந்தார்கள். ஆனால், ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு தமிழகம் ஈன்றெடுத்த மணிமேகலையோ, அந் 'நிரயக் கொடுஞ்சிறை'யை அரசன் ஆணை கொண்டே அழித்தாள்; 'கறையோர் இல்லா' அறவோர் கோட்டமாக அச்சிறைக்கோட்டம் விளங்கச் செய்தாள். ஆனால், தன் விருப்பு வெறுப்புகட்கு நாட்டின் ஆட்சியை இரையாக்கும் கோனாட்சியின் கொடுமையால் சிறைப்பட்டாள்.

உலக வரலாற்றிலேயே, அல்லற்பட்ட ஆருயிர் மக்கட்கு அன்பு காட்டிய குற்றத்திற்காகச் சிறைப் பட்ட முதற்பெண், தமிழ்க் குலம் தந்த மணிமே கலையே. அறம் வளர்த்த அன்னையின் வாழ்விற்கு அணிசெய்யும் இவ்விருபெரு நிகழ்ச்சிகளையேனும், ஆசிரியர் சாத்தனார், அற்புதத்தின் துணை அணுவள வும் இன்றிச் சித்திரித்துள்ள புலமைத்திறம் போற் றற்குரியது!

ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு சாத்தனார் எழுதிய பெருங்காப்பியம், எவ்வளவோ முன்னேற்றங்களைக் கண்டுவிட்ட மனித சமுதாயத்திற்கு இன்றும் சில அடிப்படை உண்மைகளை நினைவூட்டத் தவறவில்லை. **கலைஞர் மாரிஸ்** (William Morris), **பேரறிஞர் கார்ல் மார்க்ஸ்** (Karl Marks) போன்ற பெருமக்களின் வாழ்வையும், வாழ்க்கையையும் கண்டு, கேட்டு உணர்ந்த பின்னரும், ஒப்பிட்டுக் காணும்போது, மணிமேகலை யின் ஒளி மழுங்கிவிடவில்லை.

இலக்கியம் என்பது வெற்றெழுத்துகளின் கூட்டமன்று; சொல்லோவியங்களைச் சேர்த்து வைத்திருக்கும் கலைக்கூடமும் அன்று; கவிஞன் தன் காலத்தில் கண்ட மக்களின் வாழ்வில் எழுந்த பெரியதொரு போராட்டத்தை உள்ளபடி எடுத்துக் காட்டி, 'முன்னேறும் மனித சமுதாயம்' என்ற கப்பல், காலப் பெருங்கடலில் கண் தெரியாமல் சென்று, துன்பமென்ற பாறையில் மோதிச் சுக்கு நூறாகாமல், அதற்கு ஒளி காட்டி, வழிகாட்டும்

உயர்ந்த பெருங் கலங்கரை விளக்கமேயாகும். மணிமேகலையில், இக்கண்ணோட்டத்தை அடிப்படையாகக் கொண்டு, சாத்தனார் பல உண்மைகளை உணர்த்தியுள்ளார். அவர் இயற்றிய இலக்கியத்தின் உயிர் நாடியான உண்மை, 'மக்கள் யாக்கை உணவின் பிண்டம்' என்பதுதான்.

இந்த எளிய—உயரிய உண்மையை அறிவின் ஆராய்ச்சியால் அறிந்த பின்னும், ஒரு சமுதாயம், தன் வாழ்க்கை நெறியில் இதைத் தலையாய சட்டமாகக் கொண்டு இதன் பயனை எல்லோரும் நுகரும் வண்ணம் வாழ்வாங்கு வாழாத காரணத்தாலே தான், நாட்டில் ஏற்றத்தாழ்வுகள் தோற்றுகின்றன. அந்த ஏற்றத் தாழ்வுகளின் புறத்தோற்றமே பஞ்சமும் பட்டினியுமாகும். அப்பஞ்சமும் பட்டினியுமே பசியென்னும் கொடிய கோலங்கொண்டு, பல்லாயிரக் கணக்கான மக்களின் உயிரையே பலியாகக் கொள்கிறது. அப் பசியென்னும் பிணி உடலை அழித்து, உணர்வைப் பாழாக்கி, உயிரையும் சூறையாடுகிறது. அறிவாற்றல் படைத்த மனித சமுதாயத்தில் நிகழக்கூடாத இப் பெருங்கொடுமை தீர, மணிமேகலை அளித்த மருந்து—நல்ல மருந்து—எல்லார்க்கும் பொதுவாகிய உணவுஒன்றுதான்.

இந்த உணவையே சாத்தனர், 'ஆருயிர் மருந்து' என்று குறிப்பிடுகிறார். உயிரையே காப்பாற்ற வல்ல மருந்தாகிய இவ்வுணவை உலகுக்கெல்லாம் வழங்கும் பேராற்றல் தம் கைக்கு வந்தபோதும்,

அவ் வாற்றலைத் தமக்கென்று தாளிட்டுப் பூட்டி வையாது எல்லோர்க்கும் உரிமையாக்கிய ஆபுத்திரன், மணிமேகலை போன்ற பெருமக்களைப்பற்றிக் குறிப்பிடும் இடங்களில் எல்லாம், 'ஆருயிர் மருத்துவர்' என்றே சாத்தனுர் குறிப்பிடுகிறுர். உணவின் பெருமையை உணர்த்தும் மணிமேகலை, 'உயிர் வாழ்விற்கு அடிப்படைத் தேவையான அதை, உலகுக்கெல்லாம் பொதுவாக்க மறுக்கும் எந்த அறமும் அறமாகாது', என்று வற்புறுத்துகிறது. மணிமேகலா தெய்வம், தீவதிலகை, அறவண அடிகள் ஆகியோர் அருண்மொழிகளாலும், மற்றும் பல்வேறு நிகழ்ச்சிகளாலும், கதைகளாலும், பாத்திரங்களின் வரலாறுகளாலும், சாத்தனுர் இக்கருத்தைக் கற்பவர் கருத்தில் ஆழமாகப் பதியுமாறு செய்துள்ளார். எல்லாவற்றிற்கும் மேலாக—

'அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்
மறவாது இதுகேள் : மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
கண்டது இல்.' (காதை-25 வரி 228–31)

எனக் கூறும் மணிமேகலையின் அமுத மொழிகள் வாயிலாகவே, 'உண்ணும் உணவு, உடுக்கும் உடை, இருக்கும் இடம் இந்த மூன்றையும் மனிதனைப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் சமுதாயம் கட்டாயமாக வழங்கியே தீரவேண்டும்,' என்று மன்பதைக்குத் தாம் அளிக்க விழைந்த வாழ்வின் செய்தியாக அவர் அருளியுள்ளார் அன்றோ? அவர் ஏட்டிலே எழுதிச்

சென்ற அச்செய்தி நாட்டிலே சட்டமாகும் நாள் தான், 'பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுக' என்று, ஆதிரை வாயிலாக, அறிவாளர் உலகம் வாழ்த்திய வாழ்த்துப் பலிக்கும் நன்னாளாகும். அந் நாளிலேதான், தனிமனிதன் உரிமை வாழ்விற்குத் தீங்கிழைத்த ஆட்சியைத் தீக்கிரையாக்கிய புரட்சி வரலாருகச் சிலப்பதிகாரம் விளங்குவதுபோல, "அத் தனிமனிதன் உயிர் வாழ்விற்கே ஆருயிர் மருந்தாய் விளங்குவது உணவு; அவ்வுணவை உலகிற்கெல்லாம் உரிமையாக்குவதே தலையாய கடமை என்று அறத்தொண்டாற்றிச் சிறை சென்ற அன்னையின் வீர வரலாறே மணிமேகலை," என்று போற்றப்படும்.



# 3. 'பாடுக பாட்டே!'

நல்ல வெயில்! கால் ஊன்ற முடியவில்லை! கால் கொப்புளித்துவிடும்போல இருக்கிறது. ஆனால், யாரோ ஒரு முதியவள் எங்கோ வெகு தூரத்திலிருந்து நடந்து வருகின்றாள். அவள் கழுத்தில் வெள்ளிய சங்குமணி காணப்படுகின்றது. அவள் கூந்தலும் அந்தச் சங்குமணி போலவே நரைத்திருக்கிறது. அவள் முகத்தில் கால வேகத்தின் சின்னங்களாகக் கோடுகள் பல—சுருக்கங்கள் பல தென்படுகின்றன. ஒரு காலத்தில் பிறைநுதலாயிருந்த அவள் நெற்றி, இப்பொழுது கன்னங்கறேலென்று கருத்துச் சுருங்கிவிட்டது. தள்ளாடித் தள்ளாடி நடந்து வரும், குறி சொல்லும் வாழ்க்கையையுடைய அந்தக் கிழவியின் ஒளி குன்றிய கண்கள் யாரையோ தேடுகின்றன.

'வயிற்றுத் துன்பம்—பசி—இதைப் போக்க என்ன பாடு படவேண்டியிருக்கிறது! யாரேனும் குறி சொல்லவாவது அழைக்கமாட்டார்களா?' என்று ஆவலோடு நடந்துகொண்டிருந்த அந்தக் கிழவியை, 'மனத் துன்பம்— கவலை — இதைத் தொலைக்க என்ன பாடு—யாரேனும் குறி சொல்லவாவது வரமாட்டார்களா!' என்ற ஏக்கத்தோடு இருந்த இளம்பெண் ஒருத்தி வெளியே வந்து பரபரப்புடன் கூப்பிடுகின்றாள்.

அந்த இளம்பெண் யார்? குறி சொல்லும் அந்தக் கிழவியை, அவள் எதற்காக, எங்கே அழைத்துச் செல்கின்ருள்?

* * *

ஒரு சிறு வீடு; அதில் ஒரு பழந்தமிழ்க் குடும்பம்; மூன்று பேர் வீட்டுவாயிலில் உட்கார்ந்திருக்கின் றனர்; ஒருவர் முகத்திலாவது மகிழ்ச்சி தோன்ற வில்லை.

அதோ இருக்கின்ருளே வயதாலும் கவலை யாலும் வாடிய முகத்தினள், அவளே நற்ருய்.

அவளருகே இருப்பவளே தலைவி. கருவண்டு போன்ற நீண்ட கரிய விழிகள், 'குறு குறு' என்ற பார்வை, செந்தாமரை போன்ற முகம், மாந்தளிர் போன்ற மேனி, பட்டுப் போன்ற மட்டமர் கூந்தல் —இவ்வளவும் இருந்தென்ன? தாமரை போன்ற அவள் முகத்தில் 'ஒளி' இல்லை; பவளம் போன்ற அவள் இதழ்களில் 'நகை' இல்லை; தன்னை அறி யாமல் தன் கடைக்கண்களில் வழிந்து வரும் கண் ணீரை யாருக்கும் தெரியாவண்ணம் தன் சுண்டு விரலால் மெதுவாகத் துடைத்துக்கொள்கிருள்; அவள் மனத்தை அவளாலேயே அடக்க இயல வில்லை; அவள் கண்களே அவளுக்குப் பகையாய் உள்ளன; அவள் காதல் உள்ளத்தின் உணர்வே அவளுக்கு நோயாய் இருக்கிறது.

அவளருகே அமைதியாக—ஆனால்—வருத்தத்தோடு உட்கார்ந்திருக்கின்றாளே மற்றொருத்தி, அவளே, 'தலைவியை'க் கண்ணும் கருத்துமாக—உணர்வைப் போற்றுங்கவிஞன் போல-நாளொரு மேனியாகப் போற்றி வளர்த்த செவிலித்தாய். பரபரப்புடன் குறி சொல்லும் கிழவியை அழைத்து வந்து முற்றத்தில் உட்கார வைக்கின்றாளே, அவளே தலைவியின் உயிர்த் தோழி. தலைவியின் வாயும் மனமும் அவளே என்று சொல்லிவிடலாம். தலைவியின் உள்ளம் அவள் ஒருத்திக்குத்தான் தெரியும்.

செவிலித்தாயும் நற்றாயும் தலைவியின் மன வேறுபாட்டின் விளைவான முகவேறுபாட்டைக் கண்டு உள்ளம் நோகின்றனர். ஆனால், தலைவியின் 'நோய்' என்னவென்பது அவர்கட்குத் தெரியவில்லை; நோயைத் தெரிந்துகொள்ளாததால் மருந்தும் புலனாகவில்லை.

காதலைப்பற்றி என்னென்னவோ உயர்வாகப் பேசுகின்றார்கள்; ஆனால், தலைவியைப் பொறுத்த மட்டில் 'காதல்' நெருப்பாகத்தான் இருந்தது. அவள் உள்ளத்தை எவனோ கவர்ந்துவிட்டான்; கவர்ந்த அவனையே அவள் உள்ளம் தேடிக்கொண்டிருந்தது. ஆனால், இந்த உண்மையை அவள் யாரிடத்தில் சொல்ல முடியும்? உண்மையை-அதுவும் காதல் பற்றிய உண்மையை—சொல்வது அவ்வளவு எளியதா? ஆனால், உண்மையைத் தாயிடம் சொல்லித்தான் ஆகவேண்டியிருக்கிறது. ஏன்?

தலைவி வாழ வேண்டும் அல்லவா? யார் சொல்வது? அவள் உள்ளத்தை அறிந்த ஒருத்தியே—உணர்வோடு அறிவும் ஒருங்கே படைத்த தலைவியின் உயிர்த்தோழியே—சொல்ல வேண்டும். எப்படிச் சொல்கின்றாள் என்று பார்ப்போம்:

குறி சொல்லும் கிழவியை முற்றத்தில் அழைத்து வந்து உட்காரச் செய்த தோழி, ஒரு முறத்தில் நெல்லையும் கொண்டு வந்து அவள் முன்னே வைக்கின்றாள். தலைவியின் முகத்தை உற்று நோக்குகின்றாள் கிழவி. குறி சொல்லும் தன் வாழ்க்கையில் தலைவியைப் போல எத்தனையோ பேரைப் பார்த்த கண்கள் அல்லவா அவள் கண்கள்? தலைவியின் மனத்தில் இருந்த உணர்வுகளை ஒவ்வொன்றாக எண்ணுவதுபோல, தோழி கொண்டு வந்த முறத்தில் இருந்த நெல்லையும் ஒவ்வொன்றாக எண்ணிப் பார்த்தாள்; தெய்வங்களைப் பாடி அழைத்துக் குறி கூறவும் தொடங்குகிறாள்.

மலையிலே பிறந்து, இயற்கையின் மடியிலே வளர்ந்து, மலைவளம் எல்லாம் கண்டவள் அல்லளா அந்த முதியவள்? ஒவ்வொரு மலையாகப் பாடுகின்றாள். தலைவியின் உள்ளமெல்லாம் கொள்ளை கொண்ட தலைவனது குன்றத்தையும் பாடுகின்றாள். பாடி முடிந்தவுடன் வேறொரு குன்றத்தைப் பாட வாயெடுக்கின்றாள். ஆனால், உணர்வோடு அறிவும் நிறைந்த தோழி இடை மறிக்கின்றாள். 'என்ன சொல்லப் போகின்றாளோ!' என்று எல்லோரும்

அவளையே பார்க்கின்றனர்; குறி சொல்லும் கிழவியை அன்போடு அழைக்கின்றாள் தோழி :–

'அகவன் மகளே! அகவன் மகளே!'

எத்தகைய அகவன் மகளாம்?

'மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
'அகவன் மகளே!'

எதற்காக இப்படி அழைக்கின்றாள்? என்ன செய்ய வேண்டுமாம்? தோழி வேண்டுகிறாள் :

'............பாடுக பாட்டே!
இன்னும் பாடுக பாட்டே!'

எந்தப் பாட்டை?

தன் சுட்டு விரலை உயர்த்திச் சொல்லுகின்றாள் தோழி :—

'.........அவர் நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே!'

'அவர் நன்னெடுங் குன்றமா! யார் அவர்!

தலைவியின் நுதல் வியர்க்கின்றது. முகம் நாணத்தால் விளக்கின்றது. நற்றாயின் கண்கள் வியப்பால் விரிகின்றன; செவிலித்தாய் ஆறுதலோடு பெருமூச்சு விடுகின்றாள்; தோழி புன்முறுவலோடு தலைவியின் மலர்க்கரங்களைத் தடவுகின்றாள். நம் தமிழ் நாவும்,

'...............பாடுக பாட்டே! இன்னும் பாடுக பாட்டே' என்ற குறுந்தொகைப் பாட்டின் அடிகளை மீண்டும் மீண்டும் பாடுகின்றது:

'அகவன் மகளே! அகவன் மகளே!
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே!
இன்னும் பாடுக பாட்டே!'
அவர், நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே!'

(குறிஞ்சி-23.)

... ... ... ...

கவிஞன் 'உள்ளங் கனிந்து உவந்த போதெல்லாம்' பாட்டுப் பிறக்கும். கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே தோன்றிய அந்த முதற் கவிஞன், விண்ணையும் மண்ணையும் பாடினான்; கடலையும் மலையையும் பாடினான்; பச்சைப்பசுங் கிள்ளையையும், கீதமினிய குயிலையும் பாடினான். ஆனால், காலம் செல்லச் செல்ல, அவன் உள்ளமும் பண்பட்டது. பருமையையே பார்த்த அவன் கண்கள், நுண்மையையும் காணத் தொடங்கின. மலையைப் பாடிய அவன் வாய், மனத்தையும் பாடியது. வண்ணப் பறவைகளைப் பாடிய அவன் வாய், வாழ்வு உணர்வுகளைப் பாடியது.

மனத்தை—உணர்வைப்—பாடிய அந்தப் பாட்டே உயர்ந்த பாட்டு.

# 4. உணர்வின் எல்லை

அழகான குளத்திலே அருமையான மலர்கள் பூத்திருக்கின்றன. பச்சிளங்குழந்தை பவளவாய் திறந்து சிரிக்கும் அந்தச் சிரிப்பினை நினைவூட்டு கின்றன அம்மலர்கள். அழகு மட்டுமா? மதுவுண் ணும் வண்டுகளையெல்லாம் மயக்கிச் சாகவைக்கும் மணமும் பெற்று விளங்குகின்றன. ஆனால், என்ன பயன்? யாரேனும் அந்த மலர்களில் ஒன்றை யேனும் எடுத்துச் சூடுகிறார்களா? சூடி மகிழ்கிறார் களா? இல்லையே! மலர்வதும், மலர்ந்த சில நாழிகை களில் வாடி வதங்குவதுமே அவற்றின் வாழ்வாகி விட்டது! இயற்கையில் நிகழும் இந்தத் துன்பக் காட்சியைக் காணும் போது நம் நெஞ்சில் அவல உணர்ச்சி மட்டுமா தோன்றுகின்றது? ஆழ்ந்த உண்மையும் புலனாகிறதல்லவா? ஆம்! உலக வாழ்க் கையில் எத்தனையோ பெருமக்கள் பிறக்கின்றார்கள்; ஆனால், ஒருவருக்கும் பயன் படாமல் செத்து மடிகின்றார்கள், அந்தப் பூக்களைப் போலத்தான்!

இயற்கையின் ஆணைக்குக் கட்டுப்பட்ட உலகில், எதற்கும் விதிவிலக்கு இல்லாமல் இல்லை. அதிக மான் வாழ்க்கையை நினைக்கும் போது அந்த உண்மை புலனாகின்றது.

வள்ளல் அதிகமானும், அருந்தமிழ்க் கிழவியாம் ஔவைப்பாட்டியும் ஆருயிர் நண்பர்கள். நட்பு

என்பது உடலின் சேர்க்கை அன்று; உள்ளத்தின் பிணைப்பும் அன்று; உயிரின் கலப்பு. அரசன்—ஆண்டி, புரவலன்—புலவன் என்ற வேறுபாடுகளை வென்று விளங்குவது நட்பு; உயர்ந்தவன்–தாழ்ந்தவன், ஆண்-பெண் என்ற தடைகளை மீறித்திகழ்வது நட்பு; சுருங்கச் சொன்னால், 'தனி இருவர் என்ற நிலைமாறி, 'ஒருவர்' என்ற தத்துவ உணர்வோடு வாழ்க்கையில் வாழ்வதுதான் நட்பு', என்று சொல்லலாம். அத்தகைய உணர்வு பெற்றவரே ஒளவையார். அதிகமான் அவரிடம் வைத்திருந்த அன்பிற்கும் மதிப்பிற்கும் எல்லையும் உண்டோ? உண்டவரைச் சாவாதிருக்கச் செய்யும் நெல்லிக்கனி தனக்குக் கிடைத்தபோது அதை ஒளவையாருக்கு அளித்து, அவர் சாவாதிருக்க விரும்பிய வள்ளலல்லனோ அதிகமான்? அக்கனியை உண்டபின் உண்மையை உணர்ந்து உள்ளம் உருகி,

'நீல மணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும!'

என்று இலக்கியம் உள்ளவரை அதிகமான் புகழ் அழியாதிருக்கச் செய்த தமிழ் மூதாட்டியார் அல்லரோ ஒளவையார்?

ஆம்! அந்த அதிகமான் போர்க்களத்தில் இறந்துவிட்டான்; எதிரி எறிந்த வேலால் இதயம் பிளந்து மாண்டுவிட்டான். அந்த வேல் அதிகமான் இதயத்தைப் பிளந்த அக்கணமே ஒளவையார் இதயத்தையும் பிளந்துவிட்டது. அவர் என்ன

செய்வார்! அவர் கண்களில் நீர் கலங்குகிறது; அமிழ்தனைய நெல்லிக்கனியைச் சுவைத்த அவர் நா சொல்லின்றித் தழுதழுக்கின்றது; அவர் துடிதுடிக்கிருர்; சிறியதும் பெரியதுமாகிய பாடல்களால் அவர் சிந்தை கலங்கும் கலக்கத்தையெல்லாம் புலப்படுத்துகிருர். உயிர் நண்பன் மாண்ட பின்னர் அவனேடு உடன் சாவாமல் வாழ்வதைக்காட்டிலும் வேதனையானது வேறேது? வேதனைத் தீயில் வெந்து வெந்து புண்ணுகிறது ஔவையார் உள்ளம். அவர் வாழ்க்கையையே வெறுக்கிருர். 'காலை என்றும் மாலை என்றும் வருவதும் போவதுமாக இருக்கும் இந்த வாழ்நாட்களை எதற்காகப் பார்க்க வேண்டும்!' என்று எண்ணி மனம் புழுங்குகின்ருர்; 'அதிகமான் இல்லாத வாழ்நாட்களில் ஒளி எதற்கு? இன்பம் எதற்கு?' என்று எண்ணி நெஞ்சம் துடிக்கின்ருர்; 'அந்த நாட்கள் இருளடைந்து போகட்டும்; ஒழிந்து போகட்டும்,' என்று சபிக்கிருர். ஆம்! தாம் வாழ்வது தமக்கே பிடிக்கவில்லை.

**'இல்லா கியரோ காலை மாலை!**
**அல்லா கியர்யான் வாழும் நாளே!'**

இதுதான் அவர் நெஞ்சக் குமுறல்.

இந்நிலையிலேதான் நாட்டில் நடக்கும் ஒரு காட்சியை அவர் காண்கிருர். 'அழுவதா? சிரிப்பதா?' என்பது அவருக்கு விளங்கவில்லை. மாண்ட வீரனய் அதிகமானுக்கு வீரக்கல் நட்டனர் மாந்தர்; பீலி சூட்டிய அக் கல்லின் முன்னே தூய்மை யாக்கிய

தேறலைச் சின்னஞ்சிறு கலத்து ஊற்றி வைத்து, 'அதிகமான் ஏற்றுக் கொள்வான்!' என்று நம்பிப் படைக்கின்றனர். பேதைமை! அவனுக்கு அச்சிறு கலத்துக் கள்ளோடு நாட்டையும் மலையையும் சேரக் கொடுத்தாலும் கொள்ளவா போகிறான்? ஐயோ! அப்படி நினைப்பதுதான் அறிவாகுமா? அதிகமான் யார்? பாடி வந்த புலவர்க்கெல்லாம் பரிசிலாக நாட்டையும் மலையையும் வழங்கிய பின்னரும் அமைதி பெறாத கலையுள்ளம் படைத்த வள்ளல் அல்லனா? அது மட்டுமா? புலவர்க்கு என்றால் தன் உடைமை எல்லாம் கொடுக்கத் துணிவான்; செறுவரை நோக்கிய கண், தன் சிறுவனை நோக்கினாலும் மாறாத சிவப்புடைய வீரன் அவன். ஆனால், மண்ணாசை—மலையாசை பிடித்தவன் அல்லன்; 'உண்டாயின் பதங்கொடுத்து, இல்லாயின் உடன் உண்ணும்' உத்தமன். போரில் வெற்றி கண்ட பின்னர், நேற்றுப் பகைவராய் இருந்தவர் இன்று அடிபணிந்து, 'நாடும் மலையும் திறையாகத் தருகிறோம்,' என்றாலும் அவற்றைக் கொள்ளமாட்டான். ஏன் தெரியுமா? அவன் போரிட்டதெல்லாம் மானத்திற்காக—வீரத்திற்காகத்தான்; மண் வெறியால் அன்று. அவன் வாழ்வும் வரலாறுமே அதற்குச் சான்று.

'கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவும் கொள்ளா தோனே.'

என்னும் அடிகள் இக்கருத்தையெல்லாம் நமக்கு நினைவூட்டுகின்றன. இனி முழுப் பாடலையும் பார்ப்போம்:

'இல்லா கியரோ காலை மாலை !
அல்லா கியர்யான் வாழு நாளே !
நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ
கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே !'

—புறம். 235

*இப்பாட்டை ஒருமுறை அன்றிப் பலமுறை படிக்க வேண்டும். அதிகமானையும், ஔவையாரையும், அவர்தம் உயரிய நட்பையும் நினைந்து நினைந்து படிக்க வேண்டும். அப்போது நம் சிந்தனை விண்ணில், 'உணர்வின் வித்து உடலை மறந்து, உள்ளத்தையும் மறந்து, உயிரையும் மறப்பதுதான்; உணர்வின் எல்லையோ உடலைத் துறந்து, உள்ளத்தையும் துறந்து, உயிரையும் துறப்பதுதான்' என்ற கருத்து மின்னல் ஒன்று ஒளி வீசும்.*



# 5. வல்லவள்.

'கட்டுரை வேண்டும்' என்ற 'தமிழன் குரலி'ன் கட்டளை கிடைத்தது. 'எதை எழுதலாம்?' என்ற எண்ணத்தில் ஆழ்ந்தேன். எதிரே 'குறுந் தொகை'ப் புத்தகம் இருத்தல் கண்டேன். எடுத்துப் பிரித்தேன்; ஒரு பாட்டு என் எதிரே நின்றது. எட்டே அடிகள்; பாட்டைப் படித்தேன்; மீண்டும் மீண்டும் படித்தேன்; எழுத்துக்கள் மறைந்தன; எண்ண உலகில் பறந்தேன். பாட்டுலகம் என்னை அடிமை கொண்டது. அந்தப் பாட்டு—அதில்—பொங்கிவரும் உணர்வு வெள்ளத்திலே தெப்பம் போல மிதந்தேன். எங்கள் காவிரி வெள்ளத்தில் இனிய அலைகள்போல அந்தக் கவிதை வெள்ளத் தில் உந்தி உந்தி வரும் உணர்வு அலைகளை எல்லாம் உணர்ந்து உணர்ந்து மகிழலானேன். அந்த மகிழ்ச்சியே எழுத்து வடிவம் பெற்றது.

எங்கும் ஒரே இருள்; மையிருள். இன்னும் பால் நிலவு வான வீதியில் உலாவரப் புறப்படவில்லை; கார்த்திகைத் திருநாளில் ஊரெல்லாம் விளங்கும் சுடர் விளக்குகள் போல அகல்வானம் முழுதும் விண்மீன்களின் கூட்டம் நிறைந்து கிடக்கிறது. ஊரெல்லாம் உறங்குகிறது. தனிமையில் விழித்திருப் போரை அஞ்சச் செய்யும் பேரமைதி யாண்டும் நிலவுகிறது. ஊரின் மூலைகளில் சில நாய்கள் மட்டும்

திடீர் திடீர் எனக் குரைக்கும் ஒலி அவ்வப்போது கேட்கிறது. அதனால் தனிமையில் இருப்போர் அச்சம் மிகுகிறதேயன்றிச் சிறிதும் குறைவதாய் இல்லை.

இத்தகைய இருள் செறிந்த–அமைதி நிறைந்த கங்குல் வேளையில்—அதோ! ஈருருவங்கள்! யார் அவர்கள்? கொடி படர்ந்த மரம் போன்றே அவளும் அவனும் நிற்கிறார்களே! நீலவானத்து வெண்மீன் கள் யாவும் ஏன் அத்துணை நாணம் கொண்டு அவர்களைக் காணவும் கண் கூசுவன போல இமைக் கின்றன! மெல்லெனப் பேசும் அவர்களது தமிழ்ப் பேச்சிற்கு இடையூறு செய்ய இசையாதனவாய், பற்றற்ற ஞானிகளின் மனம்போல் அசைவின்றி நிற்கின்றனவே, அம்மரஞ் செடி கொடிகள் எல்லாம்! மரந்தோறும் சிறு சிறு ஒலி செய்த பற வைகளின் ஒலி எல்லாம் அடங்கி விட்டதே! யாருக் காக இயற்கை அன்னை இவ்வளவு பரிவு காட்டு கிறாள்? வேறு யாருக்காக இருக்கமுடியும்? அந்தச் சங்க காலக் காதலர்கட்காகத்தான்! 'குறுந்தொகை' போற்றும் தலைவன் தலைவியர்க்காகத்தான்! 'அன்பே உயிர்; அறமே மூச்சு!' என வாழும் அச் செந்தமிழ்ச் செல்வர்கட்காகத்தான்.

இயற்கை நெறிவழி வாழ்ந்த மக்கள் சங்க காலத் தமிழ்மக்கள். அறம் பொருள் இன்பம் வீடு எல்லாவற்றையும் 'இயற்கை' வாயிலாகவே கண்ட பெருமக்கள் அவர்கள். அவர்கள் வாழ்வின் குறிக் கோள் அன்பு—அன்பு—அன்பு என்ற ஒன்றே

தான். அந்த அன்பை வாழ்வின் எல்லாத் துறைகளிலும் காணத்துடித்தது அவர்கள் நெஞ்சம். சிறப்பாக அவ்வன்பின் முதிர்ச்சியைக் காதல் வாழ்வில் காண விரும்பினார்கள்; கண்டார்கள்; கண்டு களித்து வாழ்ந்துவந்தார்கள். அவ்வாறு அவர்கள் வாழ்ந்து காட்டிய வாழ்க்கை—வான் மறையாய்—காவியமாய்—நாம் மட்டுமன்றி வையகம் எல்லாம் துன்பக் கடலின் நீங்கி இன்பக்கரை ஏற ஒளிகாட்டும் ஒப்பற்ற கலங்கரை விளக்கமாய்த் திகழ்கிறது.

அத்தகைய தமிழ்ச் சமுதாயத்தின் பிரதிநிதிகளே அவர்கள்! அதோ அந்த வீரன் கையில் விளங்குவது வேல். குருதிக் கறை படிந்த அவ் வேலின் கூர்மையையும்—அக்கூர்வேல் தாங்கிய தலைவன் திருமுகத்தையும் மாறி மாறிப் பார்த்து மகிழ்கின்றாள் அம்மங்கை. அவனோ, தன் கை வேலின் கூர்மை எல்லாம் அவள் கருவிழிகளில் விளங்கும் அருமையையும், அவ்வழகைத் தான் காணுந்தொறும் அவள் தலை கவிழ்ந்து நிலநோக்கி நாணும் அழகினையும் மாறி மாறிக் கண்டு பூரிக்கின்றான். இவ்வாறு கண்களால் கண்டு களித்தும், அறல்போலும் அவள் கூந்தலில் அழகு மலர்கள் பல சூட்டி அகமகிழ்ந்தும் இருந்த அவ்வன்புச் செல்வர்களின் உள்ளமும் உடலும் பூரிக்கப் பால் மதியம் முகில் திரைகளைந்து மெல்லத் தோன்றி ஒளி பரப்பல் ஆயிற்று. அவ்வழகிய காட்சியைக் கண்ட காதலர் நெஞ்சம் இன்பக் கடலாயிற்று. 'எழில்

வானில் தோன்றியுள்ள இக் குளிர்மதியம் என் அரு மைத் தலைவியின் திருமுகந்தானே? என வியந்து காண்பான் போல, வெண்ணிலவின் இணையிலா அழகைத் தன் இருவிழிகளாலும் கண்டு களித்திருந் தான் தலைவன்; ஆனல், திடீரெனச் சலிப்புற்றவன் போலத் தன் தலைவியின் அன்பு முகத்தை நோக்கி, 'கறையில்லா நின் முகத்திற்குக் கறைபடிந்த இம் மதியம் இணையோ?' எனக் கூறி மகிழ்ந்தான். தலை வன் திருக்கரங்களில் தாமரைக் கொடிபோலக் கிடந்த தலைவி, 'இயற்கை அழகினும், இன்பத் தமி ழினும் இனியது ஒன்று உண்டு போலும்!' என எண்ணி மயங்கியவளாய்க் கண் இமை மூடிக் கனவுல கில் ஆழ்ந்தாள்.

நள்ளிருள் வேளை; நடுப்பகலே எனும்படி வான் மதி ஒளிபரப்பல் ஆயிற்று; 'பொழுது புலர்ந்ததோ!' என எண்ணித் தருத்தோறும் தங்கியிருந்த புள்ளி னம் ஆர்த்தன; சிறகடித்துப் பறவையினம் செய் யும் ஒலி கேட்டனர் தலைவனும் தலைவியும். மையிரு ளும் கரைந்தது; புள்ளினத்தின் ஒலியரவமும் ஓங் கியது. அன்னை கனவு கண்டு எழுந்தாலும், 'ஐயன் விழித்தாலும்..........?' என்று எண்ணி அஞ்சியவ ளாய், தலைவனைப் பிரிய மனமின்றிக் கண்கலங்கிப் பிரிய முயன்றாள் தலைவி. நெடுநேரம் தலைவியுடன் கொஞ்சி மகிழ்ந்து குலவிய இன்பமெல்லாம் நொடிப் பொழுதில் மறைந்ததுபோல ஆயிற்று தலைவனுக்கு. அவன் வீர மார்பு விம்மித் துடித்தது. அவ்வமயம் எதனாலோ முகிற்காட்டினுள் சுடர்மதியம் மறைதல்

கண்டான். வீடு நோக்கிச் செல்ல விரையும் தன் ஆருயிரை ஆரத் தழுவி மகிழ்ந்து, 'அமிழ்தே, போய் வருக! மறவற்க!' என்று தேனிதழ்களாற் கூறி அனுப்பினன். அன்னமென அவள் செல்லும் அருவழியினைத் திரும்பித் திரும்பி நோக்கியவனாய், 'இன்னும் ஒரு பகல் எவ்வாறு கழியுமோ? முள்ளூர்க் கானத்தின் நறுமணம் ஒத்த அவள் கூந்தல் மணத்தில், 'இமைப்பொழுதும் நீங்காது' மூழ்கியிருக்கும் நாளும் வாராதோ!' என்று எண்ணிக் கலங்கியவனாய்க் கல்லும் முள்ளும் காலில் தைக்க, கான்யாறு கடந்து, தன் ஊர் சேர்ந்தான் தலைவன். வீடு வேம்பாய் — வெண்ணிலவு பெரும்பகையாய் விளங்கியது அவனுக்கு. எனினும், அவன் ஆண் மகன் அல்லனோ? உணர்விலும் அறிவிற்சிறந்தவன் அல்லனோ? அவன் அறிவு வேலை செய்தது; திட்டம் உருவாகியது.

கீழ்வானம் சிவந்தது; கிளர் ஒளியும் தோன்றல் ஆயிற்று. வைகறைப் போது வந்தது கண்டான். வானத்து இளஞாயிறுபோல வையகத்தே விளங்கிய அவன், இரவு நடந்து வந்த இடரான வழியெல்லாம் ஏறுபோலக் கடந்து சென்றான். காலைக் கதிரவனது ஒளிபெற்ற உலகம் புதுமைக் கோலத்துடன் விளங்கிய காட்சி அவன் விழிகட்குப் பேரின்பம் வழங்கியது. அவன் தன் தலைவியின் இல்லம் நோக்கி விரைந்தான். தலைவியின் தாயும் தந்தையும் பிறரும் அவனை முகமலர்ந்து வரவேற்றனர்; விருந்துண்டு செல்லவும் வேண்டினர். அவன், தன் 'எண்ணம்

போல் வாழ்வு'ம் அமைதல் கண்டான்; எல்லையில்லா மகிழ்வு கொண்டான். ஆனல், உண்ணும் உணவிலோ—விருந்திலோ—அவன் உள்ளம் அமைதி காண இயலுமா? வண்டுபோல அவன் விழிகள் வட்டமிட்டன. ஆ! அதோ அவன் தேடிய செல்வம்! என்னே அவன் மகிழ்ச்சி! கண்கொட்டாது பார்க்கலானன், தன் கண்ணின் கருவிழி போன்ருளை. ஆனல், அவளோ.........?

தலைவன் உள்ளம் சிந்தனைக் களமாயிற்று.

'யார் அது? அவள்தானே?'

'ஆம்! அவளேதான்! உன் ஆருயிரேதான்!'

'அவளேயோ? அதோ அவள் தன் கூந்தலினின்றும் உதிர்க்கும் அம்மலர்கள்.........?'

'ஆம்! நேற்றுக் கங்குலில் அவள் கதுப்பெல்லாம் சிவந்து களிவெறி கொள்ள நீ சூட்டிய நறுமலர்களே!'

'என்ன வியப்பு! ஒன்றும் தெரியாதவள் போன்று இருக்கிருளே!'

'நடிப்பு!'

'நடிப்பா! நடிக்கவும் முடியுமோ? என்னைப் பார்க்கவும் அவள் விழிகள் துடியாவோ? நான் சூட்டிய மலர்களை எல்லாம் கீழே உதிர்க்கிருளே!

அவை சொல்லாவோ, 'அதோ உன் ஆவித் துணை வர்' என்று! சொல்லா!

'ஓ! மலர் சொல்லாதுதான்! ஆனால், நான் தொட்டுத் தொட்டு மகிழ்ந்த அக்கூந்தலை— 'தேர்வண் மலையன் தேன் சொரியும் மலர்க் காட்டின் மணம் போலும் நின் கூந்தல்' என்று சொல்லிச் சொல்லி மகிழ்ந்த அந்தக் கூந்தலை—சாந்திட்டுக் கோதிய தன் நறுங்கூந்தலை—யான் விடாது பற்றியிருந்த தன் அழகு கரத்தால் எண்ணையிட்டுத் தடவுகிறாளே! அப்போதேனும் அந்தக் கையும் மனமும், 'அதோ! உன் தலைவன்! பார்த்து மகிழ்!' என்று ஆணையிடாவோ?........'

'இடா'

'இடாவா!.......என்ன வியப்பு! எங்கெங்கோ நோக்குகின்றாளே! ஆனால், என்னைக் காணவும்— கண்டு புன்முறுவல் செய்யவும் மறுக்கின்றாளே! ஏனோ?'

'ஏனா? அவள் தமிழ்ப்பெண்! உன் அருமைத் தலைவி! ...........அதனாலேதான்! 'பெண்ணா—தலைவியா அவள்? இல்லை! இல்லை! பெரிய திருடி! நேற்றைய நள்ளிரவிலேதான் தனிமையில் கண்டேன்; அப்போதோ, நம்மவள்! ஆனால், நள்ளிரவு நீங்கிச் சிலமணி நேரமே சென்ற இவ்வைகறையிலோ—நாலுபேர் உள்ள தன் வீட்டிலோ யாரோ

போல்வாள்! ஒன்றும் தெரியாதவளா அவள்? இல்லை—இல்லை. பெரிய திருடி! என் உள்ளத்தைத் திருடவும் அவளுக்குத் தெரியும்! திருடியதை யாரும் அறியாமல் 'திறமை' எனும் திரையிட்டு மறைத்துக் காக்கவும் அவளுக்குத் தெரியும்! ஆம்! ஆம்! இரண்டும் தெரிந்த திருடி! அதனால் அன்றோ இப்படி இருக்கின்றாள்? ஆம்! நம் தலைவி உள்ளத்திற்கும் உறவிற்கும் நல்லவளே; ஆனால், ஊருக்கும் உலகத்திற்குமோ வல்லவள்! மிக வல்லவள்!

'இரண்டறி கள்விநம் காத லோளே!
முரண்கொள் துப்பின் செவ்வேல் மலையன்
முள்ளூர்க் கானம் நாற வந்து
நள்ளென் கங்குல் நம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப்பு எண்ணெய் நீவி
அமரா முகத்தள் ஆகித்
தமரோ ரன்னள் வைகறை யானே!' —குறுந்தொகை 312

[முரண்—மாறுபாடு; துப்பு—வலிமை; மலையன்—மலையமான் திருமுடிக்காரி; ஓரன்னள்—ஒருதன்மையள்; வைகறை—விடியற்காலம்; கதுப்பு—கூந்தல்; நீவி—துடைத்து; அமரா முகத்தள் ஆகி—விரும்பாத முகத்தையுடையவளாகி.]

* * *

கட்டுரை முடிந்தது. ஆனால், என் கவிதை மயக்கம் மட்டும் நீங்கவில்லை. பாட்டைத் திரும்பத் திரும்பப் பாடிய வண்ணம் இருந்தேன். யாரோ உரிமையோடு என் அறையுள் நுழைவது கண்டேன்.

யாரெனக் கவனித்தேன். ஆம்; என் நண்பன்தான்! 'என்னப்பா!' என்றேன். வழக்கம்போல 'ஒன்றுமில்லை' என்று சொல்லிக்கொண்டே, எதிரே இருந்த நாற்காலியில் அமர்ந்தான்.

'என்னப்பா எழுதிக் கொண்டிருந்தாய்?' என்றான், என் எதிரே இருக்கும் தாள்களைப் பார்த்து.

'கட்டுரை—'தமிழன் குரலுக்கு'' என்றேன்.

"ஓ! 'தமிழன் குரல்'! எவ்வளவு இனிய பெயர்! ஆனால்?......" என்று சோர்வோடு இழுத்தான்.

'என்னப்பா, என்ன?' என்றேன்.

'தமிழன் குரல்' என்றாயே! அதைக் கேட்டதும் ஏதேதோ நினைவுகள்—நம் தமிழ்ச் சாதியைப்பற்றிய நினைவுகள்—ஈட்டி போலப் பாய்ந்து வந்தன,' என்றான்.

'என்ன, அப்படி?' என்றேன்.

'தமிழன்! தமிழன்!' என்று கூவுகிறார்கள்; கட்சிகள் பேசுகிறார்கள். ஆனால், தமிழும் தமிழனும் ஏன் இன்னும் முன்னேறி உலகில் முதலிடம் பெற முடியவில்லை? அவன் மொழி உலக அரங்கில் கேட்கிறதா? சரி; இந்தியாவிலேயே வேங்கடத்திற்கு வடக்கே அவன் மொழி முழங்குகிறதா? இல்லையே! அதுதான் போகட்டும்; அவன் நாட்டை அவன்

மொழியால் ஆளவாயினும் அவனல் முடிகிறதா! இது அவமானம் அல்லவா?' என்ருன்.

'உண்மைதான்' என்றேன் துயரத்தோடு.

'உண்மை என்று சொல்லிவிட்டால் போதுமா? அதற்குக் காரணம் என்ன என்பதை ஆராய வேண்டாவா?' என்ருன்.

நண்பன் முகத்தில் அப்போது பொங்கிய உணர்ச்சி, அதற்குமுன் நான் அவனிடம் என்றும் கண்டிராத ஒன்ருய் இருந்தது.

'ஆராயத்தான் வேண்டும்; இந்தக் கட்டுரையைப் படி' என்றேன். நான் எழுதியிருந்ததை ஆர்வத்தோடு எடுத்தான்; படித்தான். "இரண்டறி கள்வி!". 'என்ன அழகான சொற்ருெடர்! யார் பாட்டப்பா இது?' என்ருன்.

'கபிலர் பாட்டு—சங்கத்தமிழ்—குறுந்தொகை' என்றேன்.

'என்ன அழகான காதல் ஓவியம்! என்ன அருமையான பாட்டு!' என்று போற்றினன்.

'அருமையான பாட்டு மட்டும் அன்று! அறிவான பாட்டுங்கூட. அதோடு நீ கேட்ட கேள்விக்கு— ஆராயத் துடித்த ஆராய்ச்சிக்குப் பதிலும், முடிவும் கூறும் பழந்தமிழ்ப் பாட்டு' என்றேன்.

'அப்படியா!' என்ருன்; வியப்போடு என்னைப் பார்த்தான்.

'ஆம்! அந்தத் தலைவிக்கு அன்பால் வளரவும் தெரியும்; அறிவால் வாழவும் தெரியும். அவள் நல்லவள் மட்டும் அல்லள்; வல்லவளுங்கூட,' என்றேன்.

'அப்படியானல்........?' என்ருன் நண்பன்.

'அந்தத் தலைவி பண்புபோலத் தமிழர் பண்பும் அமையவேண்டும். தமிழர்கள் நல்லவர்களாய் இருத்தல் மட்டும் போதாது; வல்லவர்களாய்—மிக வல்லவர்களாயும் இருத்தல் வேண்டும். 'ஓ' வெனக் கூவும் உணர்ச்சியெல்லாம் காட்டாற்று வெள்ளம் போன்றது; நிலையற்றது; பயனற்றது. ஓசைபடாது உறுதியோடு, உணர்வும் அறிவும் ஒன்றிக் கலந்து செய்யும் ஆக்க வேலையோ — ஆண்மைத் திறமோ காவிரியின் வெள்ளம் போன்றது; வற்ருதது; வளங்கொழிப்பது,' என்றேன்.

'உண்மைதான்! உண்மைதான்', என்ருன் என் நண்பன், மலர்ந்த முகத்தோடு-புத்துணர்வோடு.

# 6. என்ன வீரம்!

இரவு மணி எட்டு இருக்கும். குளிர் காற்று 'சிவுக்குச் சிவுக்கு' என்று ஊசியாற் குத்துவது போல வீசிக்கொண்டிருந்தது. அந்நிலையில் இயற்கையின் சாதாரணச் செயல்களுக்குக்கூட அஞ்சி வாழும் 'நவநாகரிக' மனிதக் கூட்டத்தைச் சேர்ந்த நான் மட்டும் வாளாவிருக்க முடியுமா? தகுந்த தற்காப்புக்களோடு காலுறையும் கம்பளிக் கோட்டும் அணிந்துகொண்டு மேஜைமீதிருந்த 'சங்க இலக்கிய'ப் புத்தகத்திலிருந்து ஒரு பாட்டைப் பன்முறை மிகவும் சுவைத்துப் பாடிக்கொண்டிருந்தேன்.

திடீரென்று யாரோ பின்புறமாக வந்து என் கண்களைப் பொத்துவதைக் கண்டேன். 'யாரது?' என்றேன். பேச்சில்லை. 'யாரப்பா அது?' என்றேன், சற்று அழுத்தமான குரலில்; பதிலில்லை. எனக்குக் கோபமே வந்துவிட்டது. 'அடே யாரப்பா அது?' என்றேன் பொறுமை இழந்த குரலில்.

என் கண்களை மறைத்திருந்த கைகள் நழுவின; திரும்பினேன். சிரித்துக்கொண்டே நின்றான் சொக்கலிங்கம். 'அட, சொக்கலிங்கம், நீயா! நீ எப்பொழுது வந்தாய்? கடிதம் போட்டிருக்கக்கூடாதா? இரயிலடிக்கே வந்திருப்பேனே?' என்று மூச்சு விடாமல் வார்த்தைகளை அடுக்கிக்கொண்டே போனேன்.

சொக்கலிங்கம் முகத்தைச் சுளித்துக்கொண்டே, 'ஏனப்பா இந்த நடிப்பெல்லாம்? நீயென்ன பழைய சுந்தரமாகவா இருக்கின்றாய்? எப்போது நீ இந்த அரசியல் கட்சிகளோடு ஈடுபட ஆரம்பித்தாயோ, அப்போதே கெட்டுவிட்டாயே! உன் பேச்செல்லாம் உதட்டளவிலேதான்!' என்றான். எனக்குத் துக்கம் வந்தது. அழுதுவிடலாம் போல இருந்தது. சொக்கலிங்கம் என் மன நிலையைப் புரிந்துகொண்டான். 'அனிச்சப்பூ' என்று அவன் என்னை அடிக்கடி சொல்லுவது வழக்கம். அப்படிப்பட்டவன் என் கண் கலங்கப் பொறுப்பானா! 'என்ன சுந்தரம், நான் விளையாட்டாகத்தானே சொன்னேன்? வருந்தமில்லையே?' என்று கொஞ்சும் குரலில் பேச ஆரம்பித்தான். இனிமையான தமிழ்ச் சொற்களுக்கு இருக்கும் ஆற்றல்தான் என்னே! என் வருத்தமெல்லாம் பஞ்சாய்ப் பறந்தோடிவிட்டது. மகிழ்ச்சி நிறைந்த கண்களோடு என் பழைய நண்பனிடம் உளங்கலந்து பேசத் தலைப்பட்டேன். ஆனல், அவனே, நான் வேறு எதைப்பற்றிப் பேசுவதையும் சிறிதும் விரும்பியதாகத் தெரியவில்லை.

* * *

'அதெல்லாம் கிடக்கட்டும்—உண்மையை ஒளிக்காமல் சொல்லி விடு; நான் வரும்போது ஏதோ படிப்பதுபோலப் பாசாங்கு செய்துகொண்டிருந்தாயே; அப்போது யாரை நினைத்து எதற்காகச் சிரித்துக்கொண்டிருந்தாய்? உண்மையைச் சொல்லிவிடு,!

அல்லாவிட்டால், உன்னை விடமாட்டேன்,' என்று என் கையை இறுகப் பிடித்துக்கொண்டான், அறைக்குள் போய் எதையோ திருடித் தின்று விட்டுவரும் செல்வக் குழந்தையின் மலர்க் கரங்களைப்பற்றி, அன்புமொழிகளால் அதட்டும் தாய்போல.

எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. 'ஐயோ! நான் சங்க இலக்கியப் பாட்டல்லவா படித்துக் கொண்டிருந்தேன்!' என்றேன். 'அது சரியப்பா, பாட்டைப் படிக்கும் போது......அதுவும் சங்க இலக்கியப் பாட்டைப் படிக்கும்போது சிரிப்பு எதற்காக?' என்றான் சொக்கலிங்கம், என்னைக் குற்றவாளியைப் பார்ப்பவன்போல் சந்தேகக் கண்களால் பார்த்துக்கொண்டே.

அப்போதுதான் என் நினைவுக்கு வந்தன, நான் படித்துக் கொண்டிருந்த பாட்டும், நான் ஏன் சிரித்தேன் என்பதும்.

* * *

பாரியனைய தமிழ் புரக்கும் வள்ளல்களின் கருணையே போல, இமிழ் கடல் சூழ்ந்த வையகம் முழுவதும் இன்பக் கடலில் மூழ்கி எல்லையில்லாக் களிப்பெய்த, வான வெளியில் வெண்டிங்கள் தண்ணிலவு பரப்பிவரும், அழகே வடிவெடுத்த அற்புதக் காட்சியை, வைத்த கண் வாங்காது கண்டு உவகை கொள்கிறோம். ஆயினும், மூளை முழுதும் முற்றுணர்வாக, அத்திருக்காட்சியைக் காணும்நிலையினின்றும்

சற்றே நீங்கி, வேறுவகையான கண்கொண்டு பார்த் தாலோ.........? குற்றமற்ற பெரியோர் வாழ்க்கை யில் எதிர்பாராவகையில் நேர்ந்த குற்றம் குவலயம் முழுதும் உள்ள மக்களால் சுட்டிச் சுட்டிக் காட்டப் படுதல் போல, அவ்வானூர் மதியத்தின் நடுவில் குடி கொண்டிருக்கும் இருட்டு நம் கண்களை உறுத்தும்!

* * *

பைங்கிளிகள் பாடும் பசுஞ் சோலையினுள் நுழைகின்றோம். அந்தி வேளை; வீங்கிள வேனிற் காலம். வீசும் தென்றல் நம் அறிவையெல்லாம் மயக்கி, அழகு காட்சிகளின் அடிமையாக்கு கிறது. அந்நிலையில், தங்கத்தால் வார்த்த சிலை போல் ஒசிந்து நின்று, ஒண் தமிழின் இன்ப மெலாம் வழங்கி, முல்லை முறுவல் காட்டி, முதிரா இளைஞர் ஆருயிரையெல்லாம் திருகும் ஒருத்தி தன்னந்தனியே மல்லிகைச் செடியினருகே ஏக்கம் நிறைந்த பார்வையோடு, எவ்வளவோ நேரம் தன் ஆருயிர்க் காதலனை எதிர்பார்த்து இருந்தபின், திடீரென, 'அதோ! வருகிறார்!' என அறிந்ததும், அமுதூறும் தன் தாடைகள், நாணத்தால் பெறும் அந்த அழகிய செந்நிற வண்ணம் தாங்க, செருக் குற்றுத் தலை நிமிர்ந்து, ஓடித்திரியும் காற்றால் உந்தப்பட்டு, ஆடிப்பாடி மகிழ்ந்திருக்கிறது போல மலர்ந்திருக்கிறது, அதோ உள்ள அந்த அழகு ரோஜா! ஆசையோடு அதைப் போய் வெடுக்கெனப் பறியுங்கள் பார்ப்போம்! ஆ! சுரீலெனக் கையில் முள் குத்துகிறது.

* * *

ஆடிமாதம்; இருபுறமும் கனியுதிரும் சோலைகளைக் காடுபோல விரித்து, பால் நினைந்தூட்டும் தாயினைப்போலச் சாலப்பரிந்து சோழநாட்டை ஊட்டி வளர்க்கக் காவிரி அன்னை பாய்ந்து வருகிறாள்! இயற்கை அன்னையாம் அவளது கருணை வெள்ளம் பொங்கிவரும் அக்காட்சியினை, இருமருங்கிலும் எள் விழவும் இடமின்றிப் பொன்னி வளநாட்டு மக்கள், சோலை வண்டுகள் என மொய்த்து நின்று, கண்ணாரக் கண்டு களிக்கின்றார்கள். அந்தக் காவிரி வெள்ளம், அடக்கலாகா வேகத்துடன் பாய்ந்து வரும் அந்த இணையில்லாக் காட்சி, ஓர் இன்ப விருந்தேயன்றோ? ஆனால், அந்தப் பயன் நிறைந்த வெள்ளத்திலே எவ்வளவு பயனற்ற நுரைத்திரள் படர்ந்திருக்கிறது!

* * *

திங்களில் களங்கம்; ரோஜாவில் முள்; நீரில் நுரை; .... ஒருவகையில் இப்படித்தான் இருக்கிறது நம் தமிழகத்தின் பொற்காலம்—சங்க காலமுங் கூட. உலக வரலாற்றில் ஒப்புக் காணமுடியாத அவ்வளவு உயர்ந்த நாகரிக வாழ்வு வாழ்ந்தவர்களே சங்ககாலத் தமிழ் மக்கள். ஆயினும், அவர்கள் வாழ்விலும் நாகரிகத்திலும் சிற்சில குறைகள் இடம் பெறாமல் போகவில்லை. அவற்றுள் ஒன்றுதான் பரத்தைமையாகும். பரத்தையின் பொருட்டு உணர்விலும் பண்பிலும் சிறந்த தலைவியைப் பிரிதலை ஒருவகை ஒழுக்கமென — நாகரிகமெனக் — கருதினர் அக்காலத் தமிழருள் பலர் என்பது புலனாகிறது.

சிறப்பாக, செல்வச் செழுமை நிறைந்த மருத நிலத்தில், (வயலும் வயல் சார்ந்த இடமும்) இவ்வொழுக்கமும் நாகரிகமுமே ஏனையவற்றினும் கவர்ச்சி உடையதாகக் கருதப்பட்டதுபோல விளங்குகிறது. கட்குடியையும் வரைவின்மகளிர் தொடர்பையும் மிக வன்மையாகக் கண்டித்து அற நூல் இயற்றிய வள்ளுவப் பெருந்தகையார் ஒருவர் தவிர, மற்றைச் சங்ககாலப் புலவர் அனைவரும் தம் பாடல்களில் இத்தகைய மருதநில நாகரிகத்தையே—வரைவின்மகளிர் தொடர்பால் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே நிகழும் ஊடல் (சிறு பூசல்) ஒழுக்கத்தையே—அடிப்படையாகக் கொண்ட சுவை நிறைந்த பல கவிதைகளை இயற்றியிருப்பதை அகப் பொருள் தொடர்புடைய எட்டுத்தொகை நூல்களிற் காணலாம். அப்புலவர் பெருமக்கள், ' இலக்கியம், வாழ்க்கையின் ஆராய்ச்சி யாகவே இருக்க வேண்டும்', என்ற எண்ணத்தாலேயே இவ்வாறு பாடினார்கள் போலும்!

ஒருவன், ஒருத்தி—இருவரும் உயிரொடு உயிர் கலந்தாற் போன்ற அன்பு வாழ்க்கை நடத்தி வந்தனர். அவர்களுடைய ஆரா அன்புடைய காதல் வாழ்வைக் கண்டு, வானத்து உரோகிணியும், வையத்து அல்றிலுங் கூடப் பொறாமைப்பட்டிருக்கும்! அப்படி இணைபிரியா இன்ப வாழ்க்கை நடத்தி வந்த அவர்கள் வாழ்க்கையில் செல்வம் ஏராளமாகச் சேர்ந்தது; செழுமை பொங்கியது. வீட்டின்—மருத நிலத்தின்—தலைவன் அளவில்லாச் செருக்குக்

கொண்டான். அவன் உழைப்பு, ஒன்றுக்கு நூருகப் பலன் தந்தது. வேலி ஆயிரம் விளைந்தது கண்டு அவன் மனம் எல்லையில்லா மகிழ்ச்சி அடைந் தது. தன் நிலத்தின் வளமையை—தண்ணீர் தமிழகத்து ஆறுகளின் கருணையை—எண்ணி எண்ணிக் களிப்படைந்தான்; அக்களி வெறியில் தன்னை மறந்து கலையின் முழக்கத்துக்கும், கூத் தின் இன்பத்திற்கும் தன்னைக் காணிக்கையாக் கினன்; கற்பின் கொழுந்தாம் தன் பொற்புடை மனைவியை மறந்தான்; அவள் அறிவு பேதுற, கண்கள் கலங்க, புதுமை இன்பத்தில் தோய்ந்தான்; புது மலரின் பெருநறவில் வீழ்ந்த வண்டுபோலப் பரத்தையின் வீட்டில், இன்பத்தில் மயங்கிக் கிடந் தான்!

பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள் அவன் இல்லக்கிழத்தி; ஒரு நாள் தன் பொறுமையை இழந்தாள்; தன் தலைவனை இசையாலும், கூத்தா லும் மயக்கி வைத்திருக்கும் பரத்தை அறியுமாறு சில சொல் கூறினள்: 'ஆண்கள்தான் இப்படி என்றால், இந்தப் பெண்களுக்குத்தான் அறிவில் லையா? தன்னைப் போல் ஒருபெண் துயருற, தான் மட்டும் வாழ நினைக்கும் நெஞ்சமோ கலை நெஞ்சம்? கற்பற்ற வாழ்க்கை வாழ்வார் நெஞ்சம் கல் நெஞ்சந் தான். அந் நெஞ்சில் பிறக்கும் கலையும் ஒரு கலை யோ!' என்ற சொற்கள் அவள் உள்ளத்து உணர்ச் சியை வெளிப்படுத்தின. தலைவி கூறிய இச் சொற் கள், காற்றெனும் தேவனினும் பெருவலி படைத்த

பரத்தையின் ஒற்றர்களால், மிகவிரைவில், அவள் காதுகளில் கொண்டு போய்ச் சேர்க்கப்பட்டன. கேட்டாள் பரத்தை! கிளர்சினம் கொண்டாள்! இயற்கைதானே! சாதாரணமாகவே இளநம்பியரைக் கூவியழைக்கும் தன் அழகின் மாட்சியால்—கலையின் பெருமையால்—தலை நிமிர்ந்து நடக்க எக்காலத்தும் கூசாத அவள், பெருநிலக் கிழான் ஒருவன் தன் கலை ஒளிரும் மனையில்—தன் மலரடிகளில் மயங்கிக் கிடக்கும் இந்நிலையிலா இத்தகைய சுடுசொற்களைப் பொறுத்துக் கொள்ள விரும்புவாள்? ஒரு நாளும் விரும்பாள்! பொறுமை இழந்தாள் பரத்தை. அவள் திருவாய் மலரலாயிற்று! அம் மலர்ச்சியில் பிறந்த சொற்கள் எவ்வளவு மணம் நிறைந்தவை! இரண்டாயிரம் ஆண்டுகளாகியும் அவற்றின் மணம் இன்றும் குன்றவில்லையே!

பரத்தை அஞ்சா நெஞ்சம் படைத்தவள்; பழுத்த உலகியல் அறிவு பெற்றவள்; காசினி முழுதும் தன் காலடியிலேதான் உள்ளது என்ற இறுமாப்பு எப்போதும் அவள்பால் உண்டு. மேலும், அவள் சாதாரணப் பரத்தை அல்லள்! அரசியல் அறிந்த பரத்தை! அப்புறம் கேட்கவா வேண்டும், அவள் ஆண்மைக்கும், ஆற்றலுக்கும்?

செல்வச் செருக்கால் களிவெறி கொண்ட தலைவனைப் பிரிந்த தலைவி, ‘ஆண்கள்தான் இப்படி என்றால் இந்தப் பெண்களுக்குமா அறிவு இல்லை.’ என்று கூறினள் என்பதை, மீண்டும் ஒரு முறை

நினைத்துப் பார்த்தாள் பரத்தை. அவளுக்கு ஆத்திரம் பொங்கியது; ஆண்மை வீறு கொண்டது. வீட்டுக்குள்ளேயே 'குடத்து விளக்கு'ப்போல அடைபட்டுக் கிடக்கும் இந்தப் பெண்ணுக்கு எவ்வளவு தைரியம், இப்படி நம்மைக் குறித்துப் பேச! கோழை! வீட்டுக்குள்ளேயே இருந்து பேசுகிறாள்! தைரியமானவளாய் இருந்தால் வெளியில் வரட்டுமே! ஆற்றிலும் புது வெள்ளம் வந்திருக்கிறது; நானும் தலைவனும் சேர்ந்து புதுப் புனல் ஆடப்போகிறோம்; அப்போது வேண்டுமானால், இவள் திறமையும் துணிவும் உடையவளாயின், நேரில் வந்து தன் கணவனை அழைத்துச் செல்லட்டுமே! அந்தத் தைரியம் உண்டா இவளுக்கு?' என்று இவ்வாறு தன் மனத்தில் பொங்கிய வேகத்தை எல்லாம் கூரிய சொல்லம்புகளாக்கித் தலைவியின்மேல் வீசினாள், குறிபார்த்து எய்யும் வேடனைப்போல அப்பரத்தை. தன்னைப் புறங்கூறிய தலைவியின் காதில் தவறாது சென்று சேரும்படி அச்சொல்லம்புகளை வீசினாள் அவள். தலைவியை மட்டும் அச்சொற்கணைகள் தாக்குதல் போதாது; அவளைச் சார்ந்தோரையும் தாக்கவேண்டும் என்று, அவள் சுற்றத்தாரும் அறியுமாறு பேசலானாள் அவ்'வீர'மங்கை!

பரத்தை இவ்வாறு ஆத்திரங்கொண்டு, தலைவியும் அவள் சுற்றமும் அறிய முழங்கிய முழக்கத்தில், இன்னும் முக்கியமான ஒரு கருத்தையும் கூறி வைத்தாள். அல்லாவிட்டால், 'அரசியல் அறிந்த பரத்தை'யாகிய அவளுக்கும், மற்றைப் பரத்தையர்

கட்கும் வேறுபாடே இல்லாமல் அல்லவா போய் விடும்!

பரத்தை சொன்னாள்: 'ஆற்றில் புது வெள்ளம் வந்து விட்டது; யான் என்னுடைய கூந்தலில் முழுமையாய் இருக்கும் ஆம்பல் மலர்களைச் செருகிக் கொண்டு பெரிய நீர்த்துறையில் ஆடி மகிழ்வதற்குத் தலைவனோடு செல்லப் போகின்றேன்; உண்மை யிலேயே இந்தத் தலைவி அவ்வாறு நான் இவள் தலைவனோடு செல்வது தகாது என அஞ்சுவளாயின், பகைவரை, நடுவுநிலை உண்டாகும்படி, வஞ்சியாது எதிர் நின்று கொல்லும் பல்வேறு படையுடைய பெருங்கொடையாளி—மாவீரன்— கடையெழு வள்ளல்களுள் தலை சிறந்த கருணையாளன்—அதிக மான் எனப்படும் எழினி, தன் நாட்டுப் பசுக்களைப் பகைவர் கவர்ந்து சென்ற செய்தி கேட்டுச் சீற்றம் கொண்டு, அப்பகைவரோடு போரிட்டு அப்பசுக்களை மீட்டுக் காத்தான் அல்லவா?—அவ்வாறே இவளும் உண்மையிலேயே தன் தலைவன் செயல் கண்டு அஞ்சுபவளாயின், வரட்டும் வெளியே; வந்து தன் கொழுநனை—கொழுநன் மார்பை—காப்பாற்றட் டும்!' என்றாள். அரசியல் பண்பும், வரலாறும் அறிந்த அந்தப் பரத்தையின் வீரமே வீரம்!

* * *

இந்தச் செய்தியை, 'சங்கப் பாட்டைப் படிக்கும் போது சிரிப்பு எதற்கு?' என்று என்மேல் சந்தேகம் கொண்டு கேட்ட சொக்கலிங்கத்திடம் யான் விளக்க

மாகவே கூறினேன். அவனும் சிரித்தான். அதுவும் நான், 'அரசியல் தெரிந்த பரத்தையப்பா அவள்!' என்று சொல்லியபோது, அவன் எவ்வளவோ அடக்க முயன்றும் அடக்க முடியாது கொல்லென்று உரக்கச் சிரித்து விட்டான். சிறிது நேரம் சென்றதும்-சிரிப்பு அடங்கியதும்—'சுந்தரம், அந்த 'அரசியல் அறிந்த பரத்தை'யைப்பற்றிச் சங்க இலக்கியத்தில் எங்கேயப்பா சொல்லியிருக்கிறது? அந்தப் பாடலைச் சொல்; எழுதிக்கொள்கிறேன்; எங்காவது எதற்காவது பயன்படும்!' என்றான்.

' கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சிப்
பெரும்புனல் வந்த இருந்துறை விரும்பி
யாமஃ தயர்கம் சேறும்; தானஃ
தஞ்சுவ துடையள் ஆயின், வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி
முனைஆன் பெருநிரை போலக்
கிளையொடுங் காக்க, தன் கொழுநன் மார்பே.

(குறுந் தொகை-80)

[கூந்தல்—எம் கூந்தற்கண், ஆம்பல் முழுநெறி அடைச்சி—ஆம்பலினது புறவிதழொடித்த முழுப் பூவைச் செருகி, புனல்—வெள்ளம், இருந்துறை—பெரிய நீர்த்துறை, சேறும்—செல்வோம்; தானஃது—தலைவி அங்ஙனம் யாம் தலைவனுடன் விளையாடுவதை, நுகம்படக் கடக்கும்—பகைவரை நடுவுநிலையுண்டாகும்படி வஞ்சியாது எதிர் நின்று கொல்லும், முனை ஆன் பெருநிரை போல—போர்முனையிடத்தேயுள்ள பசுக்களின் பெரிய கூட்டம் போல, கிளையொடும் காக்க—சுற்றத்தோடும் வந்து பாதுகாப்பாளாக !]

இந்த அழகிய பாடலை அவனுக்குச் சொன்னேன். முத்துமுத்தான எழுத்துக்களில் அவன் இந்தச் சங்கப் பாடலை ஆர்வத்தோடு எழுதிக் கொண்டான். அப்போதும் அவனுக்குச் சிரிப்புத் தான்: 'என்னப்பா சிரிக்கிறாய்?' என்றேன், சொக்கலிங்கத்தைப் பார்த்து, நானும் சிரித்துக் கொண்டே. 'இல்லை........என்ன வீரம், பார்த்தாயா அந்த அரசியல் பரத்தைக்கு?' என்று கூறி மேலும் சிரித்தான், நண்பன் சொக்கலிங்கம். 'இந்த உலகில் நல்லவர்களின் அடக்கமும் ஒழுக்கமும், பொல்லாதவர்களுடைய ஏளனத்திற்கும் வெற்றிக்கும், எவ்வளவு எளிதில் பயன்படுகின்றன, பார்த்தாயா?' என்றேன். சிரித்துக்கொண்டிருந்த நண்பன் சொக்கலிங்கத்தின் நெற்றியில், சிந்தனைக் கோடுகள் விழ ஆரம்பித்தன!



# 7. பொருத்தமான உவமை

அன்று ஞாயிற்றுக்கிழமை; மாலை 5 மணி இருக்கும். எதிர் வீட்டு நண்பன் நம்பி, மெல்ல வெளியே வந்து திண்ணையில் உட்கார்ந்தான். அன்று அவன் முகத்தில் சிந்தனையும் சோர்வும் மாறி மாறித் தோன்றியவண்ணம் இருந்தன. சற்று நேரத்திற்கெல்லாம் அவனைக் காண நண்பன் செல்வமும் வந்து சேர்ந்தான். வந்தவனை வழக்கமான முக மலர்ச்சியோடு வரவேற்கவில்லை நம்பி; எங்கேயோ சிந்தனையைப் பறிகொடுத்திருந்தான். செல்வம் மெல்லத் திருவாயைத் திறந்தான்.

'என்ன நம்பி! என்ன சிந்தனை! அத்தை மகளிடமிருந்து கடிதம் ஒன்று....' என்று இழுத்தான். 'சே! நீ ஒரு குறும்பன்!' என்றான் நம்பி, முகத்தைச் சுளித்துக்கொண்டே.

'அடே! என்னப்பா அவ்வளவு கோபம்! சரி; வேறு என்னதான் செய்தி? ஏதாவது அரசியல் ஆராய்ச்சியோ? நீதான் அரசியல் பைத்தியமாயிற்றே!' என்றான். செல்வத்தின் கண்களில் தூண்டில் போட்டு மீனைத் தேடும் செம்படவன் பார்வை விளங்கியது.

'உ....ம் அரசியல்! என்ன அரசியல் வேண்டியிருக்கிறது! பாழாய்ப்போன அரசியல்!' என்று

சலித்துக்கொண்டான் நம்பி. 'அட, என்னப்பா அது! அரசியல் என்றால் கற்கண்டு என்பாய்; சோறு தண்ணீர் எல்லாம் மறந்து, கொடிபிடித்துக் கொண்டு ஊரெல்லாம் சுற்றுவாய்; இப்பொழுது என்னவோ அரசியல் என்றால் எட்டிக்காய் தின்றவன் போல் முகத்தைச் சுளிக்கிறாயே!' என்றான் குறும்பாக, செல்வம்.

'ஆமாம்; வேறென்ன செய்வது! இந்த அரசியல், மேற்போக்காகப் பார்த்தால் கற்கண்டுதான்; ஆனால், உள்ளே நுழைந்தால் எட்டிக்காய்தான். எல்லாம் 'புறஞ்சுவர் கோலம் செய்த கதைதான்!' என்றான் நம்பி.

'ஆமாம், ஆமாம், அரசியல் அப்படித்தான் ஆகிவிட்டது! நேர்மை, ஒழுக்கம், நீதி, தியாகம் இவற்றைத் துச்சமாய்—துரும்பினும் இழிந்ததாய்—மதிப்பவர்க்கே இன்றைய அரசியலில் ஆதிக்கம்!' என்றான் நம்பி.

'அதிலென்ன சந்தேகம்? நேர்மை, ஒழுக்கம், நீதி, தியாகம் இவையெல்லாம் யாருக்குத் தேவை? பணம், பசப்பு, இலஞ்சம், வஞ்சம், தஞ்சம், சூழ்ச்சி இவை எல்லாந்தான் இன்றைய அரசியல் ஆதிக்க மாளிகைக்கு விரைவில் ஏறப் பயன்படும் சரியான இரும்பு ஏணிகள்!' என்றான் செல்வம். நம்பி பெருமூச்சுவிட்டான்.

'அப்படித்தான் ஆகிவிட்டது இன்றைய அரசியல். பதவிகட்குப் போவதற்கு முன்னால், தலைவர்கள் மக்களிடம் வந்து சத்தியம் செய்கிறார்கள்! உண்மையான தொண்டர்தள்—ஒழுக்கம் நிறைந்த நல்லோர்கள்—வீட்டு வாயிலில் காரை வைத்துக் கொண்டு அவர்கள் சொல்லை—உழைப்பைப் பயன் படுத்திக்கொள்ளக் காத்திருக்கிறார்கள்! ஆனால், பதவிக்கு வந்ததும்—அதிகாரத்தில் அமர்ந்ததும்—எவ்வளவு நன்றி கெட்டவர்களாக நடந்துகொள்கிறார்கள்! அப்பா! கொடுமை! மனித இதயமே இவர்கட்கு இல்லையா,' என்றான் நம்பி.

'மனிதனாவது! இதயமாவது! அவையெல்லாம் அரசியல் 'ஆரோக்கியத்'திற்குத் தீங்கு புரியும் நோய்கள்! அரசியலுக்கு—அதுவும் கட்சி அரசியலுக்கு—மூளை—கொழுத்த மூளைதான் வேண்டுமே தவிர, இதயம்—கனிந்த இதயம்—எதற்கு?' என்றான் செல்வம்.

'மூளை......! என்ன மூளை அப்பா அது...!' என்றான் சேர்வோடு நம்பி.

'என்ன மூளையா? அதுதான் அரசியல் மூளை—டிப்ளமாட்டிக் ப்ரெயின்!' என்றான் செல்வம்.

'நாசமாய்ப் போக!' என்று சபித்தான் நம்பி.

'அடடா! அதற்கு இன்னும் அரை நூற்றாண்டாவது பிடிக்குமப்பா!' என்று வரம் கொடுத்துக்

கொண்டே, 'வாப்பா நம்பி! எங்காவது போய் வர லாம்,' என்று எழுந்தான் செல்வம்.

நம்பியும் கவலை நிறைந்த முகத்தோடு, களை யற்ற பார்வையோடு அவனைத் தொடர்ந்தான்.

நண்பர்கள் உரையாடலை, என் வீட்டின் திரை யிட்ட சன்னலின் பின்னே உட்கார்ந்து கவனித்துக் கொண்டே இருந்த என் கைகளும் கருத்தும், ஏனோ பரபரப்படைந்தன! எதிரே இருந்த ஒரு திங்கள் வெளியீட்டை எடுத்தேன்; புரட்டினேன். ஒரு பக்கத்தில் 'அரசியல் போக்கிரிகளின் கடைசிப் புகலிடம்' என்ற மேல் நாட்டுப் பேரறிஞர் ஒரு வரின் பொன் மொழிகள் கொட்டை எழுத்துக் களில் கட்டமிட்டுப் பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டேன். பெருமூச்சு விட்டுக்கொண்டே எழுந் தேன். சுவரிலிருந்த தமிழ் முனிவர் திரு. வி. கவின் படம் என் கண்களிற்பட்டது. 'தியாகமே வடிவான அந்தச் சான்றோர், மனம் எவ்வளவு புண்ணுகி— நெஞ்சம் குமுறியிருந்தால்—'கொள்ளை எரி அரசி யல்' எனக் கூறியிருப்பார்!' என்று நினைத்தேன். என் கண்கள் கலங்கின.

கண்ணும் மனமும் கலங்கி உட்கார்ந்திருந்த நான் எதை எதையோ எண்ணிக்கொண்டு எழுந்து, எங்கள் வீட்டின் புறக்கடையிலிருக்கும் சிறு தோட்டத்தை நோக்கி நடந்தேன். அங்கே கிடந்த ஒரு பலகை மீது அயர்ந்து உட்கார்ந்தேன்.

சுற்றிலுமிருந்த செடிகளையும், கொடிகளையும், காய்களையும், கனிகளையும், மலர்களையும், மரங்களையும் பார்த்துக்கொண்டே, நேரம் போவது தெரியாமல் இருந்தேன்.

மாலை 7 மணி இருக்கும்; தோட்டத்தில் உட்கார்ந்திருந்த எனக்கு, யாரோ வீட்டின் முன் கதவைத் தட்டும் ஒலி கேட்டது. எழுந்துவந்து பார்த்தேன்; நம்பியும் செல்வமும் நிற்கக்கண்டேன்; உள்ளே அழைத்து வந்து உட்காரச் செய்தேன்.

'என்னப்பா செய்தி?' என்றேன்.

'ஒன்றுமில்லை! செல்வம் வந்திருந்தான். பேசிக்கொண்டிருந்தோம்! வெளியே போகலாமென்று நினைத்துப் புறப்பட்டோம். சிறிது தூரம் சென்றோம்; மழை வருவதுபோல இருந்தது. திரும்பி விட்டோம். உன்னிடம் வந்து சிறிது நேரம் பேசி விட்டுப் போகலாமென்று வந்தோம்!' என்றான் நம்பி.

'ஓ! சரிதான்! ஏதாவது சாப்பிடுகிறாயா?' என்றேன்.

'ஒன்றும் வேண்டாம்; தண்ணீர் கொடு; ஒரு குறுந்தொகைப் பாடலைக் கூறிப் பொருள் சொல்லு; அது போதும்! என்றான்.

'என்னப்பா அரசியல் வாதிகளுக்குக் குறுந்தொகையில் அவ்வளவு பைத்தியம்!' என்று கூறிக்

கொண்டே, இரு குவளைகளில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்துவிட்டு உட்கார்ந்தேன். நீர் பருகியதும் நம்பி, 'என்னப்பா குறுந்தொகைப் பாட்டு.......?' என்றான் அழுத்தமாக.

'என்ன! உண்மையாகத்தான் கேட்கிறாயா? சரி; சொல்கிறேன்,' என்று ஆரம்பித்தேன்;

* * *

இரு காதலர்—நல்லூழ் அவர்களைக் கூட்டி வைத்தது. ஒருவரோடு ஒருவர் உள்ளம் கலந்து பழகினர். அன்பும் நட்பும், பாலொடு தேன் கலந்தது போல அவர்கட்கு இனித்தன. 'இப்பிறப்பில் மட்டுமன்றி எப்பிறப்பிலும் இவ்வாறே இணைந்து வாழ்வோம்!' என்று அவர்கள் எத்தனையோ முறை அல்லிக் குளத்தருகே நின்று சுடர் மதியம் சாட்சியாகச் சூள் உரைத்துக்கொண்டார்கள். நாளும் அவர்கள் நட்பு வளர்பிறை போல வளர்ந்து கொண்டு வந்தது. ஒரு விநாடி கூடப் பிரியாதிருக்க அவர்கள் உள்ளம் துடித்தது. ஆனால், அவ்வளவு எளிதில் நடக்கிற செயலா அது? அவர்கள் வாழ்க்கை ஒருவர் உள்ளத்தை மற்றவர் கவர்ந்து கொண்ட களவு வாழ்க்கையாகவே இருந்தது. இன்னும் அது கற்பு வாழ்க்கையாக மலர்ந்து மணம் வீசவில்லை. இந்நிலையில் அவர்கட்குப் பிரிந்திருக்கும் ஒவ்வொரு விநாடியும் ஒவ்வோர் ஆண்டாகத் தோன்றித் துன்புறுத்தியதில் வியப்பில்லை அல்லவா? ஆனால், அந்த நல்ல தலைவியின் மனத்துயர் குறையவும், வல்லமை படைத்த அந்தச் சிறந்த தலை

வன் பால் அவள் கொண்ட அன்பு மேலும் மேலும் வளர்ந்து உரம் பெறவும், அறிவும் அன்பும் ஒருங்கே படைத்த ஒரு தோழி எவ்வளவோ துணையாய் இருந்தாள். அவளுடைய துணைமட்டும் இல்லாதிருந் தால், அந்த இரு காதலர்களும் இவ்வளவு தூரம் கலந்து பழகி இன்பம் கண்டிருக்க முடியாது. ஆம்; உண்மையில் அந்தத் தோழி அவ்விருவர்க்கும் உற்றுழி உதவும் உயர்ந்த நட்புடையளாய், காலப் பெரு வெளியில் கல்லும் முள்ளும் இல்லாத—பூவும் மகரந்தப் பொடியுமே சிந்திக் கிடக்கும் நன்னெறி யினைக் காட்ட வல்ல வழி காட்டியாய், சமயம் நேர்ந்த போதெல்லாம் அறிவமிழ்தம் புகட்ட வல்ல ஆசிரியையாய்த் திகழ்ந்தாள். கண்ணைக் காக்கும் இமைபோல அவர்களை — அவர்கள் காதலை— அவளே காத்து வந்தாள். அந்தக் காதலர் இரு வரும் அவள்பால் கொண்டிருந்த அன்பிற்கும், மதிப் பிற்கும் ஓர் எல்லையே இல்லை. நன்றி உணர்ச்சி நிறைந்த அவர்கள் இதயம் எப்போதும் அவள் உதவியை—உள்ளன்பை—எண்ணி எண்ணிப் போற் றிய வண்ணம் இருந்தது.

இவ்வாறு அருள் நெஞ்சம் படைத்த தோழி யின் துணையால் கற்பனைச் சிறகுகள் கட்டிக் கொண்டு இன்ப வானில் பறந்துகொண்டிருந்த அக் காதலர் வாழ்வில், சிறு கலக்கத்திற்குரிய நிலை ஏற்பட்டது.

தலைவி காதலே வடிவமானவள்; தலைவனும் அப்படித்தான்; ஆனால், அவன் தலைவியைப்போல

வீடே உலகமாகக் காண்பவன் அல்லன்; உலகை யே வீடாகக் கருதும் அறிவும், பயிற்சியும் பெற்ற வன்; 'கால்கொண்டு மண்ணில் நடக்கும் வாழ்க்கை திறம்பட அமைந்தாலொழிய, மனங் கொண்டு— விண்ணில்—கற்பனை உலகில்—பறக்கும் வாழ்வு அமையாது; அமைந்தாலும், நிலைக்காது,' என்ப தைப் பரந்த உலகில் பலரோடும் பழகிய அறிவால் —ஆராய்ச்சியால்—அனுபவத்தால்—நன்கு அறிந் தவன். அவன், 'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை,' என்ற வள்ளுவர் மொழியை அறிந்தவன் மட்டுமல்லன்; ஆழ்ந்து உணர்ந்தும் தெளிந்தவன். தான் குடிபுகுந்து கவலையின்றி வாழ விரும்பிய காதல் மாளிகையைப் பலம் பொருந்திய பொருள் வளமாம் அடிப்படையின் மீது அவன் கட்ட விரும் பினன். 'வீட்டிலிருந்து பொருள்களைக் காத்து இல் வாழ்க்கை நடத்துவதெல்லாம் விருந்தினரைப் போற்றி உதவி செய்யும்பொருட்டே ஆகும்,' என்ற வள்ளுவர் வாய்மொழியையே தன் வாழ்வின் குறிக் கோளெனக் கொண்ட அவன், எவ்வாறு பொரு ளின் இன்றியமையாமையை உணராமல் இருக்க முடியும்?

எனவே, பொருள்மீது அவன் நாட்டம் சென் றது. இக்காலம் போன்றதன்று பழங்காலம்.

சங்ககாலத் தமிழ்ச் சமுதாயத்தில் அப்பனுக் குப் பிள்ளையானலும்—அவன் தன் கையால் உழைத்துத் தான் வாழ்வதிலேயே இன்பம் கண் டான். அப்பன் தேடிவைத்த சொத்தாகிலும்,

அதை நம்பி வாழ்க்கையைத் தொடங்குவதும், சோம்பி இருப்பதும் அவன் ஆண்மைக்கே பேரிழுக்காகப் பட்டன. அவன் தன் திருமணத்திற்கான செலவையுங் கூட, தானே பாடுபட்டுத் தேடிச் செய்ய விரும்பினன்.

நம் குறுந்தொகைப் பாடலின் அருமைத் தலைவனும் அத்தகைய மனப்பண்புடையவனே ஆவான். எனவே, எவ்வாறேனும் தன் ஊரை—நாட்டை—விட்டு வெளியிடம் சென்று வாணிபத்தால் பொருள் தேடி வரத் திட்டமிட்டான். ஆனல், தன் திட்டத்தைத் தலைவியிடம் கூறும் துணிவு அவனுக்கில்லை. 'அவள் மிக மென்மையான உணர்வு படைத்தவளாயிற்றே! முன்னுள் இரவு கண்டு பழகியபின் மறுநாள் இரவுவரை கூட மனம் பொறுத்திருக்க முடியாதவளாயிற்றே! இன்னும் ஊரறிய — உலகறிய — திருமணமாகாத நிலையில் நெடுந்தொலைவு சென்று நாம் பொருள் தேடப்போகும் செய்தி அறிந்தால், அவள் எவ்வாறு பொறுப்பாள்! அழுதழுது புலம்புவாளே!' என்று நினைத்தான். வாழ்க்கையைச் செம்மையுற அமைப்பதற்காக—பொருள் தேடி வருவதற்காக — பாலை நிலத்தையும் கடந்து போக அஞ்சாத அவன் நெஞ்சம், தலைவியின் அன்புள்ளத்தையும் மென்மைப் பண்பையும் நினைத்துப் பாகாய் உருகியது. என்றாலும், என் செய்வான்! கடமைகளைப் புறக்கணித்தால் காதல் வாழுமோ? ஒருவாறு மனத்தைத் தேற்றிக்கொண்டான். அப்போதும் நேராகத் தலைவியிடம் சொல்ல அவன்

நெஞ்சம் துணியவில்லை. முதல்நாள் தொட்டு இன்று வரை தலைவியோடு தான் உறவு கொண்டு எல்லையில்லா இன்பம் துய்த்து வருவதற்குப் பேருதவி புரிந்து வரும் சான்றாண்மைமிக்க தோழியை நினைத்தான். 'ஆம்! அவளிடமே சென்று நம் கருத்தைக் கூறவேண்டும். அனுபவம் நிறைந்த அந்த அம்மைதான் நமக்குத் துணைபுரிய வல்லவள்—நம் உள்ளக் கருத்தைத் தக்க சமயம் அறிந்து தலைவியிடம் கூறி அவள் கலங்காது காக்க வல்லவள்' என்று எண்ணினான். தன் சிந்தனையில் இந்த எண்ணம் தோன்றியதும், ஒருவகையான பலம் அவன் உடலில் தோன்றியது; ஒருவகையான மகிழ்ச்சியும் தெளிவும் அவன் முகத்தில் விளங்கின; ஒரு வகையான நம்பிக்கை ஒளி அவன் கண்களில் வீசியது.

அவன் தோழியிடம் சென்றான்; தன் உள்ளக் கருத்தைப் புலப்படுத்தினான்; தன் நிலையையும், கடமையையும், நினைப்பையும் எடுத்துக் கூறினான். 'பொருள் தேடத்தான் போகிறேன்; கடமையை முடித்து விரைவில் வந்துவிடுவேன்; அன்பான தலைவிக்கு எவ்வாறாவது ஆறுதல் கூறி மகிழ்ந்திருக்கச் செய்ய வேண்டும்' எனக்கேட்டுக்கொண்டான். ஆண்மை மிக்க தலைவனது பண்புடைமையையும் கடமை உணர்ச்சியையும் எண்ணி எண்ணித் தனக்குள் பூரிப்படைந்தாள் தோழி. ஆயினும், அவள் அறிவு, நிறைந்த அனுபவத்தில் தோய்ந்து சிறந்து விளங்குவது அன்றோ! எனவே, அவள்

சிந்தனை சுடர்விட்டு எரிய ஆரம்பித்தது. 'திருமணத்தை இடையே வைத்துவிட்டுக் கடமை உணர்ச்சியால் பொருள் ஈட்டுவதற்குப் பிரிந்து செல்லும் தலைவனுக்கு யாது கூறலாம்' என ஆழ்ந்து எண்ணினாள். 'ஆம். தலைவன் நல்லவனே; நன்றி உணர்ச்சிமிக்கவனே. ஆனால், இந்த உலகம் பரந்த உலகம். காலம் மிக ஆற்றல் வாய்ந்தது. மனமோ மிகப் பொல்லாதது என்று கூறுகிறார்கள். எனவே, எதை மறந்தாலும், பிரிந்து செல்லும் தலைவன் எப்போதும் மறக்க முடியாதவாறு அவன் உள்ளத்தில் ஆழ்ந்து சென்று தங்குமாறு ஓர் அறிவுரை கூறவேண்டும்,' என்று துடித்தது அவள் நெஞ்சம்.

அவள் இதயத்துடிப்பு அறிவும் அனுபவமும் நிறைந்த தமிழ்ச் சொற்களாக வடிவம் பெற்றது. 'தலைவரே, யானைக்கன்று தனது பால் நிறைந்த மடியில் பால் குடித்துக்கொண்டு நிற்கும்போதே தினையை உண்ணும் பெண் யானைகளைப் படைத்த பெரிய மலைகளையுடைய நாட்டிற்கு உரியவரே, வறுமையும் துன்பமும் அடைந்து கெட்டுப்போன காலத்தில் பிறரால் பெற்று மகிழ்ந்த உதவியை, அரசு கட்டிலாகிய பெருஞ்சிறப்பை அடைந்த பின் மறந்துவிட்ட அரசனைப்போல, நீவிர் நாங்கள் காட்டிய அன்பு, செய்த நன்றி—எல்லாம் மறந்து விடாமல் எங்கள் அருமைத் தலைவியையே திரும்பி வரும்வரை நினைவில் போற்றி, வந்தபின் திருமணம் புரிந்துகொள்ள வேண்டும்; அவ்வாறு நாங்கள்

செய்த நன்றியைப் போற்றி நீங்கள் திருமணம் செய்துகொண்டால், எங்கள் அருமைத் தலைவியின், மகிழ்ச்சியால் ஆடி ஆரவாரிக்கும் மயிலின் தோகையைப் போன்ற அழகான கூந்தலினைத் தீண்டிப்பெறும் இன்பம்—உரிமை இன்பம் —பேரின்பம்—என்றென்றும் உங்கட்கே உரிய தாகும்!' என்று கூறினள்.

தோழியின் சொற்களைக் கேட்ட தலைவனது உள்ளம், உணர்ச்சிக் கடலாயிற்று. அவன் வாய் ஏதும் பேசும் வல்லமையை இழந்தது. பிறிதொரு மாற்றம் பேச முடியாத வகையில் நன்றி உணர்ச்சி நிறைந்த கண்களோடு எங்கோ பார்த்துக்கொண்டு நின்றான் அப்பெருந்தகை. ஆம்; அவன் உள்ளத்தில் தோழியின் சொற்கள், எய்த அம்பு போலப் பதிந்துவிட்டன. அவன் உள்ளம்—உணர்ச்சி நிறைந்த உள்ளம்—பிரைமோர் பட்ட பால் போல இறுகிக் கெட்டியாகிக் கொண்டிருந்தது. அவன் உணர்ச்சியைவிட உறுதியே அதிகமாகப் படைத்த மனிதனாகிவிட்டான்.

இவ்வாறு ஆணுக்கும் அறிவுரை—அறவுரை—கூறும் ஒரு பெண்ணரசியின் தோற்றத்தை-அவள் அமுத மொழிகளைத் தம் அகக் கண்களால் காண்கிறார் ஒரு புலவர்; தம் அகச் செவிகளால் அவள் பேச்சையும் கேட்கிறார்; தம்மை மறக்கிறார். தாமே தோழி ஆகிறார். அவர் உள்ளத்து உணர்ச்சி பொங்கி ஆற்று வெள்ளம்போல வேகம் கொள்கிறது. தமிழ் வாழும் அவர் திருவாயினின்றும்

சொற்கள் பிறக்கின்றன. அச்சொற்களை அப்படியே ஏட்டில் எழுதுகிறார். ஆ! என்ன அழகான கவிதையாய் அது உருக்கொள்கிறது! 'ஏழே அடிகள்! சுவை நிறைந்த ஒரு குறுந்தொகைப் பாடல்!'

இவ்வாறு என்னை மறந்து நான் பேசினேன். என் நண்பர்களும் தங்களை மறந்து கேட்டிருந்தார்கள். அவர்கள் மனங்கள் சங்க காலத்திற்கே போய் விட்டன. எங்கோ ஒரு தனி இடத்தில் தோழியிடம் நின்று கொண்டு தலைவன் பேசுவதும், அவனுக்கு அவள் அறிவுரை கூறுவதும், அக்காட்சியையும் குரலையும் அப்படியே ஒரு குறுந்தொகைப் பாட்டாக்கித் தலைசிறந்த அவ்வுணர்ச்சிக் கபிலர் பெருமான் சாகா வரம் தருவதும் கனவுலகத்தில் காண்பதுபோலக் கண்டுகொண்டிருந்தனர். 'ஏழே அடிகள்! ஒரு குறுந்தொகைப் பாடல்!' என்றதும், நண்பன் நம்பி, 'எங்கே! அந்தப் பாடலைச் சொல்' என்றான், ஆர்வத்தோடு. 'ஆமாம்! இசையோடும் சொல்!' என்றான் செல்வம், தலையை ஆட்டிக்கொண்டே.

'கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினைபிடி யுண்ணும் பெருங்கல் நாட!
கெட்டிடத் துவந்த உதவி கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றிமறந் தமையாய் ஆயின், மென்சீர்க்
கலிமயிற் கலாவத் தன்னஇவள்
ஒலிமென் கூந்தல் உரியவாம் நினக்கே.'

(குறுந்தொகை, 225)

[பயமுலை மாந்த—பாலுள்ள முலை குடித்து நிற்க, முன்றில்—வீட்டின் முன்னிடம், பிடி—பெண் யானை, பெருங்கல்—பெரியமலை, உவந்த உதவி—பிறராற் பெற்று மகிழ்ந்த உதவியை, நன்றி மறந்து அமையாய் ஆயின்—நன்றி மறவாது திருமணம் புரிந்துகொள்வாயானல், கலிமயில் கலாவத்து அன்ன—ஆரவாரிக்கும் மயிலினது பீலியைப் போன்ற.]

என்னும் பாடலைச் சொன்னேன்—அல்ல—இசையோடு பாடினேன். கேட்டான் நம்பி. 'என்ன அருமையான பாடல் அப்பா அது! கபிலர் பாட்டுத் தான் பாட்டு!' என்றுன் உணர்ச்சியோடு.

'ஆமாம்! அந்தச் சங்க காலப் பெண்மணியின்—தோழியின்—கூர்த்த அறிவைப் பார்த்தீர்களா! தலைவனது நாட்டின் இயற்கையை—யானைகளின் செயலை — எடுத்துரைப்பதுபோலத் தன் உள்ளத்தைக் குறிப்பாகப் புலப்படுத்தும் அவள் நாகரிகத்தைப் பார்த்தீர்களா!' என்றேன். விளக்கத்தை விரும்புபவர்போல, நம்பியும் செல்வமும் என்னைப் பார்த்தனர்.

'அந்தப் பெண் யானைகள், தங்கள் கன்றுகள் மடியில் பால் குடித்துக்கொண் டிருக்கும்போதே, தினையைத் தின்கின்றன — இரண்டு காரணங்களால்; அவற்றுள் ஒன்று தங்கள் பசியைப் போக்கிக் கொள்வது; மற்றொன்று, தங்கள் கன்றுகளுக்குப் பால் தருவது. மேலும் மேலும் பால் பெருகவேண்டும் அல்லவா? அதுபோலப் பிரிந்து செல்லும் தலைவன் வரவை ஆவலோடு அவர்கள்

எதிர்நோக்கி இருக்கும்போது, இல்லற வாழ்வை வளமாக நடத்தவும், அருமைத் தலைவியை மணந்து கொள்ளவும் ஒருங்கே துணைபுரியும் பொருளைத் தலைவன் தேடி வர வேண்டும் என்பது குறிப்பு' என்றேன்.

'ஓ! நுட்பமான அறிவுடையவள்தான் அத் தோழி!' என்றான் நம்பி.

'அது போகட்டும். நீங்கள் எல்லாம் அரசியல் வாதிகள் ஆயிற்றே. இந்தப் பாட்டில் அரசியல் தொடர்போடு விளங்கும் ஓர் உண்மை—உவமை—உங்கட்குப் பிடிக்குமே!' என்றேன்.

'நன்றி மறந்த மன்னன் போல' என்று கூறுகிறாளே அதுதானே!' என்றான் நம்பி.

'ஆமாம். அரசியல், வாழ்க்கைக்குப் பயன் படக்கூடிய ஒரு நெறிதான்; ஆனால், எப்படியோ அதில் மாசும் தூசும் படிந்துவிடுகின்றன. தமிழ் மக்களின் பொற்காலம் என்று போற்றுகிறார்கள் சங்க காலத்தை. ஆனால், அக்காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்கட்குக்கூட அரசியல் துறையில் இத்தகைய நன்றிகெட்ட பண்பினைச் சிற்சில சமயங்களிலேனும் பார்க்கும் வருந்தத் தக்க வாய்ப்பு இருந்தது போலும்!' என்றேன்.

'ஆமாம்! அதற்கு என்ன செய்யலாம்?' என்றான் நம்பி, சற்றுச் சோர்வோடு.

'என்ன செய்ய முடியும்? எந்த ஒன்றிலும் முழு நன்மையும் இருப்பதில்லை; முழுத் தீமையும் அமைவதில்லை. அரசியலில்—அதுவும் கட்சி அரசியலில்—பெரும்பாலும் நன்மையைவிடத் தீமையே நிறைந்து காணப்படுகிறது. மேலும், போராட்டக் காலத்தில் இருப்பதைவிட, நிருவாகம் செலுத்தும் காலத்து அரசியலில் அறத்திற்கு மாறான செயல்கள் மலிந்து விடுகின்றன. காந்தி அடிகளைப் போன்ற சான்றோர்களின் கண்பார்வையும் கையசைப்பும் இருக்கும்வரைதான், அரசியலில் அறமணம் கமழ்ந்தது. அப்புறம் மணம் ஏது, ஒளி ஏது! கிரேக்கப் பெருஞானியார் ஒருவர் கனவு கண்டதுபோல, உலகினர் எல்லோரும் அறிவுடையோராகி, ஞானிகளால் தேசம் ஆளப்படும் நிலைமை வந்தால்தான் இக்குறை தீரும்,' என்றேன்.

'ஆமாம்! உண்மைதான்!' என்றான் நம்பி.

அதைக் கேட்ட செல்வம், 'உண்மைதான்; ஆனால், நான் சொன்னால் நீ நம்புவாயா?' என்றான் வெற்றிச் சிரிப்போடு.

'அடேயப்பா! நீ எவ்வளவு பெரிய தீர்க்கதரிசி!' என்று புன்முறுவலோடு கூறிக்கொண்டே, 'எங்கே இன்னும் ஒருமுறை அந்தப் பாட்டைக் கூறு; கேட்டுவிட்டுப் போகிறேன்,' என்றான் நம்பி. நானும் மகிழ்ச்சியோடு கபிலர் பாடிய அந்த அருமையான பாட்டை இசையோடு பாடினேன். கேட்டிருந்த நம்பி, 'என்ன அருமையான பாட்டு!

எவ்வளவு ஆழ்ந்த உணர்ச்சி! எவ்வளவு அழகான தமிழ்!' என்றான் உணர்ச்சியோடு.

'ஆமாம்! உணர்ச்சி—தமிழ்—எல்லாம் இருக்கட்டும். எவ்வளவு பொருத்தமான உவமை, பார்த்தாயா? 'அரசு கட்டில் ஏறிய மன்னன் நல்லோரை—அவர் செய்த நன்றியை—மறந்தாற்போல' — எவ்வளவு அழகான உவமை!'

'ஆம்! அறிவிற்கும், உணர்விற்கும், கருத்திற்கும், காலத்திற்கும் பொருத்தமான உவமை!' என்று கூறி நகைத்தான் செல்வம்.

இருவர் முகத்தையும் மாறி மாறிப் பார்த்திருந்த நான், ஒன்றும் தெரியாதவன் போல 'என்ன' பழந்தமிழ்ப் பாட்டில் உங்கள் இன்றைய அனுபவம் விளங்குகிறதோ?' என்றேன். இருவரும் சிரித்துக்கொண்டே, எதிர் வீட்டை நோக்கி மெல்ல நகர்ந்தனர்.

# 8. புலமையும் கருணையும்

புகழுடல் பெற்ற நலங்கிள்ளிக்குப்பின், பொன்னி பாயும் புனல் நாட்டின் ஆட்சி உரிமை, கிள்ளி வளவன் என்பானுக்கு உரியதாயிற்று. கிள்ளிவளவன் சிறந்த வீரன்; கலை உள்ளமும் கவிதை நெஞ்சமும் படைத்தவன்; பாணர் குடியைப் பாதுகாக்கும் கருணை இதயம் கொண்டவன். இத்தகைய சிறந்தோனாய் விளங்கிய இவனையும், இவன் காலத்தின் சூழ்நிலை விடவில்லை. அதன் விளைவாகக் கற்பனைக்கும் எட்டாத கொடியதொரு செயலைப்புரிய முற்பட்டான். ஆத்திரம் அறிவுடையார் கண்களையே ஒரோவழி ஒளியற்றதாக்கிவிடும்பொழுது, அரசன் கண்கள் எம்மாத்திரம்?

நலங்கிள்ளியின் காலத்தில் கோவலூரைத் தலைநகராகக் கொண்டு மலையமான் திருமுடிக்காரி என்பான் ஆட்சி புரிந்து வந்தான். கபிலர், மாறோக்கத்து நப்பசலையார் போன்ற சான்றோர்கள் பாடும் புகழ் பெற்றோனாய் அவன் விளங்கினான். மூவேந்தரும் போற்றும் மொய்ம்புடையோனாகவும் அவன் திகழ்ந்தான். வீரத்திலும் புகழிலும் மேம்பட்டு விளங்கிய அவ்வேந்தன், தன்பால் திரண்டுவந்து குவிந்த செல்வங்களையெல்லாம் முத்தமிழ் வளர்க்கும் பாணர்க்கும் புலவர்க்கும் கூத்தர்க்கும் விறலியர்க்கும் வரையாது ஈந்து, வான் புகழ்பெற்று விளங்

கினன். அதனாலேயே அவனைத் 'தேர்வண் மலையன்' என்று சிறப்புப் பெயரிட்டுச் செந்தமிழ்நாடு முழுதும் மக்கள் போற்றினார்கள். இத்தகுபுகழ் படைத்திருந்த மலையமானுக்கும், கிள்ளிவளவனுக்கும் எக்காரணத்தாலோ கடும்பகை மூண்டிருந்தது. மலையமான் அழிவைத் தன் வாழ்வாகக் கருதும் அளவிற்கு அவன் பகைமனம் வளர்ந்திருந்தது. மலையனும் இறந்து போனான். இச்செய்தி அறிந்தான் கிள்ளிவளவன்; 'இனி இவன் பகை ஒழிந்தது!' என ஆறுதல் கொண்டான். ஆனால், மலையமான் திருமுடிக்காரிக்கு மழலை மிழற்றும் இரு குழந்தைச் செல்வங்கள் இருப்பது அவன் கண்களை உறுத்திற்று. தந்தையை இழந்த அக்குழந்தைகள் சோழனிடம் அகப்பட்டுக்கொண்டன. தன்பால் சிக்கிய குழந்தைகளின் குளிர்முகம் கண்டும் சோழன் உள்ளம் கனியவில்லை. பாலொழுகும் வாய்க்குழந்தைகள் என்றும் பாராது, அச்செல்வங்களின் தலைகளை மன்றத்தின் முன் கொல்களிற்றின் துணைகொண்டு உருட்டிவிடத் துணிந்தது, இருள் சூழ்ந்த அவன் இகல் நெஞ்சம். அமைச்சரும், சூழ்ச்சித் தலைவரும் அச்சத்தாலோ—இரும்பு நெஞ்சத்தாலோ—வாயிருந்தும் ஊமையராய், கண்ணிருந்தும் குருடராய் வாளாவிருந்தனர். ஊரெல்லாம் இவ்வாறு வாயடைத்து உணர்ச்சியற்றுக் கிடந்த நேரத்தில், ஒரு குரல்—தமிழ்க்குரல்—முழங்கியது. காவிரிநாடு கேட்டுக் கேட்டுப் பழகிய அத்தமிழ்க்குரல்—அறம் மங்கி மறம் ஓங்கும் வேளையில் எல்லாம், தீமைபோக்கி நன்மை பெருக்கி, வெம்மை நீக்கித் தண்மை கூட்டி

அருள் செய்யும் சான்றாண்மையின் குரல்—சங்கொலிபோல முழங்கியது. தன்னலப் பேயனாய் மாறி இருந்த தமிழ் வேந்தன் நெஞ்சில் ஊடுருவிப் பாய்ந்தது, கணையிலும் கூரிய அச் சான்றாண்மைக் குரல்.

ஊர்ப் பொதுவிடத்தில் மன்றத்தின் முன்னே மதிபோன்ற முகம் படைத்த இரு குழந்தைகள்—பிள்ளைக் கனியமுதங்கள்—பேசும் பொற்சித்திரங்கள்—இருப்பதைக் கண்டார் கோவூர் கிழார்; தம்மைச் சுற்றி நிற்கும் வெருவத்தக்க தோற்றமுடைய வாள் வீரரைக் கண்டு கலங்கி வெருவி அழுதுகொண்டிருந்த அம் மழலைச் செல்வங்கள், தம்மைக் கொல்ல வரும் களிற்றின் பேருருவினைக் கண்டதும், தமக்கு வரும் துன்பம் இத்தகையது என்று சிறிதும் அறியாது, அழுகையை மறந்திருக்கும் விந்தைச் செயலை-கல் நெஞ்சையும் கலக்கும் துன்பக் காட்சியைக் கண்டார். கூடியிருக்கும் மன்றினை மருண்டு மருண்டு காணும் அப் பால்வாய்க் குழந்தைகளின் பார்வையை உற்று உற்று நோக்கினார் புலவர்; வஞ்சனையற்ற அச்செல்வங்களின் நெஞ்சப் பாங்கை நினைந்து நெய்போல இதயம் உருகினார்; 'வான்மதி போன்ற இச்செல்வங்களின் உயிரையா களிறுகளின் கால் கொண்டு சிதைப்பது! இவ்வாறு எண்ணியவனும் வேந்தனே! இவன் கொற்றமும் ஒரு கொற்றமோ! இவன் பிறந்த குடியும் பெருமைமிக்க சோழர் குடிதானே! அந்தோ! கொடிது! கொடிது!' என்று அலமந்தார்; உயிர் துடித்தார்; உள்ளம் குமுறினார். பொங்கி வந்த ஆத்திரத்தை எல்லாம்

பைந்தமிழ்ச் சொற்களிலே பக்குவமாக நிரப்பிக் காவலனை நோக்கித் தம் கருத்துரைகளைக் கழறினார்:

'மன்னா, நீயோ, புறவின் அல்லல் அன்றியும், பிறவும் உற்ற துன்பம் பலவற்றையும் தீர்த்த சோழனுடைய (சிபியின்) மரபின் தோன்றலாய் உள்ளாய். இக்குழந்தைகளோ, அறிவால் உழுதுண்ணும் கற்றோரது வறுமையைக் கண்டு அஞ்சித் தம்முடைய பொருளைப் பகுத்துண்ணும் குளிர்ந்த நிழலை உடையோராய் வாழ்பவர்களாகிய அருளாளர்கள் மரபில் வந்தவர்கள். இவர்கள் நிலையைச் சற்றே நினைத்துப்பார்! கொல்ல வரும் களிற்றைக் கண்டு 'நம்மைக் கொல்லவே அது வருகிறது,' எனவும் அறியாது, அழுகையையும் மறந்து, மன்றத்தை மருண்டு மருண்டு நோக்கும் அக்குழந்தைகளின் மனத்தை எண்ணிப்பார்! அக்கள்ளமற்ற குழந்தைகள் உள்ளத்தே புதுமையானதோர் உணர்வு உள்ளதை உன்னிப்பார்! யான் கூறுவன இவையே. கேட்டனையோ? கேட்டனை ஆயின், இனி நீ விரும்பியவாறு செய்க'.

நீயே, புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை;
இவரே, புலனுழு துண்மார் புன்கண் அஞ்சித்
தமதுபகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்:
களிறுகண் டழூஉம் அழாஅல் மறந்த
புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி
விருந்திற் புன்கணோ வுடையார்
கேட்டனை யாயின் நீ வேட்டது செய்ம்மே!' (புறம். 46)

[புறவின் அல்லல்—புறவுற்ற துன்பம், இடுக்கண் —துன்பம், புலன்—அறிவு, அழாஅல்—அழுகை, புன்றலைச் சிறார்—சிறிய தலையையுடைய சிறு பிள்ளைகள், விருந்திற்புன்கண்-புதியதொரு வருத்தம்.]

இவ்வாறு கருணை ஊற்ருய் விளங்கிய அவன் குடிப்பெருமையை—மாவண் தோன்றலான மலையமான் புலவரின் புன்கண் தீர்த்த பெரியோனென்ற மாட்சியை—கரவற்ற நெஞ்சுடைய கள்ளமற்ற குழந்தைகளின் கலங்கிய பார்வையையெல்லாம் கோவேந்தன் நினைந்து நினைந்து உருகுமாறு—அவன் கொண்டிருந்த தன்னலப் பேயுணர்வு தருக்கிழந்து ஒழியுமாறு—சான்ருேராகிய கோவூர் கிழார் எடுத்துச் சாற்றினர்; கடலலைகள்போலத் தம் நெஞ்சத்தில் பொங்கிவந்த ஆத்திரத்தை எல்லாம் அடக்கிக்கொண்டு நயனும் பயனும் அமையப் பேசினர். பாகாய்த் தம் உள்ளம் உருகிய உருக்கமெல்லாம் பார்வேந்தன் கொடு மனத்திலும் பாயுமாறு—பாய்ந்து பயன் அளிக்குமாறு—நல்ல தமிழின் வல்லமையெல்லாம் விளங்க உரைத்தார்; அம்மட்டோ!

'ஒழுக்கம் முடையார்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல்.'

என்று வான்மறை தந்த தமிழ்ப்பெரியார் உணர்ந்து கூறிய பொன்மொழிக்கு இலக்கியமாய் விளங்கும்—அறமணம் கமழும்—சொற்களையே ஆத்திரமூட்டும் நேரத்திலும் சொன்னர்; கருணைக் கடவுளின் அழகு கோயில்களாய் விளங்கும் அக்

குழந்தைகளைக் கொல்லும் காட்சியை நினைக்கவும், சொல்லவும் கூசியவராய், 'கூறவேண்டுவதெல்லாம் கூறிவிட்டேன்; இனி நீ விரும்பியது (வேட்டது) செய்க!' எனக் கூறிய அவ்வருட்சான்றோரின் நெஞ்சப் பான்மையை என்னென்பது! 'ஈன்ற குழவி எடுத்து வளர்க்குறூஉம்' தாயினும் சிறந்த சான்றோராய் அன்றோ கோவூர் கிழாரை, அவர் சொல்லும் செயலும் வாழ்வும் வழியும் நமக்கு விளக்கி வைக்கின்றன! புலவர் பெருமானுருடைய பொன் மொழிகள், புவியாள் வேந்தன் நெஞ்சில் குடிகொண்டிருந்த தன்னலப்பேயை ஓட்டின. பகைஎனும் நச்சுணர்வு தலைக்கேறி அறிவு கெட்டிருந்த அரசன் திருந்தினன்; குழந்தைகளும் உய்ந்தன; சோழர் குடியின் புகழும் உய்ந்தது; தமிழ் மன்னனது தலை நிமிர்ந்த பெருமையும் தரைமட்டம் ஆகாது தப்பியது. தமிழ்ச் சான்றோரின் அருள் நெஞ்சமும்—கருணை மொழிகளும்—திருத்தொண்டும், மன்பதையின் உள்ளத்தை—உயிரை—உருக்கின. ஆம்! தமிழ் வென்றது! அவ்வெற்றியின் பயனைச் சங்ககாலத் தமிழ் மக்களின் உள்ளக் கோயிலில் எல்லா உயிரும் கைகூப்பித் தொழத்தக்க கண் கண்ட தமிழ்த்தெய்வமானர் கோவூர் கிழார்.



# 9. தமிழ் நாடகக்கலை

உலக மொழிகள் பலவற்றிற்கும் இல்லாத எத்தனையோ சிறப்புக்களைக் கொண்டது நம் இன்பத் தமிழ். அச்சிறப்புக்களுள் எல்லாம் தலைமை சான்று விளங்குவது இயல், இசை, நாடகம் என்ற மூன்று பெரும்பிரிவுகளைக் கொண்டதாய் விளங்குதலே ஆகும். அதனாலன்றோ தித்திக்கும் தமிழை, 'முத்தமிழ்' என்றே நம் முன்னோர் போற்றிப் புகழ்ந்து, நாளும் வளர்த்து வந்தனர்! 'தெரிமாண் மும்மைத் தமிழ்' என்று பழந் தமிழ் இலக்கியமாகிய பரிபாடல் போற்றும் இம் முத்தமிழில் ஒன்றாகிய 'நாடகத் தமிழ்' தோன்றிய காலம் இதுவென அறுதியிட்டு உரைப்பதும் அரிதாய் உள்ளது. 'தொன்று நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்திடும் சூழ்கலை வாணர்களாலும்' தொடக்கம் காண முடியாத அளவிற்குத் தொன்மை வாய்ந்ததாய்த் திகழும் நாடகத் தமிழ் பற்றிய பழைமையான குறிப்புக்கள் போதிய அளவிற்கு இன்று நமக்குக் கிடைக்கவில்லை. இயல், இசை, நாடகத் தமிழின் அழியாப் பெருங்கருவூலமாய் விளங்கும் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய பெரியாராகிய அடியார்க்கு நல்லார், 'இனி இசைத் தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகும், பிறவும், தேவ விருடி நாரதன் செய்த பஞ்ச பாரதீயம் முதலாயுள்ள தொன்னூல்களும் இறந்தன. நாடகத் தமிழ் நூலாகிய பரதம்,

அகத்தியம் முதலாயுள்ள தொன்னூல்களும் இறந்தன; பின்னும் முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம் என்பனவற்றுள் ஒரு சார்ச் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணையல்லது, முதல் நடு இறுதி காணாமையின், அவையும் இறந்தன போலும்!' என்று கூறியுள்ளார். இந்நூல்களுள் சிலவற்றின் பெயர்களை உற்று நோக்கும் போது, அழிந்து போன இவற்றினும் சிறந்தனவும் பழையனவுமாகிய தனித் தமிழ் நாடக நூல்கள் இருந்து மறைந்திருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர்கள் எண்ண இடம் ஏற்படுகிறது.

.... ... ....

பழைமை மிக்க தமிழ் நாடகக் கலை பற்றிய வரலாற்றை நாம் தெரிந்து கொள்வதற்குரிய பெருஞ் சாதனமாய் இன்று விளங்குவது இளங்கோ அடிகள் செய்தருளிய சிலப்பதிகாரமே ஆகும். தமிழ் நாடகக் கலை, முறையாக வளர்ந்த வரலாற்றை அறிவதற்குரிய நல்வாய்ப்பை நாம் இழந்துவிட்டோம். எனினும், நாடகக்கலை தமிழகத்தில் இடையீடின்றி வளர்ச்சிபெற்றே வந்தது என்பதை நிறுவுதற்கான சான்றுகள் பல, இலக்கிய நூல்களிலும், இடைக் காலச் சோழர்கள் கல்வெட்டுக்கள் வாயிலாக நாடகக் கலையின் வரலாற்றை ஆராய்ந்த காலஞ் சென்ற பேராசிரியர் ச. க. கோவிந்தசாமிப் பிள்ளை போன்ற நற்றமிழ் அறிஞர்கள் தெரிவித்துள்ள குறிப்புக்களிலும் சுவையும் பயனும் நிறைந்தனவாகக் காணப்படுகின்றன. அவர்தம் ஆராய்ச்சியின்படி

இறைவன் உறையும் திருக்கோவில்களில் நாடகச் சாலை மண்டபங்களும், மன்னர்கள் வாழும் அரண் மனைகளில் கோயில் நாடக சாலைகளும், ஊர்ப்பொது இடங்களில் அரங்குகளும் காட்சி அளித்தன என் பது புலனாகின்றது.

நமக்குக் கிடைத்துள்ள பழந்தமிழ் இலக்கண நூல்களுள் முழுமையும் விழுப்பமும் வாய்ந்த தலை சிறந்த நூல் தொல்காப்பியமே. அந்நூலுள் அகத் திணைக்குரிய ஒரு சூத்திரம், 'நாடக வழக்கினும் உலக இயல் வழக்கினும்' என்றே தொடங்குகிறது. இதி னின்றும் தொகை நூல்கட்கும் முற்பட்ட தொல் காப்பியர் காலத்திலேயே நாடகத் தமிழ் ஏற்றம் பெற்றிருந்தமை எவர்க்கும் புலனாகும். தமிழ்மறை யாகிய திருக்குறள், 'செல்வ நிலையாமை'யைக் கூற வந்த இடத்தில், 'கூத்தாட்டு அவைக் குழாத்'தைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

'பாடல் ஓர்ந்தும் நாடகம் நயந்தும்
வெண்ணிலவின் பயன்துய்த்துங்
கண்அடைஇய கடைக் கங்குல்'

என்ற பட்டினப்பாலை அடிகள், பழந்தமிழ் நாட்டு மக் களின் சமூக வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகின் றன. திருவிழாக் காலங்களில் இரவின் முற்பகுதி யில் நாடகமாடிவிட்டு, நள்ளிரவில் கண் உறங்கும் கலைஞர்களைப்பற்றிய சொல்லோவியத்தை,

'விழவின் ஆடும் வயிரியர் மடியப்
பாடிட் கொண்ட கங்குல்.'

என்ற மதுரைக்காஞ்சி அடிகளில் காணலாகும். நாடக மகளிர் ஆடுகளம்பற்றிப் பெரும்பாணாற்றுப்படை பேசுகின்றது. இக்குறிப்புக்களைப் போன்று வேறு பல செய்திகளையும் தன்னகத்தே கொண்டுள்ள சங்கத் தமிழ் இலக்கியம், கிறிஸ்து பிறந்த சில நூற்றாண்டுகட்கு முன்னும் பின்னும் தமிழ் நாடகக்கலை நம் தாயகத்தில் பெற்றிருந்த வளர்ச்சியினையும் வாழ்வினையும் விளக்கிக் காட்டுகின்றது. பல பழந்தமிழ் நாடக நூல்கள் அடியார்க்கு நல்லார் காலத்திலேயே இறந்துபட்டன என்ற உண்மையை அவர் வாக்காலேயே சற்று முன் கண்டோம். அடியார்க்கு நல்லார் காலத்தில் வாழ்வு பெற்றிருந்ததாகத் தெரிகின்ற பரத சேனுபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல் என்ற இரு பெரு நூல்களும் அவருக்குப் பின் அழிந்து போயின. பரிதிமாற்கலைஞர் தம் நாடக இயலின் முகவுரையில் கூறியாங்கு, கூத்த நூல், நூல் என்னும் நாடகத் தமிழ் நூல்களும் காலவெள்ளத்திற்கு இரையாயின.

பழந்தமிழ் நாட்டில் கதை தழுவிவரும் இசையை நாடகமென்றும், பிறவற்றையெல்லாம் கூத்து என்றுமே குறிப்பிட்டனர் என்பது தெரிகிறது. மேலே சுட்டிக்காட்டிய நூல்கள்பலவும் நாடகம்பற்றிய இலக்கண நூல்களே.

சிலப்பதிகாரத்தில், தமிழ் நாடகக் கலை பற்றிய பல்வேறு செய்திகள் இடம் பெற்றுள்ளன. நெஞ்சையள்ளும் அக்காவியத்தில் மிகச் சிறந்ததொரு பாத்திரமாகக் காட்சி அளிக்கும் மாதவி நல்

லாளை, 'நாடகமேத்தும் நாடகக் கணிகை' என்றே இளங்கோ அடிகள் குறிப்பிடுகின்றார். பழந்தமிழ் நாட்டில் அகக்கூத்து, புறக்கூத்து, சாந்திக்கூத்து, மெய்க்கூத்து, அவிநயக்கூத்து, நாடகக்கூத்து, விநோதக்கூத்து, குரவைக்கூத்து, கழாய்க்கூத்து, குடக்கூத்து முதலிய பல்வகைக் கூத்துக்கள் சிறப்புற்றிருந்தன என்பதும், அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை ஆகிய 'பதிநோராடல்கள்' பொலிவுற்றிருந்தன என்பதும் சங்க நூல்களாலும், இயல் இசை நாடகக் காப்பியமாகிய சிலப்பதிகாரம் முதலியவற்றாலும், அவற்றின் உரை நூல்களாலும் இனிது விளங்குகின்றன.

இசையும் அபிநயமும் பொருந்திய கூத்தை ஆடவும், நாடகங்களை நடிக்கவும் பழந்தமிழ் நாட்டில் சிறந்த நாடக மேடைகள் விளங்கின. நாடக மேடையை நலமுற அமைப்பதையே ஒரு தனிக் கலையாகத் தமிழர் போற்றினர் என்பது மிகையாகாது. சிற்ப நூல் வல்லார் வகுத்த விதிகளினின்றும் வழுவாத வகையில் அந்நாளில் நாடக மேடைகள் நிறுவப்பட்டன. பழந்தமிழ்ப் பாட்டொன்று வாயிலாகத் தெய்வத்தானம், அறவோர் பள்ளி, போர் புரியும் இடம், சேரி, யானைக் கூடமும் குதிரைச்சாலையும் இருக்குமிடம், பாம்புப் புற்று முதலிய இடங்களில் நாடகச் சாலைகளை அமைக்கமாட்டார்கள் என்பது தெரிகின்றது. மேலும், ஊரின் நடுவே தேரோடும் வீதிகளின் எதிர்முகமாக நாடக

அரங்குகள் நிறுவப்பெறும் என்பதும், ஏழுகோல் அகலமும், எட்டுக்கோல் நீளமும், ஒருகோல் குறட்டு உயரமும், குறட்டிற்குமேல் நான்கு கோல் உயரமும் உடைய ஆடரங்குகளைச் சமைப்பார்கள் என்பதும், அவ்வரங்குகளிலே அமைக்கப்பெற்ற விளக்குக்களால் ஏற்படும் தூண்களின் நிழல் அவைக்களத்திலோ, அரங்கத்திலோ விழாதவாறு திறம்பெற அமைக்கப்பெறும் என்பதும் சிலப்பதிகாரம் என்ற செந்தமிழ்க் காவியத்தால் விளங்குகின்றன. ஆடரங்குகளை அளந்து அமைப்பதற்குப் புண்ணிய மலைச்சாரலில் ஓங்கி வளர்ந்த மூங்கிலில் கணுவுக்குக் கணு ஒரு சாண் இடைவெளி உள்ளதாய், உத்தமன் ஒருவன் கைப் பெருவிரல் இருபத்து நான்கு கொண்டதாய் உள்ளதொரு கோலைப் பயன்படுத்துவார்கள் என்பது தெரிகின்றது.

பழந்தமிழ் நாட்டில் அரண்மனையைச் சார்ந்த நாடக அரங்கிற்குக் 'கூத்தப் பள்ளி' எனவும், கோயிலிலுள்ள கூத்தாடுமிடத்திற்குக் 'கூத்தம்பலம்' எனவும் பெயர் வழங்கினவெனக் கூறுவர். நாடகமாடும் தலைமையிடம் 'அரங்கு' என்றும், 'நாயகப்பத்தி' என்றும் வழங்கப்பட்டது. நாடகம் காண்போர் வீற்றிருக்கும் இடம் 'அவை' எனக் குறிப்பிடப்பட்டது. நாடகம் பார்க்கும் அவையில் மன்னரும் அவரைச் சார்ந்தோரும் இருத்தற்கு அரங்கின் எதிரே தனியிடம் அமைந்திருந்தது. கூத்தாடுபவர்கள் அவையோர் கண்ணுக்குப் புலனாகா வகையில் அரங்கிற்குள் செல்லுவதற்கான

கரந்துசெல் வழிகள் இருந்தன. ஆடல்வல்லார் தங்கி வேடம் முதலியன புனைதற்குரிய தனி அறைகளும் இருந்தன எனக் கூறுவர் ஆராய்ச்சியாளர். பழந்தமிழ் நாடக மேடையில் மூவகையான திரைகள் இருந்தனவாம். ஷேக்ஸ்பியர் காலத்தில் மேலை நாடுகளிலும் இல்லாத இப் புதுமை, சிலப்பதிகார காலத்தில் இருந்ததெனத் தோன்றுகிறது. அம் மூவகைத் திரைகளையும் ஒருமுக எழினி, பொருமுக எழினி, கரந்துவரல் எழினி என்று சிலப்பதிகாரம் சுட்டுகின்றது. ஒரு முக எழினி என்பது ஒரு பக்கம் தள்ளக் கூடிய திரை; பொருமுக எழினி என்பது இடையில் இரண்டாகப் பிரிக்கப்பட்டு இரு பக்கங்களிலிருந்தும் தள்ளக்கூடியதாகும்; கரந்துவரல் எழினி என்பதுமேலே இருந்து கீழே வரவும் கீழே இருந்து மேலே செல்லவும் கூடிய திரை. அடியார்க்கு நல்லார் உரையில், 'ஆகாயசாரிகளாய்த் தோன்றுவார்க்கு எனக்கொள்க,' என்ற மேற்கட்டுத் திரை பற்றிய குறிப்பொன்று உள்ளது. இதைக்கொண்டு பழந்தமிழ் நாட்களில் ஆகாயசாரிகட்கும் இடம் இருந்தது என்பது விளங்குகிறது. வேண்டிய போது சுருக்கிக்கொள்ளும் திரை ஒன்றைச் 'சுருக்கும் சஞ்சிகை' என்று பெருங்கதை குறிப்பிடுகின்றது. அச் சிறந்தநூல் வாயிலாகப் பழந்தமிழ் நாடக மேடையில் கதைக்கு ஏற்பப் பின்னணிக் காட்சியாக,

'கொடியும் மலரும் கொள்வது எழுதிப்
பிடியுங் களிறும் பிறவும் இன்னவை
வடிமாண் சோலையொடு வகைபெற வரைந்து'

வைக்கப்பெற்ற வண்ணத்திரைச் சீலைகள் இருந்தன என்பதும் புலனுகின்றது. நாடகமேடையை நண்ணிக் கூத்தாடும் முறை முதலியவைபற்றி விரிவான விளக்கங்களைச் சிலப்பதிகார அரங்கேற்று காதையிலும், அதன் உரையிலும் காணலாம். பழங்காலத்தில் கூத்தர்கள் கூத்தாடும் காலத்தில் செல்வராய் உள்ள பிறரிடமிருந்து வாங்கப்பெற்ற அணிகளைப் புனைவர் என்ற செய்தி, 'ஆடுங்கூத்தர் அணியேபோல வேற்ருேர் அணியொடு வந்தீரோ' எனவரும் மணிமேகலை அடிகளால் விளங்குகிறது. சாத்தனுர் செய்த இப்பெருங் காப்பியம் வேருேர் இடத்தில், 'நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்' என்று குறிப்பிடுகிறது. இக்குறிப்பு வாயிலாக ஏறத்தாழக் கி. பி. மூன்ரும் நூற்ருண்டுவரை நாடகத் தமிழ் தன் தாயகத்தில் பெற்றிருந்த சிறப்பின் தன்மையை ஒருவாறு உணரலாம். இத்தகு பெருமை வாய்ந்திருந்த நாடகத் தமிழ், இயல் இசை போலவே சிலப்பதிகார மணிமேகலை காலத்திற்குப்பின் தன் வளர்ச்சி குன்றி மங்கலாயிற்று என்றே கூறத் தோன்றுகிறது. ஆயினும், தமிழ் நாட்டில் நாடகக் கலை முற்றிலும் அழிந்து போகவில்லை. 'நகவே தகும் எம்பிரான் என்னை நீ செய்த நாடகமே,' 'நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து' என்பன போன்றுவரும் பற்பல திருமுறை மொழிகளால், தேவார திருவாசக காலத்திலும் தமிழ் நாடகக் கலை ஒருவாறு உயிர்பெற்று விளங்கியமை புலனுகின்றது.

பண்டுதொட்டுத் தமிழகத்தில் தமிழ் நாடகக் கலை சிறப்புற்றிருந்த செய்தியை இதுவரை கண்ட நமக்கு, கிரேக்க மொழியிலும், வடமொழியிலும் உள்ளதுபோலத் தமிழ் நாடக இலக்கியம் ஒன்று கூடக் கிடைக்காமல் இருப்பது பெருவியப்பையே அளிக்கும். இதற்குரிய தெளிவான காரணம் என்ன வென்பது இன்னும் புலனாகவில்லை. ஆயினும், இப் புதிர்பற்றி நாடகப் பேராசிரியராகிய பம்மல் சம்பந்த முதலியாரவர்கள் 'நாடகத் தமிழ்' என்னும் தம் அரிய நூலில்,

> 'தமிழ் நாடெங்கும் அநேக நூற்றாண்டுகளாக வேறு வேறு அரசர்கள் மாறி வந்ததனாலும், யுத்தங் களினால் வந்த குழப்பங்களினாலும் தமிழ்ப்பாஷையை ஆதரிப்பார் குன்றிக்கொண்டே வந்தனர்; இசை நூல்களும் நாடகநூல்களும் இல்வாழ்க்கைக்கு இன்றி யமையாதன அல்ல......ஆகவே, அநேக நூற்றாண்டு களாக மேற்சொல்லிய காரணங்களினால் இசை நூல் களையும் நாடக நூல்களையும் கற்பார் மிகச் சிறிதா கவே இருந்திருக்க வேண்டும். அவைகளைப் பாது காக்கவேண்டிப் பழைய பிரதிகளினின்றும் புதுப் பிரதிகளுக்குப் பெயர்த்தெழுதும் கஷ்டத்தை மேற் கொள்வார் அதனினும் சிறிதாக இருக்க வேண்டும் என்பதற்குச் சிறிதும் சந்தேகமில்லை.'

எனக் கூறும் காரணம் ஒருவாறு நமக்குச் சமாதா னம் அளிப்பதாய் உள்ளது.

சங்க காலத்தில் மிகு உச்சநிலையை அடைந்து சிறப்புற்றிருக்கக் கூடும் என்று நம்மால் தக்க கார ணங்களோடு நம்பப்படும் தமிழ் நாடகக்கலை மீண்டும்

புதுவாழ்வு பெற்றது, பிற்காலச் சோழர்கள் காலத்திலேதான். தஞ்சைப் பெரிய கோயிலின் வடக்குப் பிராகாரத்திலுள்ள சோழப் பெருவேந்தனாகிய ராஜேந்திரன் காலத்துக் கல்வெட்டொன்று, அவன் காலத்தில் ஆடப்பட்ட ராஜராஜேஸ்வர நாடகம் பற்றியும், நாடகத்தை ஆடிய, 'திருவாளன் திருமுது குன்றனை விஜயராஜேந்திர ஆசாரியான் உடையா'ருக்கும், அவர் மரபினருக்கும் விடப்பட்ட மானியங்கள் பற்றியும் அழகாகக் குறிப்பிடுகின்றது. ஆயினும், இந்த நாடகம் பற்றிய விவரம் ஒன்றும் நமக்குத் தெரியவில்லை. சிறந்த நாடகக்கலை ஓங்கி வளர்ந்த தஞ்சையில், சில காலத்திற்கு முன்பு வரை சிவக்கொழுந்து தேசிகர் இயற்றிய 'சரபேந்திர பூபாலக் குறவஞ்சி' என்ற நாடகம் ஆடப்பட்டது. தஞ்சைப் பெரியகோயிலில்உள்ளதுபோலவே, திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருவல்லீஸ்வரம் கோயிலில் இருக்கும் கல்வெட்டு ஒன்றும், உய்யவந்தாள் அழகிய யசோதை என்னும் தாசிக்கு நாடகமாடும்பொருட்டுக் கொடுக்கப்பட்ட மானியங்களைப்பற்றிப் பேசுகிறது.

17ஆம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னும் எழுந்த தமிழ் நாடகங்கள் பற்றிய குறிப்புக்கள் பல, அறிஞர்களின் ஆராய்ச்சியின் பயனாக வெளிப்பட்டுள்ளன. ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகட்கு முன் திருக்கச்சூர் நொண்டி நாடகம், பழனி நொண்டி நாடகம், சீதக்காதி நொண்டி நாடகம் போன்ற ஒருவகை நொண்டி நாடகங்கள் எழுந்தன. தீயொழுக்கத்தில் ஈடுபட்ட ஒருவன் தன் அங்கங்களை இழந்து நொண்டியாகிப்

பின் குற்றமுணர்ந்து குணவாளுகித் திருவருள் துணையால் உய்ந்த செய்தியைச் சித்திரிப்பதே இந் நொண்டி நாடகங்களின் நோக்கம். 18ஆம் நூற்றுண்டில் புகழ் பெற்றிருந்த இரு பெரு நாடகங் கள் இராம நாடகக் கீர்த்தனையும், பாரத விலாசமுமாகும். இவற்றை முறையே அருணசலக் கவிராயரும், இராமச் சந்திர கவிராயரும் இயற்றினர் என்பர். இராமச் சந்திர கவிராயர் 'இரங்கூன் சண்டை நாடகம்' என்ற மற்றொரு நாடகமும் எழுதியுள்ளார். இதுவே சமீப நூற்றுண்டுகளில் தமிழில் தோன்றிய முதல் வர லாற்று நாடகம் என்பர். பிற்காலத்தில் தோன்றிய நாடகங்களுள், புரூரவச் சக்ரவர்த்தி நாடகம், அரிச்சந்திர நாடகம், சாரங்கதரா நாடகம், இரண்ய சம்ஹார நாடகம், உத்தரராமாயண நாடகம், கந்தர் நாடகம், காத்தவராய நாடகம், குசலவ நாடகம், ஜமதக்னி நாடகம், பாண்டவர் சூதாட்ட நாடகம், துளசிதாஸர் நாடகம் என்பன பெயர் பெற்றன வாகும். கடந்த சில நூற்றுண்டுகளில் தலபுராணங் களையும், இதிகாச புராணக் கதைகளையும், நாயன் மார் வரலாறுகளையும் ஒட்டி எழுந்த நாடகங்கள் பலப் பல. தமிழில் எழுந்த முதல் சமூக நாடகம் காசிவிஸ்வநாத முதலியார் இயற்றிய டம்பாச்சாரி விலாசமே என்பர். திரிசிரபுரத்தில் கோயில் கொண்டுள்ள தாயுமான பெருமானின் வரலாற்றை உட்கொண்டு 1892ஆம் ஆண்டில் ஆதிலட்சுமி அம்மாள் என்பவர் இரத்தினவதி நாடக அலங்காரம் என்ற நூலை இயற்றினர். இந் நாடகம் தோன்றுவதற்கு முன்னே, 1887இல், இலட்சுமி அம்மாள் என்பவர் சகுந்தலை விலாசம் என்ற நாடகத்தையும், 1889ல் வேம்பம்மாள் என்பவர்

சீதா கல்யாணம் நாடகத்தையும் இயற்றியுள்ளனர். தமிழ் நாடகக் கலை வளரச் சிறந்த தொண்டாற்றிய இப் பெண்மணிகளை நாம் நன்றி உணர்ச்சியோடு நினைவு கூர்வோமாக!

தமிழ் மொழியில் பிற்காலத்தில் தோன்றிய பள்ளு, குறவஞ்சி முதலியனவும் ஒருவகைச் செய்யுள் நாடகங்களே. இத்துறையில் குற்றாலக் குறவஞ்சியும் முக்கூடற்பள்ளும் அழியாப் புகழ் பெற்றவை.

19ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு ஆங்கில நாடக இலக்கியப்போக்கை ஒட்டித் தமிழ் நாடகங்கள் பல, மொழி பெயர்ப்புக்களாகவும்தழுவல்களாகவும் தோன்றின. இவ்வகையில் தமிழில் செய்யுள் வடிவில் தோன்றிய சிறந்த நாடகம், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை பாடிய மனோன்மணீயமே. சுந்தரம் பிள்ளை தோன்றித் தமிழ்த் தாய்க்கு அணி செய்த இக் காலத்திலேதான், பரிதிமாற் கலைஞராகிய வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரும் தோன்றித் தமிழ் மொழியில் நாடகத்திற்கு இலக்கணமில்லாக் குறையைத் தம்முடைய 'நாடகவியல்' என்னும் நூல் வாயிலாக நீக்கினார். தாம் எழுதிய இலக்கணத்திற் கேற்பச் சில சிறந்த நாடக நூல்களை இவர் உரையிலும் பாட்டிலும் இயற்றினார். இவ்விரு பெரியார்களின் அடிச்சுவட்டையே பின்பற்றித் தமிழ் நாடகக் கலை வளர்ச்சிக்கு அருந்தொண்டு ஆற்றிய பெரியார் பம்மல் சம்பந்த முதலியாரே ஆவர். தமிழ் நாடகக் கலைக்குத் தொண்டு செய்த சான்றோர்களுள் இவர்க்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்றே

சொல்ல வேண்டும். ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் பலவற்றைத் தழுவியும், இதிகாச புராணங்களைத் தழுவியும் பல நாடகங்களை இப்பெருந்தகையார் எழுதியுள்ளார். துன்பியல் நாடகங்களையும், சமூக வாழ்க்கையைச் சித்திரிக்கும் நாடகங்கள் பல வற்றையும் எழுதிப் பெருமைகொண்ட பெரியாரும் இவரே. இப்பெரியார் காட்டிய வழியிற் சென்று தமிழ் நாடகக் கலைக்குத் தொண்டாற்றி இன்று நம் மிடையே புகழுடன் விளங்குவோர் பலர்.

இவ்வாறு முன்னைப் பழமைக்கும் பழமையாய், பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் தமிழ் நாடகக் கலைக்கு மிகச் சிறந்ததொரு எதிர்காலம் இருப்பது திண்ணம். கல்வி கற்கும் இளைஞர்க ளிடத்தும், கலையார்வம் மிக்க பொதுமக்களிடத்தும் தமிழ் நாடகக் கலைக்கு உள்ள செல்வாக்கினைக் கருதும் போது, உலக அரங்கிலேயே தமிழ் நாடகக் கலை தன் புகழ்க் கொடியை உயர்த்தும் நாள் அண் மையிலேயே உள்ளதெனக் கருதலாம்.

# 10. வள்ளுவர் ஒரு புரட்சியாளர்

'கறுத்தவையெல்லாம் குயிலுமல்ல; காவி உடுத்தவரெல்லாம் விவேகானந்தரும் அல்லர்,' என்றார் ஒரு பேரறிஞர். அதுபோலப் 'புலவர்' என்று பேர் படைத்தவரெல்லாம் புலவராகிவிட மாட்டார். யார் தலைசிறந்த புலவர்? எது தலை சிறந்த இலக்கியம்? இவ்வினாக்கட்கு விடைகாண, ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும். உண்மையான புலமையில் புதுமை மணக்கும்; பொதுமை விளங்கும்; புரட்சி வீறிடும்; இப்பண்புகள் யாவும் பொருந்திய பெருமை வாய்ந்த ஒரு பெருந்தமிழ் இலக்கியம் திருக்குறள் அன்றோ? வள்ளுவர் வாக்கில் எத்தனை யோ நயங்களைக் காணலாம்; கண்டு பயன் அடைய லாம். கருதுவார் மனநிலைக்கேற்பக் காட்சிதரும் பெருமை சான்ற புலவர் பெருமானார், தெய்வப் புலமை நிறைந்த திருவள்ளுவர். அவர் பாட்டில் தமிழின் இனிமை உண்டு; தத்துவத்தின் தெளி வுண்டு; வாழ்க்கையின் விளக்கமுண்டு. அவர் கவிதையில் உணர்வும் உண்மையும் ஒன்றி இருக் கும். அறத்தோடு பொருளும், பொருளோடு இன் பமும், இன்பத்தோடு அறமும் பொருந்திக் கிடக்கும். எளிமையும் இனிமையும் இணைந்திருக்கும்; ஆழமும் அகலமும் அமைந்திருக்கும். அறிவுக் கடலைக் கடை வார்க்கு ஓர் அமுதமாக விளங்கும் இத்தகைய திருக்குறளை உணர்ந்து ஓதுவார் உள்ளம், காலப்

போக்கில் திருவள்ளுவர் உள்ளத்தோடேயே உறவு கொண்டு ஒன்றிப்போதல் இயற்கை. அதனால், எத்தனையோ உண்மைகள் விளக்கம் பெறும். அந் நிலையில் திருவள்ளுவரைப் பற்றிய ஓர் உண்மை— அவர் ஒரு பெரும்புரட்சியாளர் என்ற பேருண்மை— தெள்ளத் தெளியப் புலனாகும்.

வள்ளுவர் வாழ்ந்த காலம் தமிழ் இலக்கியத் தின்—தமிழ் இனத்தின் பொற்காலம். தமிழ் மக்களின் சிந்தனையிலும் வாழ்விலும் தேசீய ஒளி நிறைந்திருந்த நூற்றாண்டில் பிறந்த அவர் பாடிய தமிழ் மறையில் யாண்டும் புரட்சி மணமும் புதுமை மணமும் கமழ்கின்றன. அந்நூலின் அமைப்பையே —யாப்பையே—கூர்ந்து நோக்குவோம். பாத் தோற்றத்திலே ஒரு புரட்சி. பெரும்பாலும் அகவற் பாக்கள் வாயிலாகவே புலவர் பெருமக்கள் தங்கள் உள்ளக் கருத்துக்களை உணர்த்தி வந்த காலம் அது. பத்துப்பாட்டு என்னும் நூலில் குறைந்த அடி களையுடைய முல்லைப்பாட்டு, 103 அடிகளைக் கொண்டு விளங்குகிறது; மிக அதிகமான அடிகளைக்கொண்ட மதுரைக் காஞ்சி, 782 அடிகளைப் பெற்றுத் திகழ்கிறது.

இந்நிலையில் சங்க இலக்கியக் கடலில் வெண் பாக்களை—அதிலும் குறள் வெண்பாக்களைக் காண் பது அரிதினும் அரிது. அத்தகைய ஒரு சூழ்நிலை யில் தோன்றிய வள்ளுவர், வாழ்க்கையையெல்லாம் அளந்து காட்டும் ஒரு பெரு நூலை—வான் மறை யை—ஈரடியால் இயன்ற குறள் வெண்பாக்களாலே யே பாடிப் போந்தார் எனின், இலக்கியத் துறை

யில் அதனினும் பெரிய புரட்சி ஒன்று உண்டோ? 'ஓதற்கு எளிதாய் உணர்தற்கு அரிதாய்,' 'ஈரடிக் குள்ளே உலகமெல்லாம் அடங்கும்படி அவர் பாடிய நூலுக்கு இணை முன்னும் இல்லை; பின்னும் இல்லை,' என்பது யாவரும் ஒப்பக்கூடிய உண்மை அன்றோ?

ஆங்கில இலக்கிய ஆராய்ச்சித் துறையில் புகழ் மிக்க அறிஞர்களுள் ஒருவராகிய ஹட்ஸன் என்பார், தம் நூலில் ஓரிடத்தில், ஒப்புயர்வற்ற தனிப்பேரிலக் கியத்தின் தன்மைபற்றி மிக அழகாகக் குறிப்பிட் டுள்ளார்: 'உண்மையிலேயே ஒரு சிறந்த இலக்கி யத்தின் அடையாளம், அது எவையேனும், சிலவற் றையேனும் புத்தம் புதியனவாகவும் சுயமாகவும் கூறுவதும், அவ்வாறு கூறுவதிலும் தனக்கே உரிய தும் புதியதுமான வழியில் அவற்றைக் கூறுவதுமே ஆகும்.'[1]

இவ்வுண்மையை உரைகல்லாக வைத்துக் கொண்டு பார்க்கும்பொழுது வள்ளுவர் குறளின் வானுயர் சிறப்புப் புலனாகும்.

நூலின் யாப்பிலேயே ஒரு புது நெறியில் சென்ற வள்ளுவர், தம் இலக்கியத்தின் நோக்கிலும் போக்கிலும், புதுமையும் புரட்சியும் விளங்குமாறு

1. The mark of a really great book is that it has something fresh and original to say, and that it says this in a fresh and independent way.

W. H. Hudson—An Introduction to the study of literature.

செய்துள்ள திறத்தைக் கூர்ந்து ஆராய்வார் அறிதல் திண்ணம்.

முடியுடை மூவேந்தர் ஆட்சி மிக உயர்ந்திருந்த காலம் திருவள்ளுவர் காலம். சேர நாடு—சோழ நாடு—பாண்டி நாடு என்ற எண்ணம் முதிர்ந்திருந்த காலம் அது. அந்நாளிலே தம் வாழ்வின் அனுபவத்தை எல்லாம்—சிந்தனையின் செல்வத்தையெல்லாம்—திரட்டி எழுதிய தம் நூலுள், ஓரிடத்திலேனும் தமிழ் நாட்டு வேந்தரைக் குறிக்கும் சொல்லையோ சொற்றொடரையோ எங்கும் வள்ளுவர் குறித்தார் இலர். அதற்கு மாறாகத் திருக்குறளில் எழுவாய் முதல் இறுவாய் வரை—உலகு என்னுஞ் சொல்லும், பொதுமைப் பொருளுணர்த்தும் சொற்களும், சொற்றொடர்களும் தக்க இடங்களில் திகழ்கின்றன.

இப்படி உலகப் பொதுமறையாய் விளங்கும் திருநூலை வாழ்க்கையின் எல்லாத் துறைகட்கும் பயன்பட வல்ல நன்னூலாகவும் செய்தருளிய திருவள்ளுவரின் திறத்தை என்னென்று போற்றுவது! தனி மனித வாழ்க்கைக்கும், சமுதாயப் பொது வாழ்க்கைக்கும் வேண்டிய எல்லா விதிகளையும் இவ்வளவு நுட்பமாகவும் திட்பமாகவும், தொகுத்தும் வகுத்தும் கூறும் நூல் வேறு எம்மொழியிலேனும் உண்டோ? இல்லை என்றே துணிந்து கூறலாம்.

இவ்வாறு, 'உலகப் பொதுமறையாகவும், வாழ்க்கையின் பன்னெறிகட்கும் பயன்படும் பெருநூலாகவும் விளங்க வல்ல ஒரு நூலை இயற்ற வேண்டும்,'

என்று வள்ளுவர் எண்ணிய எண்ணமே ஒரு வகையில் அறிவுலகப் புரட்சியின்பாற்பட்டது என்று கூறலாம்.

'புரட்சி, புரட்சி' என்று, இன்று எவரும் எங்கும் எதற்கும் பேசக் கேட்கிறோம். ஆனால், உண்மையான—உயரிய—புரட்சி எது? அதைச் செய்ய வல்லவர் யார்? அதைச் செய்வதற்குரிய காலமும் நிலையும் முறையும் எத்தகையனவாய் இருத்தல் வேண்டும்? இக்கேள்விகட்கு விடை காண்பது அவ்வளவு எளிதன்று. எனினும், வள்ளுவர் உள்ளத்தை ஆராய்வது வாயிலாக, இவைபற்றிய உண்மைகளை ஒருவாறாகவேனும் உணரக்கூடும்.

பழந்தமிழ் மக்கள் பண்பாட்டிற் சிறந்தவர்கள்; இயற்கையோடு இரண்டறக் கலந்து இன்ப வாழ்வு வாழ்ந்தவர்கள். தலைவாயிற் கதவினுக்குத் தாளிட்டுப் பூட்டாத தறுகண்மையாளராய்—தகைமையாளராய்—அவர்கள் திகழ்ந்தார்கள். எந்த நாட்டவரையும் எந்த இனத்தவரையும் தங்கள் சொந்தமெனக்கருதி, 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்ற இலட்சிய ஒளியில் வாழும் வேட்கை கொண்டவர்கள் அவர்கள். இத்தகைய பண்பு படைத்தவர்களின் சமுதாய வாழ்க்கையில் எத்தனையோ புயல்கள் வீசியிருக்க வேண்டும். அதன் விளைவாகக் கலக்கமும் சோர்வும் கண்டனர் தமிழர். அக் கலக்கத்தையும் சோர்வையும் பயன்

படுத்திக்கொண்டு, தவரான கருத்துக்கள் பல நாட்டில் புகுந்தன; தேவையற்ற சடங்குகள் பல வாழ்க்கையில் மலிந்தன; பொருளற்ற தீய நிகழ்ச்சிகள் பல,சமயத்தின் பெயராலும் கடவுளின் பெயராலுங்கூட நடக்கத் தொடங்கின. இந்நிலை கண்டார் திருவள்ளுவர்; அவர் உள்ளம் பொங்கியது; எண்ண அலைகள் முழக்கமிட்டன; தாம் பிறந்த உலகில் நடக்கும் அநீதச் செயல்களின் தீமையை உலகம் உணர்ந்து உய்யவேண்டும் என்று ஆத்திரம் கொண்டார்.

அவர் ஏட்டையும் எழுத்தாணியையுமே துணையாகக்கொண்டு, 'கத்தியின்றி ரத்தமின்றி,' கருத்துப் புரட்சி செய்யத் துணிந்தார். அதன் விளைவை—பண்பை—பயனை இன்றும் நாம் அவர் இயற்றிய இணையில்லா இலக்கியத்தில் காண்கிறோம்.

நாடெங்கும் வேள்வித் தீ; புகைப்படலம்; 'யாகம்' என்ற பெயரால் ஆயிரக்கணக்கான வாயில்லா உயிர்கள் கொல்லப்படுகின்றன; வதைக்கப்படுகின்றன. கொலை —உயிர்க்கொலை— படுபாதகக் கொலை! பார்த்தார் வள்ளுவர்! 'காக்கை குருவி எங்கள் சாதி; நீள்—கடலும் மலையும் எங்கள் கூட்டம்; நோக்க நோக்கக் களியாட்டம்!' என்று, 'அனைத்துயிரையும் தம்முயிராய்ப் போற்றி வாழ வேண்டிய ஆறறிவு படைத்த மனித சமுதாயம் இப்படி இயற்கைத் தாயின் குழந்தைகளை வெட்டிக் கொல்லும் ஈனவாழ்க்கை வாழலாமோ?' உள்ளம் துடித்தார். ஆம், புத்தரைப்போல மனம் துடித்

தார். புத்தரின் உள்ளத் துடிப்பு—அரச குடும்பத்தில் பிறந்து, அறவுணர்வின் முதிர்ச்சியால் துறவு நெறி மேற்கொண்ட அவ்வண்ணலின் இதயத் துடிப்பு—பிம்பிசாரனின் யாகத்தையே கலைத்தது; புரட்சி புரிந்தது; கருணை வெள்ளம் பெருக்கெடுத்தோடச் செய்தது. வள்ளுவர் செய்த புரட்சியோ—அறிவுலகப் புரட்சியோ அழியா இலக்கிய வடிவம் பெற்றது; கற்பார் நெஞ்சையெல்லாம் உருக்கும் ஆற்றல் பெற்றது; உயிர்க்கொலை புரியும் ஈன வாழ்வு நாளடைவில் தொலைய வழிகோலியது; ஒரு நாள் ஓரிடத்தில் ஒரு நிகழ்ச்சிக்கு மட்டுமன்றி, எந்நாளும், எவ்விடத்திலும், எச்சூழ்நிலையிலும் பயன்படத்தக்க பாங்கினைப் பெற்றது.

'அவிசொரிந் தாயிரம் வேட்டலின், ஒன்றன்
உயிர்செகுத் துண்ணுமை நன்று,'

இரண்டே அடிகள் கொண்ட இப்பாடலில் வள்ளுவர் உள்ளம் புலனாகிறதன்றோ? அவர் நெஞ்சம் துடித்த துடிப்பு விளங்குகிறதன்றோ? அவர் மனம் எவ்வளவு குமுறியிருந்தால், அவர் சொல்ல விழைந்த உண்மை இவ்வளவு வேகத்தோடு வெளிப்பட்டிருக்கும்? 'ஆயிரம் வேட்டலின்' என்று சொல்லும் போதும், 'ஒன்றன் உயிர்' என்று கூறும்போதும் அச் சான்றோர் மனத்திலிருந்த கோபமும், கருணையும் பீறிட்டுக் கொண்டன்றோ வெளிவந்து சொல்லுருவம் பெறுகின்றன?

தமிழ் மக்களின் கலாசார சமய வாழ்க்கையில் புகுந்ததொரு கேட்டினை நீக்க வள்ளுவரின் புரட்சி

உள்ளம் வீறிட்டது போலவே, சமூகத் துறையிலும் புகுந்த கேடுகளைச் சாட விரும்பியது அவர் உள்ளம்.

'வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்' மேற்பால் கீழ்ப்பால் எனப் பிரித்துக் காணும் போக்கு, சங்க காலத்திலேயே, ஒரு சாராரிடமேனும் இருந்தது என்பதற்குப் புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களே சான்று பகர்கின்றன. இந்நிலை நீடிப்பதை வள்ளுவர் திருவுள்ளம் விரும்பவில்லை. அதே நேரத்தில், கண்மூடித்தனமான மூர்க்கப் புரட்சியிலும் அவ்வறவோரின் நெஞ்சம் படியவில்லை. அறிவு வழிநின்று கருத்துலகில் புரட்சி செய்தார், கன்னித் தமிழின் துணைகொண்டு. அப்புரட்சியின் எதிரொலியையே,

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.'

என்றும்,

'அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்!'

என்றும் அப்பெருமகனார் பாடிய குறள் மொழிகளில் கேட்கிறோம். 'உயர்வு தாழ்வு' வேற்றுமையை ஒழிக்க விரும்பிய திருவள்ளுவர், குறிப்பிட்ட ஒரு பிரிவினர் மீதோ அல்லது ஒரு சொல்லின்மீதோ காழ்ப்புக்கொள்ளாமல், 'தனிவுடைமையைப் 'பொது உடைமை'யாக்கும் நயமும் திறனும், நினைக்கநினைக்க இன்பமும், இறும்பூதும் பயப்பனவாகும்.

சமுதாய வாழ்விற் கண்ட சீர்கேடுகளை நீக்கத் தமிழ்ச் சான்ருேராகிய திருவள்ளுவர் உள்ளம் கருதியவாறே, தமிழ் மக்களின் பண்பாட்டின் சிகரமாய் விளங்கிய உரிமை வாழ்விற்கு—காதல் வாழ்விற்கு—எவ்வித ஊனமும் நிகழக்கூடாது என வீறு கொண்டது அவர் உள்ளம். அதன் விளைவை,

'சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும்? மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.'

என்ற குறள் வடிவில் காண்கிருேம். இக்குறளுக்கு விரிவுரை காணப்புகுந்த தமிழ்ப்பெரியார் திரு. வி. க. அவர்கள், 'திருவள்ளுவர் பழந்தமிழர். பழந்தமிழர் நாகரிகம், களவு மணத்தை அடிப்படையாகக்கொண்டது. அவர்தம் நாகரிகத்தில் பெண்மணிகளைச் சிறை செய்து காக்கும் முறைமை இல்லை. பின்னைத் திருவள்ளுவர் கருத்துச் சிறை காக்குங் காப்பின் மீது சென்றதென்னை?

'திருவள்ளுவர் பெண்மக்களைச் சிறை செய்து காக்கும் முறைமையைப் பிறர் வாயிலாகக் கேட்டிருத்தல் வேண்டும்; அல்லது அம்முறைமை பிற நாட்டினின்றுந் தமிழ்நாட்டில் குடி புகுந்ததைக் கண்டிருத்தல் வேண்டும். திருவள்ளுவர் காலத்திலே பிற நாட்டார் தமிழ்நாடு புகுந்ததைச் சரிதங்களிற் காண்க.

'.......பெண்ணுரிமை காக்கப்பட வேண்டுமென்பது அவர்தங் கருத்து' என்று தமக்கே உரிய தண்டமிழ் நடையில் எழுதியுள்ள எழுத்துக்கள் ஆராய்ச்சியாளர்க்கோர் இனிய விருந்தாகும்.

இனி, பொருட்பாலில் திருவள்ளுவரின் புரட்சி உள்ளத்தைக் காண்போம்:

திருவள்ளுவர் இயற்றிய முப்பாலுள்ளும் ஒவ்வொரு பாலுக்கும் உயிர்நாடியான கருத்து, அப்பாலுள்ளேயே ஒரு குறளில் மிக நன்றாக அமைந்து கிடத்தலை அறிந்து இன்புறலாம். 'ஒருவன் தன் மனத்தில் குற்றம் இல்லாதவனாய் இருக்கவேண்டும்; அறம் அவ்வளவே; மனத்தூய்மை இல்லாத மற்றவை ஆரவாரத் தன்மை உடையவை,' என்ற மிக உயர்ந்த கருத்தைத் தன்பால் கொண்ட,

> 'மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்துஅறன்;
> ஆகுல நீர பிற.'

என்ற குறள் மொழியை முப்பாலின் முதற்பாலாகிய அறத்துப்பாலின் உயிர்நாடியான கருத்தாகக்கொள்ளலாம். இதன் விரிவே—விளக்கமே—அறத்துப்பால். இவ்வாறே பொருட்பாலிலும் ஒளிமிக்க மணிகளாக இரு குறட்பாக்கள் உள்ளன. அவை இரண்டும், ஓர் இலட்சிய சமுதாயத்தின் இரு கண்களான அரசியலும் பொருளாதாரமும் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை நமக்கு அறிவுறுத்துகின்றன. நாட்டின் அரசியல், குடிமக்களின் கருத்துவழி இயங்கும் ஜனநாயகப் பண்பினதாய் இருக்கவேண்டும். (கோனாட்சி ஆயினும் உண்மையில்—நடைமுறையில்—அது குடியாட்சியாகவே இருக்க வேண்டும் என்பதே வள்ளுவர் கருத்து.) அத்தகைய அரசாட்சிக்கு ஏதம் ஏதும் நேரா வகையில் பலம் பொருந்திய பொருளாதார அமைப்பு அதற்கு அரணாதல்

வேண்டும். அத்தகைய பொருளாதார அமைப்பு உண்மையில் பலமுடையதாய் விளங்கவேண்டும் என்றால், அது, 'சமதர்ம' அடைப்படையில், 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும்' நெறியில் எழுந்ததாகவே இருக்க முடியும். இன்றைய நூற்றாண்டிற்கு மட்டுமேயன்றி எந்த நூற்றாண்டிலும்—உலக முழுவதற்கும் பயன் தரவல்ல இவ்வுண்மைகளை,

**'குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்**
**அடிதழீஇ நிற்கும் உலகு.'**

**'இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்ல தரசு.'**

என்ற அருமைக் குறள் வெண்பாக்களில் அழகுறக் கூறியுள்ளார் திருவள்ளுவர். இத்தகைய ஓர் இலட்சிய சமுதாயத்தைக்காண விழைந்த வள்ளுவர், ஒரோவழி நாட்டில் கொடுங்கோலின் பேயாட்டம் நிகழுமேல் என் செய்வது என்பதற்கும் வழிகாட்டுகிறார். 'அவ்வழிப்பட்ட ஆட்சியை அழிப்பதற்குப் புரட்சி ஒன்றுதான் வழி,' என்பது அவர் கருத்து. ஆயினும், அப்புரட்சி, ஆற்றல் மிக்கதாய்—கருதிய பயனைக் கைகூடச் செய்யும் தகுதிபடைத்ததாய்—விளங்க வேண்டுமாயின், அது அறவழிப்பட்ட புரட்சியாய்—அல்லற் பட்ட மக்கள் ஆற்றாது சிந்தும் கண்ணீரினின்றும் கிளர்ந்தெழுந்த புரட்சியாய்—விளங்கவேண்டும் என்பதே வள்ளுவர் உள்ளம்.

**'அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே**
**செல்வத்தைத் தேய்க்கும் படை?'**

வள்ளுவர் வகுத்த இப் புரட்சி இலக்கணத்திற்கோர் இலக்கியத்தைத்தான் நெஞ்சையள்ளும் சித்திரச் சிலப்பதிகாரத்தில் காண்கிறோம்.

**'மெய்யில் பொடியும் விரிந்த கருங்குழலும்**
**கையில் தனிச்சிலம்பும் கண்ணீரும்—வையைக்கோன்**
**கண்டளவே தோற்றான்; அக் காரிகைதன் சொல்செவியில்**
**உண்டளவே தோற்றான் உயிர்.'**

என்ற **இளங்கோவின்** சொல்லோவியமும்,

**'தொல்லை வினையால் துயர்உழந்தாள் கண்ணின்நீர்**
**கொல்ல உயிர்கொடுத்த கோவேந்தன் வாழியரோ!'**

என்ற கவிஞரின் வாக்கும் இவ்வுண்மையைத் தெளிவுறுத்துகின்றன.

இவ்வாறே வறுமையால் வெந்து மடியும் நிலையில் நாட்டில் யாரேனும் தோன்றி, 'இதெல்லாம் ஈசன் செயல்; அவன் செயலுக்கு எதிர்ச் செயல் ஏது? ஒருவன் பிச்சைக்காரனாகவும், இன்னொருவன் பிரபுவாகவும் இருக்கவேண்டும் என்பதும் அவன் திட்டம்,' என்று 'தர்ம உபதேசம்' செய்தால், கேட்பார் நெஞ்சில் எத்தகைய புரட்சித்தீப் பொங்க வேண்டும் என்பதற்குத் திருவள்ளுவர் வழி காட்டுகிறார்:

**'இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து**
**கெடுக உலகியற்றி யான்.'**

'உலகத்தைப் படைத்தவன் உலகில் சிலர் இரந்தும் உயிர் வாழுமாறு ஏற்படுத்தியிருந்தால், அவன் இரப்பவரைப்போல எங்கும் அலைந்து கெடு

வானகி!' என்று வள்ளுவர் அகில உலகையும் படைத்த ஆண்டவனுக்கே இடும் இந்தச் சாபத்தினும், வறுமை என்னும் வேதனையை வெட்டிச் சாய்க்க முற்படுவார் உள்ளத்தில் புரட்சித்தீயை மூட்ட வேறொரு தூண்டுகோலும் வேண்டுமோ?

ஜனநாயக ஒளிவீசும் அரசாட்சியை—வறுமை தொலைந்து வளமை பொங்கும் சமுதாயத்தை—காணத் துடிக்கும் திருவள்ளுவர், அவ்வாட்சியில்—அந்நாட்டில் மக்களின் தனி வாழ்க்கையிலும், பொது வாழ்க்கையிலும் அறமணமே கமழவேண்டும் என்று ஆவல் கொள்கிறார். அதன் விளைவுதான் பொருட்பாலில் காணப்படும் 'வரைவின்மகளிர்', 'கள்ளுண்ணாமை', 'சூது' என்ற அதிகாரங்கள். இம்மூன்று அதிகாரங்களில்,— சிறப்பாக, 'வரைவின்மகளிர்', 'கள்ளுண்ணாமை' என்ற இரு அதிகாரங்களில்—வள்ளுவர் ஒரு புரட்சிக்காரர்' என்ற வாய்மை தெற்றென விளங்குகிறது.

வரைவின்மகளிரை நாடுவதும், கள்ளுண்பதும் தனிப்பட்ட அறவாழ்க்கைக்கு மட்டும் கேடுபயப்பன அல்ல; பொதுவாழ்க்கைக்கும் பெருங்கேடு சூழ்வனவாகும் என்பது திருவள்ளுவர் கருத்து. உரிமையும் கடமையும் நிறைந்த பொதுவாழ்க்கைக்கு, ஒழுக்க வாழ்வு கெட்டும், கள்குடித்து மயங்கியும், சூதாடிச் சோம்பல் மிகுந்தும் திரியும் சிறியவர்களால் பெரிய கேடு என்றென்றும் விளையும் என்பதே அச்சான்றோரின் முடிவு. எனவேதான் இம்மூன்றையும் கடிந்துரைக்கும் பொறுப்பினை, நாட்டின் அரசியல் எடுத்

தோதும் பொருட்பாலில் மேற்கொள்கிறார் திரு வள்ளுவர்.

சங்க காலச் சமுதாயத்தில் கள்ளிற்கும் வரைவின் மகளிர்க்கும் சிறப்பு வாய்ந்த இடமே இருந்தது என்பது மறைக்க முடியாத உண்மை. 'திருவள்ளுவர் காலத்து இலக்கியங்களிலும் '**மருதத்திணை**' என்று போற்றப்படும் பகுதியில் பரத்தையராகிய பொது மகளிர் இடம் பெற்றிருந்ததையும், மக்களுடைய அன்றாட வாழ்வில் எல்லோரும் பருகும் பொருளாகக் கள் இடம் பெற்றிருந்ததையும், அகப்பொருட்பாக் களில் பரத்தையரும், புறப்பொருட்பாடல்களில் கள் ளும் பயின்றிருப்பதையும் சங்கநூல்களைக் கற்பார் எளிதில் அறிவர்.

மக்கள் வாழ்க்கையிலும், இலக்கிய நெறியிலும் இத்தகைய போக்கு ஆட்சி பெற்றிருந்த காலத்தில், இதை ஒழிக்க—நாட்டின் பொது வாழ்க்கையினின் றும் அடியோடு அகற்ற—உறுதிகொண்டார் வள்ளு வர். தலைசிறந்த ஒரு சீர்திருத்தவாதியின் குற்ற மற்ற புரட்சி உள்ளத்தோடு இப்பிரச்சினையை அணுகுகிறார் வள்ளுவர். இவற்றின் தீமைகளை முதல்தரக் குடியனும், காமுகனும், சூதாட்டக்கார னும் கேட்டு வெட்கித் தலைகுனியுமாறு அவர் விளக்கு கிறார்; தம் வாதத்திறமையால்—அறிவு மொழிகளால்— அவன் உள்ளத்தில் மாறுதல் உறும்படி செய்கிறார். இவ்வாறு கள்ளும், பரத்தைமையும் 'நாகரிகம்' என மயங்கிக்கிடந்த சமுதாயத்தில், முதன்முதலாக அவை தனி வாழ்க்கைக்கே அன்றிப் பொது வாழ்க்

கைக்கும் கேடு சூழும் எனத் தெளிந்து அறப்புரட்சி செய்துள்ளார் திருவள்ளுவர் தம் நூலில்.

தமிழ் நாட்டின் நாகரிகத்தின் பெருங்குறை பாடுகளாயிருந்த இவற்றை முதன்முதலாக ஒழிக்கப் பாடு பட்ட திருவள்ளுவர், அதற்குரிய ஆற்றல் பொருந்திய கருவியாக—தமிழை—இலக்கியத்தைப் பயன்படுத்தினர் என்று எண்ணும்போது நம் உள் ளம் கொள்ளும் உவகை சிறிதோ!

பொருட்பாலில் வரைவின்மகளிரோடு உறவு கொள்வதை வன்மையாகக் கண்டித்த திருவள்ளுவர், அந்த அறநெஞ்சோடு காமத்துப்பாலையும் எழுது கிறார். கற்பனைச் சிறகுகள் கொண்டு காதல்வானில் பறந்து பாடும் பறவையின் கீதம்போல விளங்கும் அவர்தம் காமத்துப்பாலிலும் மருதத்திணையில் ஊடல் பற்றிய பேச்சில்—மரபுக்காகவும் 'வரைவின் மக ளிர்' உறவை அவர் வாழவைக்கவில்லை. இந்த உண்மையை,

> **'மலரினும் மெல்லிது காமம்; சிலர்அதன்**
> **செவ்வி தலைப்படு வார்.'**

என்னும் அருமைத் திருக்குறளின் அரிய விளக்க மாக அமைந்துள்ள காமத்துப்பாலை நுணுகி ஆராய் வார் வள்ளுவர் கருத்தை எளிதில் உணரலாம்.

'மருதத் திணையைச் சங்க நூல்களாகிய அக நானூறு முதலியவை கூறும் முறை வேறு; திரு வள்ளுவரின் நூல் கூறும் முறை வேறு; திரு வள்ளுவர்கூறும் மருதத்தில் பரத்தை என ஒருத்தி

இல்லை; தலைவன் பரத்தையை நாடிச் செல்வதும் இல்லை..........அக்காலத்து நூல்களில் எல்லாம் இடம் பெற்றுவந்த பரத்தையர்க்குத் திருக்குறளில் நல்ல இடம் இல்லை; வேண்டாவென்று கடியப்படும் இடமே கிடைத்தது. ஆதலின் திருவள்ளுவர், மருதத் திணைக்கு முன்னோர் வகுத்தோதிய இலக்கணத்தையும் புறக்கணித்துப் பரத்தையர்க்குக் காமத்துப் பாலில் இடம் இல்லாமல் செய்தார்; நூலோர் மரபையே கடந்து புது வழி வகுத்தார்'. இதுவே நடுவு நிலை பிறழா ஆராய்ச்சி அறிஞரின் தெளிவுரை. [1]

இவ்வாறு கற்பனை உலகில் நுழையும்போதும் புரட்சி மணம்—சீர்திருத்த மணம்—கமழ நூல் செய்த அறவோர் திருவள்ளுவர். அதனால் அன்றோ 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட' நாடாய்த் தமிழ் நாடு விளங்குகிறது.?

முப்பது குறட்பாக்களில் மூன்று பெருந்தீமைகள் நாட்டில் பொது வாழ்வில் தலை காட்டவும் கூடாது என்று மணிமணியான கருத்துக்களை அணி பெறக் கூறி விளக்கும் திருவள்ளுவரின் உள்ளம், இன்று நம் தாய் நாட்டின் குடியரசாட்சியில் சட்டமாக உருக்கொள்ளும் காட்சியைப் பார்க்கிறோம். கள் ஒழியவும், பரத்தைமை நீங்கவும், சூது தொலையவும் இன்று அரசாங்கம்—சுதந்திர ஆட்சி—செய்யும் முயற்சிகட்கு எல்லாம் வித்திட்ட பெருமான்—

1. டாக்டர் மு. வ.—திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்.

காந்தி அடிகட்கும் வழிகாட்டியாய் இருந்த கலங்கரை விளக்கம்—நம் தமிழ் அன்னையின் மணி வயிறு குளிரப் பிறந்த திருவள்ளுவ நாயனுரே என்று நினைக்கும்போது நம் உள்ளம் எல்லையில்லாத மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி எழுகிறது அன்ருே?

உயர்ந்த உள்ளம் படைத்த கவிஞர்களைப்பற்றி ஆங்கிலப் பெருங்கவிஞர் ஒருவர், 'கவிஞர்கள் இந்த உலகத்தின் தேர்ந்தெடுக்கப்படாத பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள்' என்று அழகாகச் சொன்ஞர். எவ்வளவு உண்மையான மணி மொழி அது! ஈராயிரம் ஆண்டுகட்கு முன் ஒரு புலவர் எண்ணிய எண்ணம்—அவர் ஏட்டிலே எழுதிய எழுத்து-இன்று நாட்டில் சட்டமாய் விளங்குகிறது! குத்தும் கொலையுமாய்த் தொடங்கி முடியும்—நிலையற்ற பொருள்களுக்காக நடைபெறும் புரட்சிகள் காலவெள்ளத்தில் கரைந்து போகும். ஆனல், நிறை மொழி மாந்தர் தம் மறை மொழியின் துணைகொண்டு புரியும் கருத்துப்புரட்சி—அறிவுலகப் புரட்சி—அறப் புரட்சி வரலாருய்—காவியமாய்—வான்மறையாய்- -வாழ்ந்து என்றென்றும் மன்பதைக்கு வழிகாட்டும் என்பதற்கு வள்ளுவர் வாய் மொழியினும் சிறந்த சான்று வேண்டுவதில்லை அன்ருே?



# 11. வாழ்த்தும் கலை

பூவிற்கும் புல்லிதழ் உண்டன்றோ? அவ்வகையில் **மகாவித்துவான் மே. வீ. வே.** அவர்கள் மணிவிழா மலரை அணிசெய்ய எழுந்ததே இக்கட்டுரை. பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய மூன்று பெருஞ்சங்கத் தொகை நூல்களுள் வாழ்த்து ஒரு கலையாய் விளங்கும் திறத்தினை ஒருவாறு ஆராய்ந்து இன்புறுவதே இச் சிறுகட்டுரையின் நோக்கம்.

வாழ்த்துவார் வாழ்த்தின், அவ்வாழ்த்தினைப் பெற்று வரம்பிலா இன்பங் கொள்ளத் தயங்குவார் யார்? முத்தமிழால் வைதாரையும் வாழ்விக்கும் மாமுருகனை 'வாழ்த்துவப்பான்'[1] என்றன்றோ சங்கத்தமிழ் நூலாகிய பரிபாடல் போற்றுகின்றது? 'புகழ்ச்சி விருப்பனாய்' எம்பெருமானே விளங்குகின்றான் எனின், பொன்னும் போகமும் புகழும் வேட்டு வாழும் மனிதர் மனநிலை பற்றிக் கூறவும் வேண்டுமோ? 'புகழ் எனின் உயிரும் கொடுப்பது' அன்றோ அவர்தம் பண்பு!

சங்க காலத்தில் வாழ்ந்த வேந்தர்களும் வள்ளல்களும் புலவர் பாடும் புகழுடையோராய்—சான்றோர் வாழ்த்தும் வாழ்த்துடையராய்—வாழவே விரும்பினார்கள். தமிழ் வேந்தன் வஞ்சினம் கூறும்போதும்,

---

1. பரிபாடல் 19:66

'ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவனாக
உலகமொடு நிலைகிய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை![1]

என்றன்றோ முழங்கினன்? பசிப்பிணி மருத்துவ ராய், பண்பாட்டின் காவலராய் வாழ்ந்த புரவலர் பெருமக்களை வாழ்த்த நாளும் விழைந்தனர் பழந் தமிழ்ப் புலவரும். அவ்வாறு அவர்கள் தம் வரிசை யறிந்து வழங்கும் வள்ளியோரைப் போற்றாமல் ஆற்றநாள் போக்கிவிட்டமை உணர்ந்த பொழுது அவர்கள் உள்ளம் கடலெனக் குமுறியது!

'முன்உள்ளு வோனைப் பின்உள்ளி னேனே!
ஆழ்கென் உள்ளம்! போழ்கென் நாவே!
பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே![2]

என்ற உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரின் புறப் பாட்டடிகளை மறத்தலும் ஒல்லுமோ!

இத்தகைய சூழ்நிலையில் வாழ்வாங்கு வாழ்ந்த சங்ககாலப் புரவலர்களை, அவர்கள் கைவண்மையின் திறங்கண்ட கவிஞர் பெருங்கூட்டம் வாழ்த்தியிருக் கும் வாழ்த்திலேதான் எத்தனை எத்தனை வகை! சுவை! பயன்!

தம்மைப் போற்றிப் புரந்த பெருந்தகையோ ரைச் சிலவாகிய சொற்களாலேயே எளிய முறையி லேயே வாழ்த்துவதைச் சங்கப்புலவர் சிலரிடம் காண லாம். அப்படி வாழ்த்தும் பொழுது, 'பலகாலம் நீ

1. புறநானூறு, 72: 13-16. 2. புறநானூறு 132:1-3.

வாழ்வாயாக!' என்று புலவர் தம் மனத்தில் ஊறி எழுந்த கருத்தைச் சுருங்கச் சொல்லிச் சுவை தோன்ற விளங்க வைப்பர்.

'வாழிய நெடிது!' [1]

'வாழ்கநின் ஊழி!' [2]

'நீநீடு வாழிய பெரும!' [3]

'ஆயிர வெள்ள ஊழி
வாழி யாத வாழிய பலவே!' [4]

'எந்தை வாழி யாத னுங்க!' [5]

எனவரும் சங்க இலக்கிய அடிகள் அவர்பாலிருந்த இத் தனிச்சிறப்பிற்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்களாகும். இவ்வாறு வாழ்த்த விரும்பும் புலவர் தம் தலைவரின் திருப்பெயரையும், தலைமாலையையும், தாளினையும், செல்வ வளனையும், சீர்மைசால் புகழினையும், போர்வல்ல படையினையும், பொன்றுதலில்லா வெற்றியினையும் வாழ்த்துதலும் இயல்பாகும்.

'வாழிய பெருமநின் வரம்பில் படைப்பே!' [6]

'வாழ்கவவன் றளே!' [7]

'வாழ்கஅவன் கண்ணி!' [8]

,பல்பொறி மார்பநின் பெயர்வா ழியரோ!' [9]

---

1. பெரும்பாண், 461.
2-4. பதிற்றுப்பத்து; 71; 24; 88; 22; 63; 20-21.
5. புறம். 175.
6. புறம், 22.
7, 8, புறம். 70; 77.
9. பதிற்றுப்பத்து, 48; 12.

'படுதிரை
நீர்சூழ் நிலவரை யுயரநின்
சீர்கெழு விழுப்புகழ் ஏத்துகம் பலவே!' [1]

'வாளம ருழந்தநின் தானையும்
சீர்மிகு செல்வமும் ஏத்துகம் பலவே ![2]

'நின்வலன் வாழியவே ![3]

'அவன்தாள் வாழியவே !'[4]

'வாழ்கநின் வளனே !'[5]

'வாழ்கநின் கண்ணி !'[6]

எனவரும் சங்க இலக்கிய அடிகள் இவ்வுண்மைக்குச் சான்று பகரும்.

சங்கத் தமிழ்ப் புலவர்கள் இயற்கையின் அடியார்களாய் வாழ்ந்த உண்மை உலகறிந்தது. வான வீதியில் வலம்வரும் இருபெருஞ் சுடர்களாய் விளங்கும் ஞாயிறும் திங்களும் அவர்தம் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட பேரொளி விளக்கங்களாகும். எனவே, தாம் வாழ்த்த விரும்பிய தகவுடையோரை, 'வெங்கதிரோனும் தண்மதியமும் போல நீடு வாழ்க!' எனவாழ்த்த முனைந்தது அவர்தம் தமிழ் நெஞ்சம்.

'தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்

1. புறம். 160.
2—4 புறம்: 161; 161; 171.
5—6 பதிற்றுப்பத்து: 24; 30; 36: 14; 37: 1;
54: 2; 56:3

மன்னிய பெருமநீ நிலமிசை யானே!'[1]

'அங்கண் விசும்பின் ஆரிருள் அகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவும், குடதிசைத்
தண்கதிர் மதியம் போலவும்
நின்று நிலைஇயர் உலகமோ டுடனே!'[2]

'முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்
பன்மீ னடுவட் டிங்கள் போலவும்
பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கி'[3]

*பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெரு வழுதியைக் காரிகிழாரும், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை மதுரைக் கணக்காய ஞர் மகனார் நக்கீரனாரும் பாடியுள்ள புறப்பாடல்களின் பகுதிகளாகும் இவை இரண்டும்.*

*பகலவனிடத்தும் பால் மதியத்தின்பாலும் ஈடு பாடு கொண்டிருந்தது போலவே, நீலவானத்தில் அள்ளியெறிந்த நித்திலங்களென ஒளி உமிழும் விண்மீன்களுக்கும், மன்பதை உய்யப் பொய்யாது பெய்யும் மாமழைக்கும் பழந்தமிழ்ப்புலவர் தம் நெஞ் சைக் காணிக்கையாக்கியிருந்தனர். அதனால், தம் நெஞ்சில் நீங்காதுறைந்த நற்றமிழ்ச் செல்வரை நல முறப் போற்றும்போதும், 'எண்ணற்ற விண்மீன் கள் போலவும், தண்ணிய மாமழை போலவும் பன் னெடுங்காலம் வாழ்வீராக!' என வாழ்த்தினர்.*

1—2 *புறம்:* 6, 56.

3. *மதுரைக் காஞ்சி,* 768-70.

'வானத்து
வயங்கித் தோன்று மீனினும் இம்மென
இயங்கு மாமழை யுறையினும்
உயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநுந் நாளே!' [1]

'ஆறுப் பெருவளஞ் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழியர் பலவென!' [2]

'இமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்
கொண்டன் மாமழை பொழிந்த
நுண்பஃ றுளியினும் வாழிய பலவே!' [3]

இம்மூன்று பாடற்பகுதிகளும், முறையே மூத் தமிழ் நாட்டு மூவேந்தராகிய சேரமான் மாரிவெண் கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெரு நற்கிள்ளியும் வேள்வி அந்தணர் வளர்த்த முத்தீப் போல ஒத்த உள்ளத்தினராய் ஒருங்கிருக்கும் ஒப் பற்ற ஒற்றுமைக் காட்சியைக்கண்ட ஔவை மூதாட் டியாரும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனைக் கல்லாடனாரும், சோழன் குளமுற்றத் துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஆலத்தூர் கிழாரும் வாழ்த் திய வாழ்த்துக்களாகும்.

நீல வானத்தில், மேற்குத் திசையில், பிறைசூடிய பெம்மானை நினைவு படுத்தித் தோன்றும் இளம் பிறை, கடவுளுணர்வுடைய கவிஞரும், மக்களும் கண் ணுரக்கண்டு களிகொண்டு பயனெய்த வழி வகுக்கும் இன்பப் பொருளன்றோ? அப்பிறையின்பால் ஈடு பட்ட அருந்தமிழ்ப் புலவர் மாங்குடி மருதனர்,

1—3, புறநானூறு, 367 : 15-18; 371 ; 24-25; 34 : 21-23.

'குடமுதற் றோன்றிய தொன்றுதொழு பிறையின்
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்!' [1]

என மதுரைக் காஞ்சியில், பாண்டியன் நெடுஞ்செழி யனை அழகுறப் பாடியுள்ளார்.

வானகத்துச் செல்வங்களில் தணியாக் காதல் கொண்டிருந்த தண்டமிழ்ப் புலவர், மண்ணகத்தின் புகழ் விளக்குவனவாய் அமைந்த ஆறு, மலை ஆகிய வற்றிடத்தும் பேரன்பு பூண்டிருந்தனர். அவர்கள் கொண்டிருந்த அந்த அன்பு வெள்ளம் தக்கோரை வாழ்த்துங்கால் பெருக்கெடுத்து ஓடலாயிற்று.

'பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே' [2]
'அயிரை நெடுவரை போலத்
தொலையா தாகநீ வாழு நாளே !' [3]

'கடவு ளயிரையி னிலைஇக்
கேடில வாக பெருமநின் புகழே!' [4]

என்பன புறநானூற்று உலகிலும், பதிற்றுப்பத்து உலகிலும் நாம் கேட்கும் வாழ்த்தொலிகளாகும்.

வான் பொய்ப்பினும் தான் பொய்யாத் தமிழ் நாட்டு ஆறுகளும், அவை வெள்ளப் பெருக்கெடுத்து விரையும்போது ஏற்படும் எக்கர் மணலும் புலவர்கள் வாழ்த்துரையில் இடம் பெறுகின்றன.

---

1. மதுரைக்காஞ்சி, 193-4.

2. புறம் 2.

3—4: பதிற்றுப்பத்து, 70: 26, 27; 79: 18, 19.

'சிறக்கநின் னாயுள்
மிக்குவரு மின்னீர்க் காவிரி
எக்க ரிட்ட மணலினும் பலவே!'[1]

'தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை
நுண்பல மணலினு மேத்தி
உண்குவம் பெருமநீ நல்கிய வளனே!'[2]

'தீம்புன லாய மாடும்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே!'[3]

புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும் வரும் இவ்வடிகளில் புலவர்தம் அன்பு வெள்ளமும் சேர, சோழ நாடுகளின் புகழ் சான்ற ஆறுகளின் பெரு வெள்ளமும் பின்னிப் பிணைந்து செல்லும் காட்சி நம் மனக் கண்கட்குப் புலனாகின்றன அல்லவா?

தலைவர்களை வாழ்த்தும்போது அவர்தம் மனைக்கு விளக்காகிய வாழ்க்கைத் துணைவியர்க்கு முதலிடம் தந்து வாழ்த்துதலும் பழந்தமிழ் மரபேயாம்.

'வேயுறழ் பணைத்தோள் இவளொடு
ஆயிர வெள்ளம் வாழிய பலவே!'[4]

'வண்டார் கூந்தல் ஒண்டொடி கணவ!
நின்னாள், திங்கள் அனைய வாக! திங்கள்
யாண்டோ ரனைய வாக! யாண்டே
ஊழி யனைய வாக! ஊழி
வெள்ள வரம்பின வாக!'[5]

1—2. புறம். 43, 136
3. பதிற்றுப்பத்து, 48: 13—18.
4-5. பதிற்றுப்பத்து, 21 : 37, 38; 90 : 50 - 54.

எனவரும் சங்கத்தமிழ், சேரர் வளர்த்த தீந்தமிழ். அரும்பெறல் தலைவரை வாழ்த்தும்போது அவரை ஈன்ற பெருமக்களைச் சேர்த்து வாழ்த்தலும் செந் தமிழ் நாட்டுப் பண்பாடு.

'சிறுவெள் ளருவிப் பெருங்கல் நாடனை!
நீவா ழியர்!நின் தந்தை
தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே!' [1]

ஒரு சிறைப்பெரியனார் திருவாயால், நாஞ்சில் வள்ளுவன் பெற்ற நல்வாழ்த்து இது.

வாழ்த்துப் பெறும் தலைவன், தொடர்ந்து அவ் வாழ்த்திற்கு உரியனாய் விளங்கும் வண்ணம் அறநெறி காட்டி அறிவுரை கூறலும், 'அஞ்சொல் நுண்டேர்ச் சிப் புலவர்' நெறி!

'ஈவோ ரரியரிவ் வுலகத்து
வாழ்வோர் வாழவவன் றாள்வா ழியவே!' [2]

என்பது போன்ற பாடல்கள் பல, சங்க இலக்கியங் களில் காணலாம்.

வாழ்த்தையும் வசையாக்கும் திட்பமும் நுட்ப மும், சொல்லேர் உழவர்க்குண்டு. சான்றாக, புறம் 166, 168 முதலிய பாடல்களைக் குறிப்பிடலாம்.

பல்வகையான வாழ்த்து வகைகளுள்ளும் தலை சிறந்த ஒன்றை, ஔவைப் பெருமாட்டியாரின் திரு வாக்கில் காண்கின்றோம். தான் வாழ்வதினும் தண்டமிழ்ப் புலவர் நீடுவாழ்வது மேலெனக்கருதிய அதிகமான், 'ஆதல் தன்னகத்து அடக்கி, பெருமலை

1-2- புறம். 137, 171.

விடரகத்து அருமிசைக்கொண்ட சிறியிலை நெல்லித் தீங்கனியைத் தனக்குக் குறியாது கொடுத்த' கருணைத்திறத்தை நினைந்து உருகினர், அமிழ்தினுமினிய தமிழ் பாடும் மூதாட்டியாராகிய ஔவையார். அவர் உள்ளத்தில் பெருக்கெடுத்தநன்றி உணர்ச்சி, அதிகமானைப் பார்த்து,

'நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே !'[1]

என்று வாயார, மனமார வாழ்த்தச் செய்தது. 'கண்ணுதற் பெருங்கடவுளைப் போல வாழ்க!' என வாழ்த்துப் பெற்ற அதிகமான், மன்பதையில் பிறந்தோருள்ளெல்லாம் தலைசிறந்த பேறு பெற்றவன் அல்லனே?

இதுகாறும் நாம் கண்டாங்கு, வாழ்த்தும் கலையெனக் கருதி வாழ்த்தும் கலையைப் பயனுறவளர்த்த தண்டமிழ்ப் புலவர் திறத்தைத் தமிழ் இலக்கிய உணர்வோடு உள்ளுவார் நெஞ்சம் உவகைக் கடலாதல் உறுதி.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திலிருந்து காசினியிற் பிறந்து வளர்ந்து மூத்து விளிந்தோர் கோடானு கோடி பேர். அவர்களுள் சான்றோர் வாழ்த்துரைகளைப் பெற்று அழியாப் புகழ்கொண்ட பெருமைசால் பெரியோர் ஒரு சிலரே ஆவர். அத்தகையோருள் ஒருவரே இம்மணி விழா மலருக்குரிய தண்டமிழ் அறிஞர். அவர்தம் தொண்டும் புகழும் வாழ்க! வெல்க!

---

1, புறம் 91

# 12. மருத நிலத் தலைவன்

இயற்கையோடு இயைந்த இன்ப வாழ்வு நடத்திய பெருமக்கள் சங்க காலத் தமிழ் மக்கள். இவ்வுண்மை அவர்தம் இலக்கியங்களாலும், வாழ்க்கை நெறி முறைகளாலும் இனிது புலனாகும்.

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைப்பட்ட தமிழ் கூறு நல்லுலகத்தை, இயற்கை நில அமைப்புக் காரணமாக ஐந்து வகையாகப் பிரித்தனர் பழந் தமிழ்ச் சான்றோர். அவற்றுள் மலையும் மலை சார்ந்த இடமும் **குறிஞ்சி** என்றும், காடும் காடு சார்ந்த இடமும் **முல்லை** என்றும், வயலும் வயல் சார்ந்த இடமும் **மருதம்** என்றும், கடலும் கடல் சார்ந்த இடமும் **நெய்தல்** என்றும், முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்த வெம்மை மிக்க நிலம் **பாலை** என்றும் பெயர் பெற்றன.

இவ் வைவகை நிலங்கட்கும் அவ்வந் நிலங்களின் தன்மைக்கு இயைந்த ஒழுக்கங்கள் இவை இவை என வகுக்கப் பெற்றன. குறிஞ்சி நிலத்திற்குரிய சிறந்த ஒழுக்கம் தலைவனும் தலைவியும் கூடி நுகரும் காதல் இன்பம் என்றும், முல்லை நிலத்திற்குரிய சிறந்த ஒழுக்கம் பிரிந்த தலைவன்வருமளவும் தலைவி ஆற்றியிருக்கும் பொறை என்றும், மருத நிலத்திற் குரிய சிறந்த ஒழுக்கம் தலைவன்பால் தலைவி ஊடி

நுகரும் ஊடல் இன்பம் என்றும், பாலை நிலத்திற் குரிய சிறந்த ஒழுக்கம் தலைவியை விட்டுத் தலைவன் பிரிதல் என்றும், நெய்தல் நிலத்திற்குச் சிறந்த ஒழுக்கம் பிரிந்து சென்ற தலைவனை எண்ணி எண்ணித் தலைவி உள்ளம் உருகி இரங்கல் என்றும் பாகுபாடு செய்தனர் பழந்தமிழ்ப் புலமையாளர்.

இவ்வாறு ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய நில இயல்பு முதலியவை முதற்பொருள் என்றும், அந் நிலத்தில் விளையும் பொருள்கள் முதலியன கருப் பொருள் என்றும், அவ்வந் நிலத்திற்குரிய ஒழுக்கம் உரிப்பொருள் என்றும் வகுத்துரைக்கப் பெற்றன.

இவ்வாறு நிலங்களுக்கென வகுக்கப்பட்ட ஒழுக்கங்களை எல்லாம் தொகுத்து உரைக்கின்றது அழகியதொரு பழம்பாடல்.

**போக்கெல்லாம் பாலை, புணர்தல் நறுங்குறிஞ்சி**
**ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம் ;—நோக்குங்கால்**
**இல்லிருத்தல் முல்லை ; இரங்கல் நறுநெய்தல்**
**சொல்விரித்த நூலின் தொகை.**

இவ்வழகிய பாடலின் நடுவணதாக விதந்து ஓதப்பெற்ற, 'ஆக்கம் சேர் ஊடல் அணி மருத'த் தைப்பற்றியும், அதன் தலைவனது தன்மையைப் பற்றியுமே இப்பொழுது நாம் சிந்தித்தல் வேண்டும்.

வயலும் வயல்சார்ந்த நிலமுமாகிய பகுதிக்கு 'மருதம்' என்னும் பெயர் வரக்காரணம் என்ன? ஆராய்ச்சியாளர்கள் மூன்று வகையான முக்கிய காரணங்

களைச் சுட்டிக் காட்டுகின்றார்கள் ‘பிங்கலம்’ போன்ற நூல்களில் வயல் என்ற பொருளுடையதாக மருதம் என்ற சொல் காணப்படுகின்றமையின், வயல்சார்ந்த நிலப்பகுதிக்கு மருதம் என்று பெயர் அமைந்திருத்தல் கூடுமென்றும், மருத மரங்கள் செழிப்புடன் விளங்கும் வளம் சார்ந்த பகுதி ஆதலின் மருதம் என்ற பெயர் வந்ததென்றும், அன்புடைய தலைவனும், தலைவியும் மருவியும், ஊடியும் மனம் மகிழ்தலின் மருதம் என்ற பெயர் பொருந்தியது என்றும் கூறுவர்.

இங்ஙனம் முதல், கரு, உரி ஆகிய முப்பொருளும் காரணமாக அமைந்த — பொருந்திய—மருதம் என்ற பெயர் தாங்கிநிற்கும், நீர்நில வளங்கள் சார்ந்த பகுதியின் அழகினைத் தமிழ்ப்பெருங்கவிஞர்கள் பாடிப் பாடி மகிழ்ந்திருக்கின்றார்கள். பிற்காலப் பெருங்கவிஞராகிய கவிச்சக்கரவர்த்தியார் கம்பருக்குத் ‘தண்டலை மயில்களாட, தாமரை விளக்கம் தாங்க, கொண்டல்கள் முழவின் ஏங்க, குவளை கண்விழித்து நோக்க, மகரயாழின் வண்டுகள் இனிதுபாட, தெண்டிரை எழினி காட்ட, அரசு வீற்றிருக்கும் பெண்ணரசியாய்—எழிலரசியாய்க் காட்சியளித்த மருதநிலம், சங்க இலக்கியப் புலவர்களுக்கு எத்துணை எத்துணை இன்பக் காட்சிகளை அள்ளி அள்ளி வழங்கியிருக்கின்றது! நிலத்தின் இயல்போடு மாந்தர் மனத்தின் இயல்பையும் பிணைத்துப் பிணைத்துப் பாடும் பெருமைசான்ற சங்கக் கவிஞர்கள் மருத நிலவளம் குறித்தும், அப்பகுதியில் வாழ்வாங்கு வாழ்ந்த தமிழ் மக்களின் மனவளம் குறித்தும் பாடி

யுள்ளகணக்கற்ற பாடல்களை எட்டுத்தொகை நூல்களுள்—அன்பின் ஐந்திணையை அழகுறப் பேசும் சொற்றிறம்மிக்க இலக்கியங்களாகிய நற்றிணை, நல்ல குறுந்தொகை, தீங்கரும்பனைய ஐங்குறுநூறு, கற்றறிந்தோர் ஏத்தும் கலி, அருமைசான்ற அகநானூறு எனப்படும் ஐந்து பேரகப்பொருள் நூல்களுள் பரக்கக் காணலாம்.

மருதநில வாழ்க்கைக்கு உயிர் நாடியாய் விளங்குபவன் செல்வவளம் சிறந்த அந்நிலத் தலைவனே. அவனை, 'மகிழ்நன்' என்றும், 'ஊரன்' என்றும் கூறுவர் பழந்தமிழ்ப் புலவரும், மக்களும். அவன் திறத்தையும், அவன் மதிப்புக்கு உரிய மனையாளின் கற்பின் பொற்பினையும் கவினுற விளக்கும் சீர்மை சான்றன, சங்க இலக்கியங்களில் அமைந்து கிடக்கும் மருதத்திணைப் பாடல்கள். மருதத்திணை அல்லது மருத நிலத்துக்கு உரிய சிறந்த ஒழுக்கம் 'ஊடல்' பதைக்கண்டோம். இந்த ஊடலின் நுட்பம் விரித்தால் பெருகும். காதல் வாழ்வு வாழும் உயிர்களுக்குக் கண்ணாய் அமைந்து பேரின்பம் வழங்கும் உயரிய பண்பே 'ஊடல்'. மக்கள் ஐம்புல அறிவோடு மன அறிவும் உடையவர். உண்ணும் உணவு முதலியவை ஐம்புல னறிவுக்கு விருந்தாகும். ஆனால், மன அறிவுக்கோ, கனிவுடைமொழியும் நெஞ்ச நெகிழ்ச்சியுமே வேண்டுவன.

ஊடல் துறையின் நுட்பமறிந்தோர், அன்புவழி அடைவதற்கே இல்லறவாழ்வில் ஊடல் நிகழ்கிறது என்ற உண்மையை உணர்ந்து போற்றுவர். ஊடல்

வாழ்க்கைக்குக் கூர்த்த மதி வேண்டும்; நுண்ணிய உணர்வு வேண்டும்; திண்ணிய உரிமை உணர்ச்சியும் வேண்டும். இவை அனைத்தும் மருதநில மக்களுக்குச் சிறப்பாக அமைந்த செல்வங்களென்பதை ஊன்றி ஆராய்வார் உணர்தல் ஒருதலை. வற்றாத நெல் வளம் கொழிக்கும் வண்மை சான்றது மருத நிலம். தண்ணிய நீரும் நுண்ணிய மூளையை வளர்க்கும் சொற்சோறும், நெற்சோறும் வேண்டுமளவும் பெறும் மருத நில மக்கள், அறிவிலும் உணர்விலும் உரிமை வேட்கையிலும் சிறந்திருத்தல் இயல்பே அன்றோ? மருதநில மக்கள் கலை உணர்ச்சி மிக்கவர்கள்; கவிதை உணர்ச்சி மிக்கவர்கள் என்ற செய்தியை மருதக்கலி ஒன்றன் அடிகள் அழகுற எடுத்தோதுகின்றன.

> 'செதுமொழி சீத்த செவிசெறு வாக
> முதுமொழி நீராப் புலன்நா வுழவர்
> புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர!

என்பது காண்க.

அடுத்து நாம் காணவேண்டுவது, தலைவன் தலைவியில் நிகழ்ந்த ஊடலுக்குக் காரணம் என்ன என்பதே. பழந்தமிழ் நாட்டு மருதத்தலைவன் செல்வச் சிறப்பில் செம்மாந்து இருந்த பெருந்தமிழன். அவனுடைய வாழ்க்கையில் மிதமிஞ்சிய பொருள் வளமும், கலையுணர்ச்சியும் காரணமாகப் புகுந்த தொரு குறையே ஊடலுக்கு வித்தாய் விளங்கியது என்ற செய்தியைச் சங்க நூல்கள் நமக்குத் தெரிவிக்கின்றன. 'ஒருவன் ஒருத்தி வாழ்வே காதல் வாழ்வின்

தலைசிறந்த குறிக்கோள் என்று போற்றிய தமிழ் நாட்டுத் தலைமகனிடத்திலா இத்தகைய குறைபாடு வேர்கொள்ள வேண்டும்? அதையோ சான்றோர்களாகிய புலவர்கள் தம் செந்நாவால் விரித்து விரித்துப் பாடவேண்டும்' என்ற ஐயமும், வருத்தமும் நம் அகத்தின்கண்ணே எழுதல் கூடும். ஆனால், இந்த இடத்தில் நாம் ஓர் உண்மையை ஓர்தல் வேண்டும். மக்களின் வாழ்க்கையைக் கவிதையாய்ப் பாடுகின்ற கவிஞன் குறிக்கோள் உடையவன்தான். எனினும் குறிக்கோளைப் போற்ற ஆர்வமிருக்கும் ஆற்றலில்லாக் காரணத்தால் தவறி விழும் மிகமிகப் பெரும்பாலோரைக் கொண்டதே இவ்வுலகம் என்பதை அவன் அறியாதவனல்லன். மேலும், அவ்வாறு தவறி விழும் வீழ்ச்சிக்கு உலகில் ஆடவர் இரையாகின்றனரே யன்றித் தீந்தமிழ் நாட்டுத் தெய்வக் கற்புடை மகளிர் அக் குறைக்கு ஒருபோதும் இரையாகாத திறம் படைத்தவர் என்பதையும் அகத்திணை இலக்கியம் யாத்த சங்ககாலச் சான்றோர் அறிவர்.

'வாழ்க்கையின் ஆராய்ச்சியே சிறந்த இலக்கியம்; கண்ணெதிரே காணும் உலகமும், கவிஞன் படைக்கும் காவிய உலகமும் ஒன்றுக்கொன்று பெரிதும் முரண்பட்டவையல்ல,' என்று பிறநாட்டுப் பேரறிஞர் கூறுவர். அவர்தம் ஆய்வுரைகளையும் நம் மனத்தகத்தில் இருத்திக்கொண்டு சங்க இலக்கியத்தை—பழந்தமிழ் அகத்திணை நூல்களை—நாம் ஆராய்வோமானால் உண்மைக்கு மாறாகா வகையில்—உலகப் போக்கை முற்றிலும் மறைக்காத நெறியில்—

பாடப்பட்ட உணர்வுடைய கலைச் செல்வங்களே சங்க இலக்கிய மருதத்திணைக் கவிதைகள் என்னும் வாய்மை தெள்ளிதின் விளங்கும்.

பழந்தமிழ் நாட்டு மருதத்தலைவன் அழகிற் சிறந்தவன்; அடலாண்மை மிக்கவன்; அருளாளன்; ஈத்துவக்கும் இன்பத்தைப் பெரிதெனப் போற்றும் பண்பாளன்; கலைச்செல்வன்; ஆடல் பாடல்களில் எளிதில் நெஞ்சைப் பறிகொடுக்கும் நீர்மையன்; குற்றமுணர்ந்து குணவாளுகும் பெற்றியுடையபெருந் தகை; மனைவியை மதிக்கும் மாண்புடையோன்; தன் செயல் தவறென உணர்ந்த நிலையில் தலைவிபால் மன்னிப்புக் கேட்கவும் கூசாத கொள்கையன். இச் செய்திகளெல்லாம் எவ்வளவு அழகாக ஒரு பெரியா ரால் மருதக் கலியில் சித்திரிக்கப்பட்டுள்ளன பாருங் கள்: தலைவி ஒருத்தி தன் காதற் கணவனைப்பற்றித் தன் மகனிடம் கூறும் செய்தியாய் அப்பாட்டு அமைந்துள்ளது. தாய் பிள்ளையிடம் பேசுகிருள்.

'என் செம்மலே, நீ அழகால் உன் தந்தை யாரை ஒத்திருக்கின்ருய். உன் தந்தையார் மாற் ருரை வென்று களங்கொள்ளும் வெற்றிவீரர்; நுகத் துப் பகலாணி போன்று நடுவுநிலை திரியாது முறை செய்தலில் வல்லவர்; வேண்டியார்க்கு வேண்டுவன விரும்பி அளித்துப் புரக்கும் அருளாளர். செல் வமே, நீ அவரைப்போல வீரத்தாலும் நடுவு நிலையா லும் ஈகையாலும் சிறந்து விளங்குவாயாக! ஆனல், மனம் ஒன்றுபட்டு வாழும் காதலியைப் பிரிந்து வாழும் பண்பு—அவர் கவின் கெடுமாறு

வருத்தும் கொடுமை—அவர் துயர் உணராது வாழும் தீய பரத்தைமை—உனக்கு வேண்டா!'

'செம்மால்! வனப்பெல்லாம் நுந்தையை ஒப்பினும் நுந்தை
நிலைப்பாலுள் ஒத்த குறிளன்வாய்க் கேட்டொத்தி!
கன்றிய தெவ்வர்க் கடந்து களங்கொள்ளும்
வென்றிமாட் டொத்தி பெரும!மற் றெவ்வாதி
ஒன்றினேம் யாமென் றுணர்ந்தாரை நுந்தைபோல்
மென்றோள் நெகிழ விடல்!
பால்கொளல் இன்றிப் பகல்போல் முறைக்கொல்காக்
கோல்செம்மை ஒத்தி! பெரும!மற் றெவ்வாதி
கால்பொரு பூவிற் கவின்வாட நுந்தைபோல்
சால்பாய்ந்தார் சாய விடல்!
வீத லறியா விழுப்பொருள் நச்சியார்க்
கீதல்மாட் டொத்தி பெரும!மற் றெவ்வாதி
மாதர்மென் னோக்கின் மகளிரை நுந்தைபோல்
நோய்கூர நோக்காய் விடல்.

மருதக் கலியை மேற்போக்காகப் படிப்பவர்க்கு, 'பழந்தமிழ் மகள் அடுப்பூதி வாழும் அடிமையாகவே இருந்தாள்; தலைவனுடைய பரத்தைமைக்கு அவள் தயங்காது உடன்பட்டிருந்தாள்; தலைவியின்பால் தலைவனுக்கு இருந்த காதல் ஆழமானதன்று' என்றெல்லாம் தோன்றும். ஆனால், ஊன்றி ஆராயும்போது இவ்வையங்கள் அகலல் உறுதி. மருதத்திணைப் பாடல்கள் பல நமக்குக் காட்டும் காட்சிகளால் சிற்சில உண்மைகள் தெள்ளத் தெளியப் புலனாகின்றன. தன் அன்பைப் பெற விழையும் பரத்தையர் பலர் இருக்கத்தலைவன் தலைவியின் வருத்தம் அறிந்தவுடனே அவளிடம்

வருகின்றான்; தலைவியின் ஊடலை உணர்கின்றான்; அதைத் தீர்க்க முயல்கின்றான்; 'என்பால் பிழை யுளதாயின் நீ சினங்கொள்ள உரிமையுண்டு,' என்று பணிந்து பேசுகின்றான்; தன் குற்றமறிந்து மன்னிப்பும் வேண்டுகின்றான். இவையனைத்தும் தலைவன் உள்ளத்தில் ஆழ்ந்திருந்த உண்மைக் காதலைப் புலப்படுத்துகின்றன அல்லவா?

மேலும், தலைவன் பரத்தையிடமிருந்து பிரிந்து வந்தபோது தலைவி ஊடிக்கூறும் சொற்கள் அவள் உரிமை உணர்வைக் காட்டுகின்றன.

'உம்மை இங்கு வரச்சொன்னவர் யார்? நீர் எம்மைத் தொடல் வேண்டா; நீர் யார் எம்மைத் தொட? பிரிவாற்றாது யாம் வருந்துகின்றோம்; உமக்கு யாம் அடிமையோ?' என்றெல்லாம் தலைவி கேட்கின்றாள். சங்ககாலத் தமிழ் மக்களின் வாழ்வின் கூறுபாடுகளை அறியாதார், 'தலைவி' தலைவன் வீட்டில் அடிமையாக வாழ்கின்றாள்,' என்று எண்ணுவர். ஆனால், தமிழ்த் தலைவி வாழும் வீடு அவள் வீடேயாகும். 'எம்மனை' என்று தான் வாழும் தன் வீட்டைப் பெருமையோடு அவள் கூறிக் கொள்கிறாள்.

மருதத் தலைவனுடைய பண்பு நலங்கள் பலவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் பயன்படும் பாத்திரங்களாக அகத்திணை இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளோர் அருமைத் தலைவியும், அறிவுசால் தோழியும், யாழ்வல்ல பாணனும், இற்பரத்தை

காதற்பரத்தை என மூவகைப்பட்ட இருமனப் பெண்டிரும் ஆவர். இவர் யாவரும் மருதத் தலைவனது உள்ளப்பாங்கினை நமக்கு ஒவ்வொரு வகையில் விளக்கிவைக்கின்றனர்.

தலைவனது பரத்தைமைப்பண்பு வாழ்வுபெற வழிவகுத்துக் கொடுப்பவன் பாணன்தான். இசை பாடித் தலைவனை மகிழ்விக்கவந்த அவன், தன் தொண்டின் வரம்பிகந்து, தன்னைப்போலக் கலைத் துறையில் சிறந்து விளங்கிய பரத்தை ஒருத்தியின் அழகுவலையில்—கலைவலையில்—விடுதலறியா விருப்பு வலையில்—தலைவனைச் சிக்கவைத்தான்; தலைவன் பரத்தை வீட்டில் போய்த் தங்குவதற்குரிய ஏற்பாடுகளையெல்லாம்—திருமண ஏற்பாடுகள் போல—விரிவாக நடைபெறச் செய்தான். குறிப்பிட்ட நாளில்—குறிப்பிட்ட நேரத்தில்—பரத்தை வீட்டிற்குச் சென்று புதியவனாக வருந் தலைவனை வரவேற்கப் பாணன் விரைந்தான்; பரத்தை வீட்டிற்குப் போக வேண்டிய பாதையின் வழியில் இருந்தது தலைவிவீடு. எனவே, தலைவியின் கண்ணில் அகப்படாமல் கள்ளன்போல ஒளிந்து போகக் கனவு கண்டான் பாணன். ஆனால், எப்படியோ எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி, அவன் கள்ளத்தனத்தைத் தலைவியறிந்து நகையாடும்படி செய்துவிட்டது.

கையிலே யாழொன்றை ஏந்திக்கொண்டு வீதி வழியே விரைந்து கொண்டிருந்தான் பாணன். அப்பொழுது எதிர்பாராதவகையில் கன்றொன்றை ஈன்ற பசு குறுக்கே ஓடிவந்தது; பாணனைக்கண்டு

மருண்டு பாய்ந்தது; அஞ்சினன் பாணன். வேறு வழியின்றி, செய்வதறியாத நிலையில் தலைவியின் வீட்டிற்குள்ளேயே நுழைந்து கலங்கி நின்றான். கண்டாள் தலைவி; அவள் மனத்தில் இரக்கம் தோன்றவில்லை; எள்ளி நகையாடவேண்டும் என்ற எண்ணமே தோன்றியது. உடனே அவள் தன் மனக்கருத்தை இகழ்ச்சிக் குறிப்போடு பாணனிடம் சென்று தெரிவித்தாள். 'பாணனே, இந்த வீடு அன்று உங்கள்வீடு; அதோ அந்தத் தெருவில் உள்ளது,' என்றாள். பாணன் நாணித் தலை கவிழ்ந்தான்.

இந் நிகழ்ச்சியைத் தலைவி மறக்கவில்லை. சில நாள் கழித்துத் தலைவன் பரத்தையின் வீட்டிலிருந்து திரும்பி வந்தபோது உரிமை உணர்வோடு ஊடினாள்; அப்போது நெறிதவறி நடந்த தன் தலைவன் தன் குற்றம் உணர்ந்து திருந்தும் வகையில் அவனைக் கடிந்தாள். அப்போது தோழியிடம் சொல்வதுபோல் முன்னர் நடந்த பாணன் கதையைச் சொல்லி, 'தோழி! இன்று நினைத்தாலும் அது சிரிப்பாய் இருக்கிறதல்லவா?' என்று எடுத்துக் காட்டினாள்; இடித்துரைத்தாள்.

இன்னொரு காட்சி: பரத்தையின் வீட்டில் சில நாள் தங்கிவிட்டுத் தலைவியின்பால் திரும்பிய தலைவன் அவளை நேரே அணுக அஞ்சினான். குற்றமுள்ள நெஞ்சம் அவனைக் குத்திப் புண்படுத்தியது. எனவே அவன் தலைவியின் அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய தோழியிடம் சென்றான்; தன் குறை கூறி, நிறை வேண்டினான். ஆயினும், தோழி

மறுத்தாள். அப்போது அவள் கூறிய சொற்கள் நுட்பமும் திறனும் வாய்ந்தவை. நாகரிகமாகக் கூறித் தலைவன் மனம் நொந்து வருந்தும்படி செய்தாள். அந்த அழகே அழகு!

தலைவன் மருதத்தலைவன் அன்றோ? எனவே, தோழி அவனுடைய மருத நிலத்தைச் சிறப்பிப்பவள்போல ஓர் எருமையின் வாழ்வை எடுத்துரைத்து, அதன் நெறியற்ற செயலைக் கண்டிக்கும் உவமை வாயிலாகத் தலைவனுடைய தீய போக்கைக் குறிப்பாகச் சுட்டிக்காட்டினாள். 'உமது ஊரில் தனக்கு இயல்பான சேற்றில் நின்று வெறுத்துவிட்ட எருமை, ஊரார் உறங்கும் நள்ளிரவில் வலிய கட்டையறுத்துச் சென்று, கூர்மையான முள்வேலியைத் தன் கொம்பால் களைந்து, நீர் மிகுந்த வயலில் பாய்ந்து மீன்களை ஒருங்கே அஞ்சி ஓடச்செய்து, அழகிய வள்ளைக்கொடிகளை மயக்கிவிட்டு, தாமரை மலரைத் தின்னும்,' என்றாள். இவ்வாறு கூறியது வாயிலாகத் தோழி, 'தலைவரே நீர் தலைவியோடு வாழும் இயல்பான இல்வாழ்க்கையை வெறுத்துவிட்டு, நாணத்தையும் நீக்கி, யாரும் அறியாதபடி நெறிகெட்டு நடந்து பரத்தையோடு வாழ்கின்றீர்,' என்பதைச் சொல்லாமலே சொல்லிவிட்டாள். அள்ளூர் நன்முல்லையார் பாடிய அழகிய அகப்பாடல் இவ்வறிவுசால் தோழியின் சொற்றிறத்தையும், மனப்பண்பையும் நன்கு படம்பிடித்துக் காட்டுகின்றது.

சங்ககாலப் பரத்தை பொல்லாதவள்; மிகவும் பொல்லாதவள். கலையுள்ளம் படைத்தவள்தான்;

என்றாலும் அக்காலச் சமூக அமைப்பின் கொடுமைக்கு இரையான அவள், சற்றும் நாணமில்லாமல், உயர்ந்த பெண்மை நலமெல்லாம் இழந்து நடந்துகொள்ளும் போக்கை, அகத்திணை இலக்கியம் காட்டுகின்றது. தலைவனோடு உறவு கொண்டிருந்து, அவன் உள்ளத்தையும் பொருளையும் உறிஞ்சும் இறுமாப்பு, அவளுக்கு எப்போதும் உண்டு.

யாருடைய பழிச்சொல்லையும் மதிக்காத மனம் உடைய அவள், ஒருநாள் தன்னைத் தலைவியும் தோழியும் பழித்துப் பேசினர் என்று கேள்வியுற்றாள்; ஆற்றெணுச் சினங்கொண்டாள். அப்போது அவள் பேசிய பேச்சு, அவள் அஞ்சா மன இயல்பைக் காட்டும். தன்பால் வந்து மதியையும் நிதியையும் இழந்து விட்டுப்போகும் தலைவனைப்பற்றி அவள் கொண்டிருந்த எண்ணங்களைப் புலப்படுத்தும் முறையில் அவள் முழங்கினாள்.

'அஞ்சியஞ்சி வாழ்கின்றான் இந்தத் தலைவன். தடம் பொய்கையில் இரை விரும்பி எழுந்த பெரிய வெள்ளிய ஆண் வாளைமீனை உண்ணவேண்டும் என்று முயலும் நாரை, அஞ்சி யஞ்சி மெல்ல மெல்லத் தளர்ந்து நடக்கும். காவலுள்ள வீட்டில் கள்ளன் மெல்ல மெல்ல அடியெடுத்து வைப்பான். அத்தகைய ஊரனின்—மருதத் தலைவனின் — உறவு காரணமாக இனி எனக்கு ஆவது ஆகட்டும். நாணம் எதற்கு? அந்தத் தலைவன் எங்கள் தெருப்பக்கம் வரட்டும்; 'அவனுடைய பெண்டிர் பார்க்கும்படி அவன் மாலையையும் ஆடையையும் பற்றி, ஆரியர்

கள் பழக்கி வைத்த பெண்யானை ஆண்யானையைப் பிடித்துத் தருவதுபோல, என்தோளே கட்டுத்தறியாக, என் கூந்தலைக்கொண்டு கட்டி, அவன் மார்பைச் சிறைப்படுத்துவேன்!' என்றாள்.

எப்படிப் பரத்தையின் பேச்சு! செல்வ வளம் காரணமாக, கலை உணர்ச்சி காரணமாக, இப்படிப்பட்டவள் கையில் சிக்கிக்கொள்வதும், பின்னர்க் கற்புடைய தலைவியின் பொறப்பாலும், அன்பாலும் மீண்டும் உய்தி பெறுவதுமே மருதத்தலைவனுக்குரிய சிறப்பியல்களாய் விளங்கி வந்திருக்கின்றன.

ஐங்குறுநூறு என்னும் அழகிய அகப்பொருள் இலக்கியத்தின் முதல் நூறு, மருதத்திணையை அடிப்படையாகக் கொண்டது. ஆசிரியர் ஓரம் **போகியார்** அதன்கண் யாத்துள்ள ஒரு நூறு பாடல்களுள் அழகியதொரு மணியை மட்டும் ஈண்டுக்காண்போம். ஓரம் போகியார் தம் பாடலில் சங்க இலக்கியத்துக்கே தனிச்சிறப்பாக அமைந்த உள்ளுறை ஒன்றைச் செவ்விதின் கையாண்டு கவிதை பாடியுள்ள திறம் எண்ணி எண்ணி இன்புறற்குரியது. பரத்தைமையாகிய தீயொழுக்கத்தின்பாற் பட்ட தலைவனை நோக்கித் தோழி கூறுவதாக ஆசிரியர் அப்பாடலை அமைத்துள்ளார். தோழி பேசுகின்றாள்:

'பூத்துப் பயன்படாக் கரும்பினையும், காய்த்துப் பயன்படும் நெல்லினையும் உடைய ஊரன் மார்பு, ஊரவர்க்கெல்லாம் பொதுவாகிய பழனம் போலாது

இல்லறத்துக்கு வேண்டுவனவே நினைந்து ஒழுகும் தலைவிக்கே உரித்தாகுக'—

'பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்
கழனி யூரன் மார்பு
பழனமா கற்க எனவேட் டோமே.'

இதுவே, புறத்தொழுக்கத்திலே நெடுநாள் ஒழுகி, 'இது தகாது' எனத் தெளிந்த மனத்தனாய், மீண்டும் தலைவியோடு கூடி ஒழுகிய தலைமகன் தோழியோடு சொல்லாடி, 'யான் அவ்வாறு ஒழுக, நீவிர் நினைத்த திறம் யாது?' என்றதற்குத் தோழி கூறிய பதில். இச்சொல்லாடலில், 'பூத்துப் பயன்படாக் கரும்பினையும், காய்த்துப் பயன்படும் நெல்லினையும் உடைய ஊரன்' என்றமையால், 'ஈன்று பயன்படாப் பொதுமகளிரையும், குழந்தை பெற்றும் பயன்படும் குலமகளிரையும் ஒரு தன்மையராகக் கருதுபவன் தலைவன்,' என்ற அவனுடைய குறை சுட்டிக் காட்டப்படும் திறம் பேரின்பம் தருவதாகும்.

எட்டுத் தொகையுள் முதற்கண் வைத்து எண்ணப்படும் ஏற்றம் சான்றது, நல்ல திணையைப் பேசும் நற்றிணை. அந்நூலுள் வரும் ஓர் இனிய காட்சியையும் காண்போம். பரத்தை வீட்டிற்குச் சென்று தங்கியிருந்த தலைவனைத் தலைவி எதிர் கொள்ளாமல் மறுத்து ஊடல் கொண்டாள். ஊடலைத் தணிக்க வகையறியாமலும்—வீட்டினுள் நுழையாமலும்—தலைவன் திகைத்தான். எதிர்பாராமல் விருந்தினர் ஒருவர் வீட்டிற்கு வந்தார். அவர் வரக்

கண்டதும் அவரை அழைத்துக்கொண்டு தலைவன் மனையுள் புகுந்தான். 'விருந்தினரை இன்முகங் கொண்டு வரவேற்க வேண்டும்; குடும்பத்திலுள்ள குழப்பத்தைப் புலப்படுத்தாமல் ஒழுகவேண்டும்,' என்பதைக் கடமையாக உணர்ந்தவள் தலைவி; ஆதலின், வந்த விருந்தை வரவேற்று ஊடலை மறந்து முகமலர்ந்து இன்சொல் பேசித் தன் கடமைகளைச் செய்யலானாள்.

இவ்வாறு அன்புருவாகத் தன் தலைவி மாறியதைக்கண்ட தலைவன், 'இத்தகைய விருந்து மேன்மேலும் வந்து ஊடல் தணித்து மகிழ்விக்க வேண்டும்!' என்று விரும்பினான். அவன் சொன்னான், 'என்னிடம் ஊடல் கொண்டிருந்தும் இவ்வாறு சமையலறையில் கடமையில் முனைந்திருக்கிறாள் தலைவி; இத்தகைய நிலையை ஏற்படுத்தி உதவிய விருந்து எனக்கு அடிக்கடி வர விரும்புகிறேன்; இவ்வாறு வந்தால் ஊடலால் சினம் கொண்ட கண்கள் சிவப்பு இல்லாமல் மறைந்து சிறிது கூரிய பற்கள் தோன்றப் புன்முறுவல் கொண்டதான காதலியின் முகத்தைக் காணப்பெறுவேன்!' என்று.

மருதத்திணை ஊடல் ஒழுக்கம் பற்றியது என்பதை நாம் அறிவோம். அவ்வூடல் பரத்தையின் பிரிவு காரணமாக நிகழும் காட்சியையே, பெரும்பாலான அகத்திணை இலக்கியங்கள்—சங்க நூல்கள்—நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. இது குறித்துப் பேரறிஞராகிய டாக்டர். சாமிநாத ஐயர் கூறும்

சிறந்த குறிப்பொன்றை ஈண்டு நினைவுபடுத்திக் கொள்ளல் பயனுடையதாகும்; அது வருமாறு

'பரத்தையிற் பிரிவு வரையில் தலைவன் தலைவியர்களுடைய அன்பு தலைமைக்கருத்தாய் இருந்து இவ்வரலாற்றை நடத்துகின்றது. பரத்தையிற் பிரிவில் தலைவியின் கற்பே இலக்காக நிற்ப, அதனைச் சுற்றிப் பலப் பல நிகழ்ச்சிகள் புனையப்படுகின்றன. எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள்காண்பது அறிவாதலின், பலவகைக் குறைபாடுகள் பொருந்திய பரத்தையிற்பிரிவிலும், கற்பு நெறியின் சிறந்த தன்மை புலவர்களாற் புலப் படுத்தப்பட்டிருத்தல் அறிந்து மகிழ்தற்கு உரியதாகும்.'

மருதத்திணை—நுட்பமான அறிவின் பயனாக விளையும் சிறந்த ஊடல் ஒழுக்கம்—பரத்தையின் பிரிவை ஒட்டித்தான் நிகழவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அறத்தையும் கலையையும் தம் இரு கண்களாகப் போற்றிய திருவள்ளுவப் பெருந்தகையார் காதற்சுவை ததும்பப் பாடியுள்ள காமத்துப்பாலில் பரத்தையிற் பிரிவிற்கு ஒரு சிறிதும் இடம்தராது ஊடலைப் போற்றியுள்ள திறமை இதற்குத் தக்க சான்றாகும். மேலும்,

திருவள்ளுவர், ஊடல் இன்பத்தின் சிறப்பினை உணர்த்துவதற்கே புலவி, புலவி நுணுக்கம், ஊடல் உவகை என்று மூன்று அதிகாரங்களைத் தம் நூலின்முடிவில் அமைத்துள்ளார். 'புலவியஃ தெவ

னே வன்பிலங்கடையே' என்று குறுந்தொகை போற்றும் இச்சீரிய ஊடல் இன்பத்தை,

'ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும்'

'ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ இரா!'

'புலத்தலிற் புத்தேணா டுண்டோ?'

'உப்பமைந் தற்றாற் புலவி'

என்று ஊடலைப் போற்றும் திருமொழிகளெல்லாம் தமிழ்மறை மொழிகளல்லவா? இதனால் மருதத்திணைக்கு உயிர்நாடியான ஊடல் ஒழுக்கத்தை அச்சான்றோர் எவ்வளவு உயர்வாகப் போற்றியுள்ளார் என்பது தெள்ளத் தெளிவாக விளங்குகிறதன்றோ? ஆனால், இவ்வளவு சிறப்பைத் திருவள்ளுவர் ஊடலுக்கு அளித்திருந்தும், அது பரத்தையிற் பிரிவு வழிப்பட்டதாகவே இருத்தல் வேண்டும் என்று குறிப்பாகவும் கூட யாண்டும் அவர் காட்டாததை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் நம் உள்ளம் பூரிக்கின்றது; ஊடல் இன்பம்மருதநிலத் தலைவனின் தீயொழுக்கத்தின்பாற் பட்டதாகவே இருத்தல் வேண்டும் என்ற தவறான கருத்தும் நம் மனத்தை விட்டுத் தானாக அகல்கின்றது. அம்மட்டோ?

'புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே.'

என்று ஓதிய தொல்காப்பியர், தாம் கூறிய உரிப் பொருள்களுள் ஊடலை இறுதிக்கண் வைத்த நுட்பமும், ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறள் களால் உலகை அளந்த உத்தமர்,

> 'ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பங்
> கூடி முயங்கப் பெறின்'

என்ற மணிமொழியைத் தமிழ்மறை நாலின் இறுதித் திருமொழியாக வைத்ததன் திட்பமும் புலனாகின்றன.



# 13. அன்றாட வாழ்வில் இலக்கியம்

பண்பும் பயனும் நிறைந்தது இலக்கியம்; கலையும் கடமையும் கலந்தது அன்றாட வாழ்க்கை. தனி மனிதன் கலை அறிவிற்கும், கடமை நிலைக்கும் ஏற்ப இவற்றின் தொடர்பு மென்மையுறுதலும், வன்மை பெறுதலும் இயற்கை.

அன்றாட வாழ்க்கையில் இலக்கியம் பயன்பட்டிருக்கும் செய்தியைப் பழந்தமிழ் நூல்களிலும் காணலாம்.

ஆலத்தூர் கிழார் என்ற அருந்தமிழ்ப் புலவர் ஒருவர் ஒரு முறை சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்பால் சென்று தம் உள்ளத்தில் நிறைந்துகிடந்த நன்றி உணர்வைப் புலப்படுத்தக் கருதினார்; செய்ந்நன்றி மறத்தலினால் வரும் கேடுகளை நினைவு கூர்ந்து, அத்தகைய :கேடான பண்பைத் தாம் மேற்கொள்ள விரும்பவில்லை என்று விளம்ப விழைந்தார். அப்போது அவர்க்குச் செய்ந்நன்றி மறத்தலினால் வரும் ஏதங்கள் பற்றித் தம் முன்னோர் ஓதிச் சென்ற மறை மொழிகள் நினைவிற்கு வரலாயின. அனைத்திற்கும் மணிமுடி கவித்தாற்போல.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வு இல்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (குறள்-110)

என்ற வள்ளுவர் பொன்மொழி அவர் கருத்துலகில் ஒளி வீசியது.

ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி இல்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ! (புறம் 34)

என்று உணர்ச்சி ததும்பப் பாடலானர். இது புறநானூற்று உலகில்! இனி, சிலப்பதிகார உலகிற்குச் செல்வோம். அங்கே ஓர் அருமையான காட்சி! இலக்கியம் அன்றாட வாழ்வில் பயன்படும் அற்புதம்! காண்போம்.

சிலப்பதிகாரக் காலத்திலேயே தமிழ் நாட்டிலே இராமாயண — மகாபாரத — நளச் சக்கரவர்த்தி கதைகள் எல்லாம் நன்கு பரவியிருந்தன. அவை பற்றிய குறிப்புக்கள்—பழமொழியாய்—நெடுமொழியாய்—விளங்கும் பான்மைபெற் றமைந்தன!

கோவலன் கண்ணகி கதை அனைவரும் அறிந்த ஒன்றே.

'............யாவும்
சலம்புணர் கொள்கைச் சலதியொடுஆடிக்
குலம்தரு வான்பொருள் குன்றம் தொலைத்த
இலம்பாடு நாணுத் தரும்'

என்று கூறிக் கண்ணகியுடன் கோவலன் வினையின் ஏவலை ஏற்றுப் பொழுது விடிவதற்குள் பூம்புகாரை விட்டு நீங்கி மாமதுரைக்குப் புறப்பட்டான். வழியில் கவுந்தி அடிகளைக் கோவலனும் கண்ணகியும் சந்தித்தனர். அருள் சான்ற நல்லன்னையாரது அன்பின் துணைகொண்டு பல்வேறு நிகழ்ச்சிகளையும் உணர்ச்சிகளையும் கடந்து, மதுரையை அணுகினர் கோவலனும் கண்ணகியும். அந்நிலையில் தனக்கும், தன்னால் கண்ணகிக்கும் நேர்ந்த துன்பங்களை எண்ணி உணர்ச்சி வயப்பட்டவனாய்.

'அறியாத் தேயத்து ஆரிடை உழந்து
சிறுமை உற்றேன் செய்தவத்தீர்!'

என்று தம்பால் வந்து வருந்திய கோவலனுக்கு ஆறுதல் கூறிய கவுந்தியடிகளின் வாசகங்கள், உள்ளத்தை உருக்கும் நீர்மையன ; இராமகாதையும், நளசரித்திரமும் நாட்டு மக்கள் சிந்தனையில் ஊறியிருந்த இலக்கியச் செல்வங்கள் என்பதைப் புலப்படுத்துவன ; அன்றாட வாழ்க்கையில் இலக்கியம் பயன்படும் சிறப்பைச் சுட்டிக் காட்டும் திறம் படைத்தன:

கவுந்தி கூறும்: காதலி தன்னொடு
தவம்தீர் மருங்கின் தனித்துயர் உழந்தோய் !
தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீஅறிந் திலையோ ! நெடுமொழி அன்றோ ?
வல்ஆடு ஆயத்து மண்ணரசு இழந்து
மெல்லியல் தன்னுடன் வெங்கான் அடைந்தோன்
காதலின் பிரிந்தோன் அல்லன்: காதலி

தீதொடு படூஉம் சிறுமையள் அல்லள்:
அடவிக் கானகத்து ஆயிழை நன்னை
இடையிருள் யாமத்து இட்டுநீங் கியது
வல்வினை அன்றோ மடந்தைதன் பிழையெனச்
சொல்லலும் உண்டேல், சொல்வாயோ நீ!'

இவை கவுந்தி அடிகளின் ஆறுதல் மொழிகள். இதிகாச காலத்துக் கதைகளும், இலக்கியங்களும் கோவலன் வாழ்க்கையில் ஆற்ருெணுப் புண்ணை ஆற்ற வல்ல மருந்தாகப் பயன்படும் மாயம் இவ்வடிகளில் விளங்குகின்றதன்ருே![1]

அன்ருட வாழ்க்கையில் இலக்கியம் பெறும் சிறப்பினை ஆராயும்போது சமய நூல்கள் சிறப்பிடம் பெறுகின்றன. இவ்வுண்மை சமய உணர்ச்சி மிக்க கீழ்த்திசை நாடுகளில் மட்டுமல்லாமல், மேற்றிசை நாடுகட்கும் பொருந்தியுள்ளது. அதனுலேதான் அந்நாட்டு அறிஞர்களுள் ஒருவர், 'பண்டிதர்கள் பிளாட்டோவிலிருந்து மேற் கோள்களைக் காட்டலாம். ஆனுல், இலட்சக் கணக்கான மக்கள் பைபிளிலிருந்தே மேற்கோள்களைக் காண்கின்ருர்கள். அன்ருடம் உழைத்து ஓய்ந்து போகும் வாழ்க்கையில், உறுதியும் உரமும் அவர்கட்கு அந்த நூலிலிருந்தே கிடைக்கின்றன!'[2] என்ருர்.

1. இவ்வாறே இராமாயணத்தில் வரும் ஒரு நிகழ்ச்சி சங்கப்புலவர் ஒருவரால் உவமையாக எடுத்தாளப் பெறுதலைப் புறம். 738 லும் காணலாம்.

2. 'Scholars may quote Plato in their studies, but the hearts of millions will quote the Bible at their daily toil and draw strength from its inspiration.'

நம் நாட்டில் அன்றாடம் பத்தி நூல்கள் சில வற்றையேனும் பாராயணம் செய்யும் பண்பாடு இன்றும் நிலவி வருகிறது. பழந்தமிழ் நூலாகிய திருமுருகாற்றுப்படை இத்தகைய பாராயண நூல்களுக்குத் தலைமை தாங்குகிறது. அந்நூலின் இறுதியில் காணப்படும் பிற்கால வெண்பா ஒன்று திருமுருகாற்றுப்படையிடம் அடியவர் உலகம் கொண்டிருந்த அரிய நம்பிக்கையைப் புலப்படுத்தும்.

'நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினல்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த எல்லாம் தரும்.'

சென்ற சில தலைமுறைகட்கு முன்பு கூட (இப்பொழுதும் சிலரிடம் உண்டு) நம் நாட்டில் பெரிய புராணம் திருவிளையாடற் புராணம் போன்ற தெய்வீகத் தமிழ் நூல்களிடம் நம்மவர்க்கு இருந்த நம்பிக்கை பெரிது. மிகப் பெரிது! வாழ்க்கையில் எதிரிடக்கூடிய நன்மை தீமைகளை அந்நூல்களில் கயிறு சாத்திப் பார்க்கும் வழக்கம் இருந்ததாகத் தெரிகிறது. மக்களின் அன்றாட வாழ்க்கையில் சிறப்பாகச் சமய இலக்கியம் கொண்டிருந்த செல்வாக்கை இது புலப்படுத்தும்.

அன்றாட வாழ்வில் அல்லல்களை மறக்கவும், ஆறுதல் பெறவும், ஆனந்தம் கொள்ளவும் இலக்கியங்கள் பெருந்துணை புரிகின்றன. இதனுல் அன்றே 'நல்ல நூல்கள் நல்ல நண்பர்கள்' என்று உலகெங்

கும் சான்றோர்கள் ஒருமிக்கக் கருதினார்கள். இத னாலன்றோ, நல்ல நண்பர்களைப்போல நூல்களும் சிலவாகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றனவாகவும் இருக்கவேண்டும்;[1] என்று அறிவுரை பகரலாயி னர்? அம்மட்டோ! நல்ல நூல்கள் வாழ்வின் பொலி விற்குப் புதுப்புது எண்ணங்களை வழங்குகின்றன; எவ்வாறு வாழவேண்டும் என்று கற்பிக்கின்றன; புண்பட்டவர்களுக்கு ஆறுதல் புகல்கின்றன. கடின உள்ளம் கொண்டோரை இடித்துரைக்கின்றன; அறிவிலிகளைக் கண்டிக்கின்றன; அறிஞர்களை ஆதரிக்கின்றன;[2] என்றும் விளக்கம் தந்தார்கள்!

இவ்வாறு அன்றாட வாழ்விற்குப் பல்வகையா னும் துணை புரியும் இலக்கியங்கள் பெரும்பாலும் பல் வேறு கடமைச் சுமைகளால் தளர்ச்சியுறும் மனித வாழ்க்கைக்கும் புத்துணர்வும் புதுவாழ்வும் தரும் சிறப்பியல்பு படைத்தன. இவ்வியல்பு எல்லா நாட் டுச் சிறந்த இலக்கியங்கட்கும் எப்போதும் உண்டு. இவ்வுண்மையை உணர்ந்து கூறும் இருபேர் அறி ஞர்களின் அனுபவ உரைகளைச் சுவை கருதியும் பயன் கருதியும் ஈண்டுக் காணலாம்.

---

1. 'Books like the friends, should be few, and well chosen'-Fuller.

2. 'They give new views to life, and teach us how to live; they sooth the grieved, the stubborn they chastise, fools they admonish, and confirm the wise.'—Crabbe.

பன்னிரண்டு ஆண்டுகட்கு முன் சென்னைப் பச்சையப்பர் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராய்ப் புகழுடன் விளங்கிய காலஞ்சென்ற மோசூர் திரு. கந்தசாமி முதலியார் அவர்கள், திரு. ஆ. வி. கன்னைய நாயுடு அவர்கள் கலிங்கத்துப்பரணிப் பதிப்பிற்கு (1941) அளித்த மதிப்புரையில் கூறியுள்ள கருத்து வருமாறு.

"களைப்படைந்த போது இந்நூலில் 'எடுமெடும் எடுமென எடுத்ததோர்' (404) என்பது முதலிய சில தாழிசைகளை முடுக்காகச் சில நிமிடம் படிப்பேன். அதனால் களைப்புத் தீர்ந்துவிடும்."

ஒரு பெரும்புலவர் அன்றாட வாழ்க்கையில் இலக்கியத்தால் கண்ட அனுபவப்பயன் இது. இதே கருத்தை மேலைநாட்டு அறிஞர் ஒருவர் வாய்மொழியிலும் காணலாம். அவர்தம் கருத்துரையில், 'இலக்கியம் வாழ்க்கை முழுவதையும் ஆட்கொள்ளும் ஒரு தொழிலாகிவிட்டால், அது ஒரு வேதனைதான், சிற்சில மணி நேரங்களில் அதனிடம் நாம் சரண்புகும் போதுதான் அது நமக்கு மிகுந்த ஆறுதல் இன்பத்தை அளிக்கிறது. என் ஆரம்பகால வாழ்க்கையில் நான் ஒரு பாங்கில் கணக்கனாய் இருந்தேன். அப்போது நான் ஒவ்வொரு நாளும் காலைப்பத்து மணிமுதல் மாலை ஐந்துமணிவரை சாய்ப்புமேசையிடமே யிருந்து தொல்லைப்பட வேண்டியிருக்கும். அப்போதெல்லாம் வீடு திரும்பியதும் மாலை நேரத்தில் எழுத்திலும் படிப்பிலும் என் நேரத்தைச் செல

விட்ட போது எனக்கு உண்டான இன்பத்தையான் ஒரு போதும் மறக்க இயலாது!' 1

அன்றாட வாழ்க்கையில் நாம் ஒழுக்க நெறியில் நிற்க இலக்கியம் பெருந்துணை புரிகிறது. அறிந்தோ அறியாமலோ நாம் தவறு செய்யும் போது நம்மைத் தடுத்து நிறுத்தவும், ஒரோவழித் தவறிழைத்த பின் அதை நினைந்து உருகிக் கரைந்து அழுது, 'இனி அவ்வாறு செய்யோம்' என்று உறுதி கொள்ளவும் துணை புரிய வல்ல ஆற்றல் இலக்கியத்துக்கு இருப்பதுபோல வேறெதற்கும் இல்லை என்றே சொல்ல வேண்டும். இது ஒருபுறம் இருக்க, திருக்குறள் போன்ற பெருநூல்களிற் காணும் பலப் பல மணி மொழிகட்கும் உரிய உண்மைப் பொருளை நம் அன்றாட வாழ்க்கையும், அதில் அலைமோதும் உணர்ச்சிகளும், நிகழ்ச்சிகளுமே அவ்வப்போது விளக்கி வைக்கின்றன. அத்தகைய சந்தர்ப்பங்களில் எல்லாம் 'அன்றாட வாழ்க்கையைப்போல—அனுபவத்தைப் போல—சிறந்த உரையாசிரியன் இல்லை' என்றே நாம் எண்ணமிடத்தோன்றுகிறது.

---

1. When literature is the sole business of life, it becomes a drudgery. When we are able to restore to it only at certain hours, it is a charming relaxation. In my earlier days I was a banker's clerk, obliged to be at the desk every day from ten till five' O clock; and I shall never forget the delight with which, on returning home, I used to read and write during the evening.'—Rogers.

அன்றாட வாழ்க்கையில் இலக்கியத்தை உணர்ந்து இன்பமும் பயனும் எய்தக்கூடிய வாய்ப்புப் பல நம் சமுதாயத்தில் அதன் இயற்கையை ஒட்டியே அமைந்துள்ளன. சான்றாக. இரவு நேரங்களில் ஊர்ப்புறங்களின் அமைதியான சூழ்நிலையைக் கிழித்துக்கொண்டு எழும் பண்டாரத்தின் குரலையும், அவன் பாடும் அரியபாடல்களின் உயரிய கருத்துக்களை எண்ணி நாம் உருகும் உருக்கத்தையும் நினைவுகூரலாம். அவ்வாறே நம் வீட்டில் பேசும் பொற்சித்திரமாக வுள்ள ஆருயிர்க் குழந்தை தன் அமிழ்தினும் இனிய மழலை மொழிகளில் பாடும் நிலாப்பாட்டையும், கிளிப்பாட்டையும், யானைப்பாட்டையும் எண்ணிப்பார்க்கலாம்.

முன்னர் எத்தனை முறை கேட்டிருப்பினும் தினம் தினம் நம் தேமொழியிடம், 'அம்மா ஒரு பாட்டுச் சொல்லு' என்று நாம் மீண்டும் மீண்டும் கெஞ்ச, அந்தத் தெய்வக் குழந்தை,

'நிலாநிலா வாவா, நில்லாமல் ஓடிவா,
மலைமேலே ஏறிவா, மல்லிகைப்பூக் கொண்டுவா,
நடுவீட்டில் வையே, நல்லதுதி செய்யே.

எனவும்,

'பச்சைக் கிளியே வாவா, பாலும் சோறும் கொண்டுவா,
சின்னப் பாப்பாவுக்கு ஊட்டு, சிரிக்கச் சிரிக்கப் பேசு'

எனவும்,

'யானை, யானை, அழகு யானை,
அழகரும் சொக்கரும் ஏறும் யானை,

கட்டுக் கரும்பை முறிக்கும் யானை,
காவேரித் தண்ணியைக் கலக்கும் யானை
குட்டி யானைக்குக் கொம்பு முளைத்தால்
பட்டண மெல்லாம் பறந்து ஓடும்.''

என்று ஆடியும் பாடியும் சொல்லும்போது, தாயும் தந்தையும் உற்றாரும் மற்றாரும் அடையும் இன்பத்திற்கு ஓர் எல்லையுண்டோ?

பண்டாரத்தை நினைத்தோம்; பாடும் பைங்கிளிகளை நினைத்தோம். நம்மையே நாம் ஏன் மறந்துவிடவேண்டும்? தனித்திருக்கும்போது நம் உள்ளத்து உணர்ச்சிகட்கு ஏற்ப நாம் கற்ற கவிதைகள் நம் உள்ளத்திலும் உதட்டிலும் 'ரீங்காரம்' செய்வதை எத்தனையோ முறை கண்டிருக்கிறோம்; கேட்டிருக்கிறோம். அம்மட்டோ! நண்பர்களோடு விருந்து உண்ணும்போது மோரைப்பார்த்ததும் ஒரு தனிப் பாடல் —துவையலைப் பார்த்ததும் இன்னொரு தனிப்பாடல்— சோற்றில் கல்லைக் கண்டதும் வேறொரு தனிப் பாடல்—இவ்வாறு வகைவகையாக நாம் சொல்லி மகிழ்வதும் உண்மையே அன்றோ? அவ்வளவோடும் நிற்கிறோமா! 'பச்சைமா மலை' என்ற பாட்டிற்கும் 'பூரியார் கண்ணும் உள' என்ற குறள் மொழிக்கும் புதுப் புதுப் பொருள் விரிப்பதில்லையா! மேலும், எத்தனை எத்தனை பழமொழிகளை அடுக்கடுக்காய் வழங்குகின்றோம்? அவையெல்லாம் சிறந்த இலக்கியமே அன்றோ?

அன்றாட வாழ்வில் பழைய இலக்கியங்களைப் போற்றுவதோடும் நம் முயற்சி நிற்பதில்லை. காலத்

திற்கு ஏற்ற எத்தனைப் புது இலக்கியங்களை உண்டு பண்ணவும் துணிகிறோம்! இல்லாவிட்டால் 'கிறள்' கள் எப்படித் தோன்றும்!

பொதுவாக நாம் இலக்கியம் என்றால் பாட்டு என்றே கருதுகிறோம். இது தவறு; சிறந்த உரையாடலும் இலக்கியமே. சாதாரணமாக அன்றாட வாழ்வில் பேசப்படும் பேச்சுக்களிலேதான் எவ்வளவு இலக்கியச்சுவை! வேலைக்காரியின் உரிமை முழக்கம், குழாயடியில் நடைபெறும் கொடும்போர், வீட்டு அம்மாளின் கட்டளைகள்-கோபக்கனைகள்—குழந்தைகளிடம் கொஞ்சும் மொழிகள்—அனைத்திலும் இலக்கியத்தை நுகரலாம். பொழுது விடிந்ததும் தாயின் மடியில் படுத்திருக்கும் தங்கையைத் தள்ளிவிட்டுப் பத்து வயது பையன் சோம்பல் விட்டுக்கொண்டே அன்னையின் மடியில் போய்ப் படுத்துக்கொண்டு, 'நான் தான் குழந்தை' என்ற 'இன்ப முனகல்' முனகும்போது, பெற்றவள், 'ஆமாம், குழந்தை பல்லைத்தட்டி ஏணையில் போட வேண்டியதுதான்' என்று கூறும்போது, கம்பரும் காளிதாசரும் கிட்ட வர முடியுமோ?

'அன்றாட வாழ்க்கையில் இலக்கியம், என்று எண்ணும் போது தோன்றும் ஒரு முக்கியக் கருத்து உண்டு. அன்றாடவாழ்க்கையோடு தொடர்பு கொள்ளும் இலக்கியத்தை மூவகையாகப் பாகுபடுத்தலாம் என்பதே அக்கருத்து. 1. அன்றாட வாழ்க்கைக்காக இலக்கியம், 2. அன்றாட வாழ்க்கையைப் பற்றிய இலக்கியம், 3. அன்றாட வாழ்க்கையில் எழுந்த இலக்கியம் என்பதே அப் பாகுபாடு.

நம் அருமைத்தமிழ் மொழியில் அன்றாட வாழ்க்கைக்காகவே எழுந்த பல நூல்களும் தனிப்பாடல்களும் உண்டு. சிறப்பாக ஆத்தி சூடி, கொன்றை வேந்தன் போன்ற நூல்களைக் குறிப்பிடலாம். இனி அன்றாட வாழ்க்கையைப் பற்றிய இலக்கியச் சுவை மிகுந்த பாடல்களைச் சங்க நூல்களிலிருந்து இக்கால நூல்கள் வரை பரக்கக் காணலாம். சங்கநூல்களில் 'முளிதயிர் பிசைந்த' என்ற குறுந்தொகைப் பாட்டை நல்ல சான்றாகக் காட்டலாம். அடுத்து வரும் அன்றாட வாழ்வில் அல்லது வாழ்க்கையில் எழுந்த இலக்கியங்கட்குக் கவிதைச் சுவை ததும்பும் கணக்கற்ற நாடோடிப் பாடல்களைச் சான்றாகக் காட்டலாம். அவற்றின் வகையும் தொகையும் கணக்கில் அடங்கா. 'ஏத்தப் பாட்டிற்கு எதிர்ப் பாட்டில்லை' என்று கம்பரையும் மெய்ம்மறக்கச் செய்த பாடல்கள் அவை. பாட்டாளி வர்க்கம் படைத்த—கம்பரை மெய் சிலிர்க்க வைத்த—இப்பாட்டின்பத்தையே மகா கவி பாரதியாரும்,

மானுடப் பெண்கள் வளருமொரு காதலினால்
ஊனுருகப் பாடுவதில் ஊறிடுந்தேன் வாரியினும்,
ஏற்றநீர்ப் பாட்டின் இசையினிலும், நெல்லிடிக்குங்
கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சும் ஒலியினிலும்
சுண்ணமிடிப் பார்தஞ் சுவைமிகுந்த பண்களிலும்,
பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்,
வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டி யிசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்
நெஞ்சைப் பறிகொடுத்தேன்'

(குயில் பாட்டு)

என்று போற்றிப் பாடுகின்றார்.

இனி இறுதியாக நாம் ஆழ்ந்து உள்ளுவதற்கு உரியது ஒன்று உண்டு. அது இன்றைய சமுதாயத்தின் அன்றாட வாழ்க்கையில் இலக்கியம் செலுத்திவரும் செல்வாக்கைப் பற்றியது. இக் காலத்தில் 'ஒரு பகல் வாழ்க்கை' உடைய புற்றீசல்கள் போலப் புறப்பட்டு வரும் சிறு கதைகட்கும், கட்டுரைகட்கும், வருணனைகட்கும், கலைப்படைப்புக்கும் அளவில்லை. அவற்றால் மக்கள் வாழ்விற்கு நன்மையைவிடத் தீமையே அதிகம்போலத் தோன்றுகிறது. இதற்குப் பொறுப்புடையார் யாராயினும், அவர்கள் மனச்சான்றைக் கொன்று விடாமல், மேலைநாட்டுப் பேரறிஞர் ஒருவர் கூறிப்போந்த உண்மையை ஊன்றிச் சிந்திப்பார்களாக:

'ஒரு துளி நஞ்சு ஒரு முறைதான் தீங்கிழைக்கும்; ஆனால் தீய நூல் ஒன்று எக்காலத்திற்கும் மக்கள் மனத்தை நச்சுக்களமாக்கும்,[1] என்பதே அவ்வறிஞர் பொன்மொழி.

தீய இலக்கியங்கள் வளர்வதற்கான அரசியல் பொருளாதார சமூகக் காரணங்கள் பலப் பல. அவற்றை நாம் இங்கே விரிவாக ஆராய வேண்டுவதில்லை. காரணம் எதுவாயினும், தீமை தீமைதான். எனவே, தீய இலக்கியங்கள் தொலைந்து நாட்டில் பல்வேறு வடிவங்களிலும் தூய தீஞ்சுவை இலக்கியங்கள் பரவவேண்டும். சிறப்பாகத் தொன்மை

1. A dose of poison can do its work only once, but a bad work can go on poisoning people's minds for any length of time.—John Murray.

சான்ற நூல்கள் காலத்தை வென்று விளங்கும் இலக்கியங்கள் மக்கள் உள்ளத்தை ஆட்கொள்வ தற்கான வழி வகைகளைக் கற்றறிந்தார் நாளும் வளர்த்துக்கொண்டே வரல் வேண்டும்.

ஒரு பொருளின் பயனும், பெருமையும் அது பெரிய அளவில் போற்றப்படுவதிலேயே அமைந் துள்ளன. 'மிகுந்த பயனுடையதே மிகுந்த அழ குடையது,' என்றார் காந்தி அடிகள். எந்த ஒரு நாட் டில் அந்த நாட்டின் சிறந்த இலக்கியங்கள், அந்த நாட்டு மக்களின் வாழ்வில், பெரிய அளவில் ஊடுரு விப்பாய்ந்து பயனளிக்கின்றனவோ அந்த நாடே உயர்ந்த நாடு. அந்த இலக்கியங்களே பெயர் பெற்ற இலக்கியங்கள்.

சுருங்கச் சொன்னால், வருங்கால உலகில் இலக் கியம் அன்றாட வாழ்க்கையை அடியொற்றி எழுந்து, அதில் படிந்துள்ள தூசுகளையும் மாசுகளையும் தொலைத்துப் பொன்றாப் பெருவாழ்விற்கு வழி காட்டவேண்டும் எனலாம். அவ்வாறே அப் பொன் றாப் பேரிலக்கிய ஒளியில், மனித குலத்தின் அன்றாட வாழ்க்கை அமைந்து, வையகத்தைத் தெய்வத் திரு நாடாக்க வேண்டும்.

# 14. இலக்கியத்தில் குழந்தை

இன்பத் தமிழினும் இனிய மொழி தமிழனுக்கு இல்லை; அன்புக் குழந்தையினுஞ் சிறந்த செல்வம் மனிதனுக்கு இல்லை. தமிழும் தெய்வமும் ஒன்று; குழந்தையும் தெய்வமும் ஒன்று. குழந்தையின் வாழ்வில் பல பருவங்கள் உண்டு; இலக்கிய வரலாற்றிலும் நிலைகள் பல உண்டு.

தமிழிலக்கியத்தை அணி செய்யும் தனிச்சிறப்பு வாய்ந்த நூல்களை ஐந்தாகப் பாகுபடுத்தலாம். அவை சங்கநூல்கள், பக்திப் பாசுரங்கள், பெருங்காவியங்கள், சிற்றிலக்கியங்கள், புதுமை இலக்கியங்கள் ஆகும். பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் பதினெண்கீழ்க் கணக்கும் சங்கநூல்கள் என்றும், தேவாரம், திருவாசகம், திவ்வியப் பிரபந்தம் முதலியன பக்திப் பாசுரங்கள் என்றும், சிலப்பதிகாரம் மணிமேகலை சீவக சிந்தாமணி பெரியபுராணம் கம்பராமாயணம் கந்த புராணம் முதலியவை பெருங் காப்பியங்கள் என்றும், தூது உலா பரணி முதலிய தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்கள் சிற்றிலக்கியங்கள் என்றும், 19, 20 ஆம் நூற்றாண்டு இலக்கியங்கள் புதுமை இலக்கியங்கள் என்றும் போற்றுவர் தமிழ் அறிஞர். 'இலக்கியத்தில் குழந்தை' பற்றிய இக்கட்டுரையில், இவ் ஐவகை இலக்கியங்களும் 'பேசும் பொற்சித்திரங்கள்' பற்றிக்கூறும் சொற்சித்திரங்களைக் காண்போம்.

## 1

பாண்டியன் அறிவுடைநம்பி பெரும்புகழ் படைத்த பெருவேந்தன்; செங்கோல் செலுத்திய வன்; செந்தமிழ் வளர்த்தவன். அவன் பாடிய பாடல்கள்நான்கு. அவற்றுள்மூன்று அகப்பொருள் பற்றியன. புறப்பொருள் பற்றியதோ, ஒரே ஒரு பாடல். ஆம்; ஒரே ஒரு பாடல்தான்! தமிழுலகும், குழந்தை உலகும் செய்த தவத்தால் கிடைத்த பாடல்! அப்பாட்டிலே, 'செல்வத்துள் எல்லாம் சிறந்த செல்வம் குழந்தைச் செல்வம்; மழலைச் செல் வத்தைப் பெறாமல் வேறு எந்தச் செல்வத்தைப் பெற்றிருந்தாலும் அது வீண்-பாழ்,' என்று, தமிழக வேந்தன் சங்க காலத்தில் சொல்லிய செய்தியைக் கேட்கிறோம். அச்செய்தியோடு இன்றைய பாரதத் தின் முடிசூடா மன்னர்—நேரு பெருமான்—தன் பிறந்த நாளைக் குழந்தைகளின் திருநாளாக நாடெல் லாம் போற்றச் செய்யும் பெருமையையும் சேர்த்து நினைக்கும்போது நெஞ்சம் தேனுகிறது.

பாண்டியன் அறிவுடை நம்பி நாடாண்ட வேந் தன். மாநகரமாகிய மதுரை அவன் தலைநகர். 'இந் திரன் அருங்கலச் செப்பு' திறந்தது என்னக்' காட்சி வழங்கும் அப் பெருநகரையே தன் தலைநக ராகப் பெற்ற அவனுக்குக் குறையேது?–இப்படித் தான் நம்முள் பெரும்பாலோர் நினைப்போம். ஆனல், 'அரச வாழ்வாயினும் அருமை மக்களைப் பெறாத வாழ்வு பாழ்' என்பதை அனுபவத்தால் உணர்ந்து, மழலைச் செல்வம் பெற்று மகிழ்ந்தவன் போலும் அவன்! வாழ்க்கையில் தான் உணர்ந்

தனை, வாளேந்திய வீரவேந்தனுகிய அவன், வாய் படைத்த கவிஞனுகவும் விளங்கியமையால் 'குழந்தை இன்பம்' பற்றி அரியதொரு பாடல்—அனுபவச் சுவை நிறைந்த ஒரு பாடல்—பாடியுள்ளான். 'குழந்தை யின்பம்' பற்றிய மிகச் சிறந்த அச் சங் கப்பாடலே அன்றிப் புறப்பொருள் பற்றி அவன் இன்னெரு பாடலைப்பாடவே இல்லை!

'படைக்கப்படும் செல்வம் பலவற்றையும் படைத்துப் பலருடனே கூட இருந்து உண்ணும் உடைமை நிறைந்த செல்வத்தை உடையோராயி னும், இடையே சமையம் உண்டாகக் குறுகக் குறுக நடந்து, சிறிய கையை நீட்டி, பாத்திரத்தில் கிடந்த தைத் தரையிலே இட்டும், கூடப் பிசைந்து தோண்டி யும், வாயால் கவ்வியும், கையால் துழாவியும், நெய் யுடைய சோற்றை உடலெல்லாம் படச் சிதறியும் அறிவை இன்பத்தால் மயக்கும் மக்களைப் பெருத வர்க்குத் தாம் உயிர் வாழும் நாளில் உயிர்வாழ்வின் பயனுகிய முடிக்கப்படும் பொருள் இல்லை'—இதுவே அறிவுடை நம்பியின் கருத்தோவியம். இதோ அவன் கவியோவியம்:

படைப்புப்பல படைத்துப் பலரோடுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத்தாம் வாழும் நாளே.

## 2

பக்திப் பாசுரங்களுள் தனிச்சிறப்பு வாய்ந்தது நாலாயிரப் பிரபந்தம். 'ஈடு' கண்ட ஈடில்லா இலக்கியம் அன்றோ, ஆழ்வார்கள் அருளிச்செயல்! பெருமாள் காதலிலே ஆழ்ந்த ஆழ்வார் பன்னிருவர் பாடிய பக்திப் பாசுரங்களின் திரட்டே நாலாயிர திவ்யப் பிரபந்தம். அப் பிரபந்தத்தில் முதலிடம் பெறும் சிறப்பு வாய்ந்த, 'பாகவத சார'மாகிய பெரியாழ்வார் திருமொழியின் பெரும்பகுதி கண்ணனை—மணிவண்ணனைக் குழந்தையாகப் பாவித்துக் கொண்டாடும் அழகும் திறமும் வாய்ந்தது. பன்னூறு பாடல்களால் தெய்வக்குழந்தை கண்ணன் திறமெலாம் போற்றும் ஆழ்வார் பாடல்களுள் ஒன்றைக் காணலாம்.

தென்புதுவைப் பட்டராகிய பெரியாழ்வார், கண்ணனது திருமேனி அழகை அடிமுதல் முடிவரை முன்னம் யசோதை அனுபவித்ததுபோல் அனுபவிக்கிறார். முதல் பாட்டிலே அந்தப் 'பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக் கமலங்களைப் பார்த்து அனுபவித்தவர், அடுத்த பாசுரத்தில் அப்பாதங்களில் பொருந்தி இருக்கும் பத்து விரல்களையும் பார்த்துப் பார்த்து அதிசயிக்கிறார்.! ஆனந்த வெறி கொண்டு பாடுகிறார். இதோ அவர் பாசுரம்:

முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும்
தத்திப் பதித்துத் தலைப்பெய்தாற் போல்எங்கும்
பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள்
ஒத்திட் டிருந்தவா காணீரே! ஒண்ணுதலீர் வந்து காணீரே!

## 3

'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்' தமிழில் தோன்றிய தலைக்காப்பியம்; தனிப்பெருங் கலைக் காப்பியம். அதன் அடிச் சுவடுகளைப் பின்பற்றி எழுந்த அமரகாவியங்கள் பலப் பல. அவற்றுள் எல்லாம் பெரும்புகழ் வாய்ந்த பெருங்காவியம் கல்வி யிற் சிறந்த கவிச் சக்கரவர்த்தி பாடிய இராம காதையே. பல்சுவையும் மலிந்த அப் பெருங்காப்பி யத்தில் தலைசிறந்து விளங்கும் படலம் 'நாட்டுப் படலம்'. கம்பனின் கனவுலகக் காட்சியாய் விளங்கும் அப்படலத்தில், சேய்களைப் பற்றியும் அச்சேய்கட் குப் பாலூட்டும் தாய்க்குலம் பற்றியும் அழகியதொரு வருணனை அமைந்துள்ளது.

குழந்தைகட்கு எவ்விதநோயும் நொடியும் அணு காமல் இருக்கும் பொருட்டுக் காத்தற் கடவுளான திருமாலின் சங்கம், சக்கரம், தண்டு, வில், வாள் என்னும் பஞ்சாயுதங்களையும் வடிவமாக அமைத்து, குழந்தைகட்கு அணிவிப்பது, அருள் நெஞ்சம் படைத்த அன்னையர் பண்பு. அப் பண்பு வழி குழந்தைகட்கு ஐந்தாவது மாதத்தில் அணிவிக்கப் பெற்ற, 'ஐம்படைத்தாலியை அணிந்துள்ள குழந் தைகட்கு அன்னையர் பால் புகட்டுகின்றனராம். அக் குழந்தைகளின் வாயில் ஒழுங்காகச் சொள்ளு நீர்—இல்லை, இல்லை; அமிழ்தம்—ஒழுகுகின்றதாம்! அச்செவ்வாய்க் குதலையர்க்குச் செந்தாமரைபோற் குவிந்த கையால் பால்புகட்டுகின்றனராம்! பாவை மார் கரம் குவித்துக் குழந்தைகளின் பவள வாயில்

பாலூட்டும் மண்ணுலகத்துக் காட்சியில் விண்ணுலகத்தை — விண்ணுலகக் காட்சியை — விண்ணுலக இன்பத்தைக் காண்கிறார் கவியரசர் கம்பர்! பால் நிலாவைக் கண்டதும் குவியும் பைந்தாமரையைப்போல, வெள்ளிய பாலில் படும் பாவையர் கைத்தாமரையும் குவிகிறதாம்! குவிந்தகையால் குழந்தைகட்கு அருள் தெய்வங்கள் பாலூட்டுகின்றனவாம்! ஆம்; பால் நிலவைக் கண்டு குவியும் பசுந் தாமரைபோல—பசுப்பாலைக் குழந்தைகட்குப் புகட்டக் குவியும் தாயரின் திருக்கரம்போல—கம்பன் கவிதையைக் கற்கும் நம் உள்ளமும் அவன் கற்பனையில் குவிந்து விடுகிறது! உம்பர் நாட்டு இன்பத்தினும் உயர்ந்த கம்பநாடன் கவிதை இதோ:

தாலி ஐம்படை தழுவு மார்பிடை
மாலை வாயமு தொழுகு மக்களைப்
பாலி னூட்டுவார் செங்கை பங்கயம்
வானி லாவுறக் குவிவ மானுமே!

## 4

தமிழிலக்கியத்தில் தனிச்சிறப்பு வாய்ந்ததொரு இலக்கிய வகை 'பிள்ளைத்தமிழ்'. தெய்வங்களை எல்லாம் குழந்தைகளாகப் பாவித்துத் தனி நூல்களே பாடும் இவ் இலக்கிய மரபு, உலகில் வேறு எம்மொழியில் உண்டு! தனிச் சிறப்பு வாய்ந்த இவ்விலக்கிய மரபைப் பின்பற்றி எழுந்த பிள்ளைத் தமிழ் நூல்கள்—பக்திச்சுவை கனிந்த பாடல்கள்—பேரின்பம் தரும் சிற்றிலக்கியங்கள்—பலப் பல.

அவற்றுள் ஒன்று பழனிப் பிள்ளைத்தமிழ். சின்னப்ப நாயக்கர் பாடியருளிய அந்நூலில், எளிமையும் இனிமையும் தவழக் காணலாம்; உணர்வும் உயர்வும் கொஞ்சப் பார்க்கலாம்.

பிள்ளைத் தமிழில் இருவகை உண்டு; ஒன்று ஆண்பாற் பிள்ளைத் தமிழ்; மற்றொன்று பெண்பாற் பிள்ளைத்தமிழ். கடவுளரையேனும், ஆசிரியரையேனும், உபகாரிகளையேனும் குழந்தையாக வைத்துக் காப்பு முதலிய பத்துப் பருவங்கள் அமைத்துப் பாடும் பண்புடைய ஆண்பாற்—பெண்பாற் பிள்ளைத்தமிழ் இரண்டிற்கும் பொதுவாக அமைந்த பருவங்கள் ஏழு. அவை காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், தாலப் பருவம், சப்பாணிப் பருவம், முத்தப் பருவம், வருகைப்பருவம் அம்புலிப் பருவம் எனப் படும். பெண்பாற் பிள்ளைத் தமிழிற்கே உரிய மூன்று பருவங்கள்: அம்மானைப் பருவம், நீராடற் பருவம், ஊசற் பருவம் என்பன. ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்கே உரிய மூன்று பருவங்கள்: சிற்றிற்பருவம், சிறுபறைப்பருவம், சிறுதேர்ப் பருவம் என்பன.

இவற்றுள் ஆண்பாற் பிள்ளைத் தமிழில் வரும் சிற்றிற் பருவம், சின்னஞ்சிறு வீடுகட்டி விளையாடும் சிறுமியர், பாட்டுடைத் தலைவன் தாம் கட்டி விளையாடும் சிறு வீட்டை அழிக்கும்போது, 'எம் சிற்றிலை அழிக்காதே!' என வேண்டுவதாகப் பாடப் பெறும். ஆணின் ஆணவத்தையும் — அழிக்கும் ஆற்றலையும், பெண்ணின் அருளுணர்வையும்—

ஆக்கும் சக்தியையும் குழந்தைகளின் வாழ்விலேயே ஞானக் கவிஞன் கண்டு பாடும் பாட்டின்பத்தைச் சிற்றிற் பருவத்தில் சிறப்புறக் காணலாம்.

பழனிப் பிள்ளைத் தமிழில், 'சிற்றில் பருவத்' தில், வரும் அழகியதொரு பாடல் நம்மை ஓர் அற்புத உலகிற்கு அழைத்துச் செல்கிறது. அந்தக் குட்டி உலகம்—குழந்தை உலகம்—தெய்வ உலகம்! அதில் என்னதான் நடைபெறுது! தெய்வக் குழந்தைகள் செயலே தெய்வீகமானது தான்! சின்னப்ப நாயக்கர் காணும் அப் பெண்குழந்தைகள் சிறுவீடு கட்டிச் 'சமையல்' செய்கிறார்கள்! அரிசி, முத்து.... பருமுத்து! அதை நன்றாக ஆய்ந்து கழுவுகிறார்கள்; அதற்கு நீர்? ஆம்! நாமானால் தண்ணீர் விடுவோம். முருகனோடு விளையாடும் குழந்தைகளோ நீருக்குப் பதில் தேனையே விடுகின்றன! ஆம்—தேன்—பசுந் தேன்! தேனில் வடித்த முத்தரிசியை உலையில் ஏற்றுகிறார்கள். மண் பானையா? இல்லை! இல்லை! பவழக் குடத்தில்! இப்படி உப்பேறிய பானையில் பதம் பெற்ற சோறே பாற்சோறு! சோற்றுக்குக் கறி?—உண்டு;:பூந்தளிர்க் கறி! சோறு சமைத்துக் கறி ஆக்கிவிட்டால் போதுமா? அந்தப் பெண்கள் தெய்வப் பெண்கள்! தெய்வத் தமிழ்ப் பெண்கள்! விருந்து போற்றும் பெருமை அவர்கள் தனி உரிமை! எனவே, செல் விருந்தோம்பி வரு விருந்து பார்க்கிறார்கள்! அப்படிப்பட்ட பெருமை மிக்க மகளிர் பிரியத்துடன் கட்டியவீடு மண்வீடா—இல்லை பின்னர்?—பளிங்குவீடு! சிறிய பெண்கள்—பெரிய உள்ளம்! பெரியவீடு! அந்த

வீட்டை எட்டி உதைத்துக் குறும்புசெய்ய எழுந்து வருகிறான் முருகன், தன்னைப்பிடிக்கும் அப் பெண்களுக்கு! அவன் அருமைச் சிறுகிண்கிணிக்காலும் அவர்களுக்கு உயிரினும் இனிது! ஆனால், அவன் செய்யும் தொழில்தான் பிடிக்காது! இதோ திரு முருகனை—அவன் அருமைக்கிண்கிணிக்காலை—அக் காலுக்கு அஞ்சி அடிபணிந்து வேண்டும்பக்தி உள்ளங்களைத் தரிசிக்கக் 'கதவம் திறந்து' வழி காட்டுகிறது சின்னப்ப நாயக்கர் பாடல்!

பருமுத் தரிசி தனையாய்ந்து
பசுந்தே னதனை வடித்தெடுத்துப்
பவழக் குடத்தில் உலையேற்றிப்
பரிவு தரும்பாற் சோருக்கி
ஒருமைப் படியே பூந்தளிரை
ஒன்றாய்ப் பறித்துக் கறிசமைத்தே
உண்ணும் படிக்கிங் குபசரிக்கும்
உரிமைப் பருவத் திளங் கோதைப்
பெருமை மடவார் நாங்களின்று
பிரியத் துடனே வெண்பளிங்காற்
பிரியா வகைக்குக் கட்டுவித்த
பெரிய மனையெம் மனையுன்றன்
அருமைச் சிறுகிண் கிணிக்காலால்
ஐயா சிற்றி லழியேலே!
அமலா! பழனிச் சிவகிரிவாழ்
அரசே சிற்றி லழியேலே!

## 5

மறுமலர்ச்சி இலக்கியத்தின் மகாகவி பாரதியார். அறிவுடை நம்பி போல் அவர் குழந்தையையும் பாடி

னார்; ஔவையார்போல் குழந்தைக்காகவும் பாடினார்.

பராசக்தியையே குழந்தையாகக் கண்டு, சொல்லிய பாடலில் சங்கத் தமிழின் கருத்தைச் சுவைக்கலாம்; திவ்வியப் பிரபந்தத்தின் தெய்வ மணத்தை நுகரலாம்; பேரிலக்கிய — சிற்றிலக்கியக் கற்பனை வளங்களைப் பார்க்கலாம்—மறுமலர்ச்சி உலகின் குரலைக் கேட்கலாம்! நம் உரை வேண்டாது, நம் உணர்வையே வேண்டும் அவரது பாடல்கள் இதோ:

சின்னஞ் சிறுகிளியே !—கண்ணம்மா !
செல்வக் களஞ்சியமே
என்னைக் கலிதீர்த்தே—உலகில்
ஏற்றம் புரியவந்தாய் !
இன்பக் கதைகளெல்லாம்—உன்னைப்போல்
ஏடுகள் சொல்வதுண்டோ ?
அன்பு தருவதிலே—உனைநேர்
ஆகுமோர் தெய்வமுண்டோ ?

மார்பி லணிவதற்கே—உன்னைப்போல்
வைர மணிகளுண்டோ ?
சீர்பெற்று வாழ்வதற்கே—உன்னைப் போல்
செல்வம் பிறிது முண்டோ ?



# 15. ஏழெயில் வென்ற இணையிலா வீரம்

முத்துடைப் பாண்டி நாட்டை முடிசூடி ஆட்சி புரிந்து வந்த தென்னவன், சோழன் நலங்கிள்ளி யின்மீது படையெடுத்துத் தன் வலி காட்டிப் புகழ் மேவ மனம் துணிந்தான். ஒற்றர் வாயிலாக இச் செய்தி அறிந்தான் சோழவேந்தன். அவன் கண் கள் சிவந்தன; தோள்கள் விம்மின; உதடுகள் துடித்தன; உள்ளம் குமுறியது. ஆற்றொணாச் சினத்துடன் ஆணைகள் பிறப்பித்தான். இடியென முரசதிர்ந்தது. நீங்கா மறத்தின் வீங்கு தோள் வீரர்கள் அணிவகுத்தனர். 'பார் பெருத்தலில் படை சிறுத்ததோ, படை சிறுத்தலில் பார் பெருத் ததோ?' எனக் கண்டவர் மயங்கிக் கலங்கும் வண் ணம் நால்வகைப் படைகளும் நானிலத்தின் புறம் வளைய ஒருங்கு திரண்டன. செருவேட்டுச் சிலைக் கும் செங்கண் ஆடவர், 'நலங்கிள்ளி வாழ்க!' என்று நாற்றிசையும் அதிர முழங்கிய ஆர்ப்பொலி, முந்நீர் முழக்கத்தினும் பன்மடங்கு பெரிதாய் விளங்கியது. கருங்கண் மறவர் படையும் தானைத் தலைவரும் புடை சூழ, நலங்கிள்ளி தென்னவன் திசை நோக்கிக் கண்கள் தீயாகக் காற்றெனக் கடுகிப் புறப்பட்டான். செய்தியறிந்தான் பாண்டியன்; ஒற்றர்கள் வாயி லாக மாற்றாரின் படை வலியை ஒருவாறு உணர்ந் தான். தன் தவறு அறிந்தான். எனினும் மானம் துரப்ப, மறப்போர் நிகழ்த்தத் துணிந்தான். வள

வன் படையோ சோழநாட்டின் எல்லையை இகந்து பாண்டி நாட்டுள்ளும் பாய்ந்தது. அஞ்சினன் மீன வன். விற்கொடியான் துணை வேட்டான். அவ னும் துணையாகப் படை திரட்டிக் களம் புகுந்தான். இருபடையும் ஒரு படையாய் நலங்கிள்ளியின் சேனை யைத் தாக்கின. ஆயினும் கலங்குவானே காவிரிப் புதல்வன்? அரிமா என ஆர்த்துக் கடும்போர் உடற் றினன்; நலங்கிள்ளியின் சினத் தீ கண்ட சோழப் படை, கொடுவரிப் புலியின் கூட்டமென ஒன்னார் படையைக் களத்திடை உழக்கியது. கடலொடு கடல் கலக்கியது போல், வரையொடுவரை தாக்கி யதுபோல், முகிலொடு முகில் மோதியதுபோல் படை யொடு படை சாடியது. இருதரப்பிலும் கடும்போர் நிகழ்ந்தது. குருதி வெள்ளம் காற்று வெள்ள மாய்ப் பெருகிற்று. பிண மலைகள் குவிந்தன; ஆயி ரம் ஆயிரம் அமரஞ்சா வீரர்கள் வாயிலும் வயிற்றி லும் நெற்றியிலும் நெஞ்சிலும் விழுப்புண் தாங்கிச் சாய்ந்தனர்; களிறும், புரவியும், தேரும் கணக்கின்றி நாசமாயின. இறுதியில் பாண்டியன் படை, சேரன் தானை நெஞ்சொடிந்து நிலை கெட்டு வலியழிந்து நாற் றிசையிலும் சிதறி ஓடின. மண்ணதிர — விண் ணதிர—மாற்றார் மனம் அதிர வீர முரசு கொட்டி நலங்கிள்ளியின் படைகள் மேலும் மேலும் முன் னேறின. பாண்டி நாட்டின் பகுதியாகிய கோனாட் டையும் கடந்தன. இந்நாள் சிவகங்கைக்கு அருகி லுள்ள 'எழுபொன் கோட்டை' என்ற ஊரே அந் நாள், 'ஏழெயில்' என்னும் பேரோடு விளங்கியது. நலங்கிள்ளியின் நிகரில்லாப் படைவலிக்கு ஆற்றாது

உள் வாங்கிய பாண்டியனும், அவன் படைகளும் இவ்வேழெயில் கோட்டையுள் கரந்து அரணடைத்து ஒளித்தனர். முற்றுகையிட்டுக் கடுஞ்சமர் புரிந்தான் சோழமன்னன். அரணின் துணை கொண்டு பாண்டியனின் படைவீரர்கள் மழையெனக் கணைகளைப் பொழிந்தனர். அத்தனையும் தாங்கி, அதனினும் மிகையாக ஆண்மையையே துணைக்கொண்டு நலங்கிள்ளியின் படை, மறவர் கணைகளையும், வேல்களையும் காணும் திசையெலாம் எய்து மாற்றார் படை மருண்டோடச் செய்தது. பாண்டியன் அரண் படுகளம் ஆவது கண்ட புலிக்கொடியானின் வீரமிக்க படைவீரர் புத்தூக்கம் கொண்டு போரிட்டனர். ஏழெயிலின் நெடுநிலைக் கதவங்களைக் காவிரி நாட்டான் களிறுகள் தம் கோட்டுநுதி கொண்டு இடியெனப் பிளிறிக் குத்தியும் இடித்தும் பிளந்தன. பொன்னி வளநாட்டின் மறவரும் மழகளிறுகளுடன் போட்டியிடுவார் போல் ஏழெயில் அரண்களை எற்றித்தாக்கி இடித்துத் தகர்த்தனர். கோட்டை வீழ்ந்தது; கைதவன் படைகள், சுழல்காற்றில் சிக்கிய சிறு துரும்பென அலையுண்டு, எண்டிசையும் சிதறி ஓடின. பாண்டியனும் சேரனும் தோற்றனர். இச்செய்தியறிந்த நலங்கிள்ளியின் வீரப்படைகள் எழுச்சி கொண்டு வெற்றிமுரசம் வானதிர முழக்கி,வீறுகொண்ட ஏறுகள்போல் கோட்டையின் உள் நுழைந்தன. மைந்துடை மறவர் படையினர் வெற்றி கூறினர்; வெண் சங்கை ஊதினர்; நாற்றிசையிலும் பரந்து வீசிய பொதிகைக் காற்றில் சோழ வேந்தனின் புலிக்

கொடி ஆடிப்பரந்த செய்தி, செந்தமிழ் நடெங்கணும் பரவியது. கேட்டவர் உடம்பெல்லாம் மயிர்க்கூச் செறிந்தது. ஏழெயிற் கோட்டைக்குள் ஏறுகளின் நிரையெனப் புகுந்த படையினர், தம் தலைவனின் வெற்றியைத் தரணியெல்லாம் அறியும் வண்ணம் நீளரணின் பெருங்கதவுகளிலெல்லாம் புலிப்பொறியே அழகுறப் பொறித்தனர்.

கரையிலா மகிழ்ச்சிக் கடலில் திளைத்திருந்த நலங்கிள்ளி, 'பன்மீன் நடுவட் பான்மதி போல்' பாசறையின்கண் வீற்றிருந்தான். இந்தக் காட்சியைக் காணும் பேறு பெற்றோருள் ஒருவர், நலங்கிள்ளியின்பால் பேரன்பும் பெருமதிப்பும் கொண்ட கோவூர்கிழார் ஆவர். சோழவளநாட்டு வேந்தன் மாறுகொண்டு எழுந்து, ஒன்னார் தேயத்தின் உட்புகுந்து, மொய்ம்புடை மடங்கலை முழையுள்ளேயே சென்று தாக்கியாங்கு, பாண்டிய வேந்தனை அவன் கோட்டையினுள்ளேயே அடக்கி ஒடுக்கிய திறன், அனைவர் நெஞ்சையும் அலைவீசும் இன்பக் கடலாய் ஆக்கிற்று. மக்கள் நெஞ்சில் கரைபுரண்டோடிய இன்ப வெள்ளம் அவரவர் மனத்தளவிலேயே நிற்க, கோவூர் கிழார் இதயம் கண்ட இன்பப்பெருக்கோ, அவர் உள்ளத்தின் எல்லையையும் கடந்து, உணர்வு மிக்க சொல்லாய் வெளிப்படலாயிற்று. அச்சொல்—அழியாச் சொல்லாய்—இலக்கியச் சொல்லாய்—புறநானூறு போற்றும் சொல்லாய் இன்றும் நமக்குக் காட்சியளிக்கிறது.

'சிறப்புடைய முறையால் பொருளும் இன்பமும், அறத்தின் பின்னே தோன்றும் காட்சிபோல, சேரபாண்டியருடைய இரண்டு குடையும் பின்னாக ஓங்கிய நினது ஒன்றாகிய வெண்கொற்றக் குடை, நிறம் பொருந்திய கலை நிறைந்த திங்களைப்போல ஓங்கி உயரத்தில் விளங்க, நல்ல புகழ்வேட்டையை விரும்பி, வெல்லும் போரினைச் செய்யும் பாடி வீட்டின்கண்ணே இருத்தலல்லது, இந்நகரின்கண் இருத்தலை உடன்படாய் நீ; கொம்பினது நுனி முகம் தேயத்தாக்கி, ஒன்னாரின் கடிமதிலைக்குத்தும் நின்னுடைய களிறுகள் அடங்கா மறம் உடையன; போரெனக் கேட்பின் வீரக்கழல் புனைந்த நின் மறவர் 'காடிடைக் கடைந்த நாடு மிகத் தொலையது; ஆதலால் நாம் போர்மேற் செல்லோம்' எனக் கருதார்; எனவே, ஓசையுண்டான விழாவையுடைய அவ்விடத்தும், பகைவர் நாட்டில் தங்கிப் பிறகு கீழ்க் கடல் பின்னதாக மேல் கடலினது வெளியதலையையுடைய திரை, நின் குதிரையின் குளம்பின்மேல் மோத, வலமாக முறையே வருதலும் உண்டென்று, கலங்கிய நெஞ்சம் நடுங்கு துயர் பாய, துயிலாத கண்ணையுடையவர்கள் ஆனார்கள், வடநாட்டு வேந்தர்,' என்று, கோவூர்கிழார் நலங்கிள்ளியையே முன்னிலைப்படுத்திப் பெருமிதம் தோன்றப் பாடலானார்.

'சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல
இருகுடை பின்பட ஓங்கிய வொருகுடை
உருகெழு மதியின் நிவந்துசேண் விளங்க
நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்

பாசறை யல்லது நீயொல் லாயே
நுதிமுக மழுங்க மண்டி ஒன்னார்
கடிமதில் பாயுநின் களிறடங் கலவே
போரெனிற் புகலும் புனைகழன் மறவர்
'காடிடைக் கிடந்த நாடுநனி சேய
செல்வே மல்லேம்' என்னார் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்னதாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலு முண்டென் றலமந்து
நெஞ்சுநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே.' [புறம்—31]

*என்பது அவர்தம் பாடல். இப்பாடலால் நலங் கிள்ளியின் வீரம் விளங்குதலே போன்று, 'அறம்—பொருள்—இன்பம்' என்னும் முறைவைப்பு 'சிறப் புடை மரபு' என்னும் வாய்மையும் அழகுற விளங்கு கின்றதன்றே?*

*வாழ்க தமிழ்வீரம்!* *வெல்க பழந்தமிழ் மரபு!!*



# 16. உழவர் இலக்கியம்

பொங்கல் பெருநாள் உழவர் திருநாள். இந் நன்னாளில் உழவர் பெருமக்களால் தமிழ் நிலத்தில் நெல் விளைந்த செய்தியோடு தமிழ்ப் புலத்தில் சொல் விளைந்த செய்தியையும் சேரநினைப்பது இன்பமும் பயனும் நல்குவதன்றோ? சங்க காலம்—சமயகாலம்—சமதர்ம காலம் என்று மூன்று பெருங்காலங்கள் தமிழிலக்கிய—தமிழக—வரலாற்றை அணி செய்வதை ஆராய்சியாளர் அறிவர். இந்நமுப் பெருங் காலத்தும் உழவர் வாழ்வின் எளிமையிலும் உழவின் பெருமையிலும் ஈடுபட்ட புலவர் பெருமக்கள் படைத்த பாடல்களின் சிறப்பு, இலக்கியத்தோடு வாழ்வையும், வாழ்வோடு வரலாற்றையும் இணைத்துக் காணவல்லார்க்குப் பெருமகிழ்வு தருவதாகும்.

## சங்க காலம்

பழந்தமிழ் இலக்கியங்களாகிய சங்க நூல்கள் தமிழகத்தில் மன்னராட்சி தலைசிறந்து விளங்கிய காலத்தில் தோன்றியவை. எனவே அந்நூல்களில் முடிகெழு மூவேந்தரும், குறுநிலத்தலைவரும், வள்ளல்களும் பெரிதும் சிறப்பிக்கப் பெற்றிருத்தலைக் காணலாம். ஆயினும் அக்கால இலக்கியங்களிலேயே ஏழை எளியவர்களும், உழைப்பாளிகளும், பாட்டாளிகளும் இடம் பெற்றிருந்தனர். அவர்கள் இல்லாமல் சமுதாயம் முழுமை பெறாதன்றோ?

சங்க நூல்களில் சிறப்பிடம் பெற்றிருந்த பாட்டாளி மக்களுள் தலைமை சான்றவர் உழவர் பெருமக்களே. உழவின் உயர்வையும் ஏரின் ஏற்றத்தையும் இன்றுபோல்—ஏன் இன்றையினும் சிறந்த முறையில்—அன்றைய தமிழர் சமுதாயம் உணர்ந்து போற்றியது.

> சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
> உழந்தும் உழவே தலை.
>
> உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது
> எழுவாரை எல்லாம் பொறுத்து.
>
> உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
> தொழுதுண்டு பின்செல் பவர்.
>
> பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
> அலகுடை நீழ லவர்.
>
> உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
> விட்டேம் என்பார்க்கும் நிலை.

உலகம் பல தொழில்செய்து சுழன்றாலும் ஏர்த் தொழிலின் பின் நிற்கின்றது; அதனால் எவ்வளவு துன்புற்றாலும் உழவுத் தொழிலே சிறந்தது. உழவு செய்ய முடியாமல் மற்றத் தொழிலைச் செய்கின்றவர் எல்லாரையும் தாங்குவதால், உழவு செய்கின்றவர் உலகத்தார்க்கு அச்சாணி போன்றவர். உழவு செய்கின்றவர் உலகத்தார்க்கு அச்சாணி போன்றவர். உழவு செய்து அதனால் கிடைத்ததை உண்டு வாழ்கின்றவரே உரிமையோடு வாழ்கின்றவர். மற்றவர் எல்லோரும் பிறரைத்தொழுது உண்டு

பின் செல்கின்றவரே. நெல்வளம் உடைய தண்ணளி பொருந்திய உழவர், பல அரசரின் குடை நிழல்களையும் தம் குடையின் கீழ்க் காணவல்லவர் ஆவர். உழவருடைய கை தொழில் செய்யாமல் மடங்கியிருக்குமானால், விரும்புகின்ற எந்தப்பற்றையும் விட்டுவிட்டோம் என்று கூறும் துறவிகளுக்கும் வாழ்வு இல்லை, (டாக்டர், மு. வ. அவர்கள் தெளிவுரை.)

திருக்குறளில் உள்ள இம் மறைமொழிகள் யாவும் சங்க காலத் தமிழர் நெஞ்சில் பதிந்திருந்த பேருண்மைகள். உழவர் பெருமையை உலகப் பொதுமறை இவ்வாறு போற்றிய பொன்னெறியையே சங்கச் சான்றோர் பலரும் மேற்கொண்டனர். இவ்வுண்மை புறநானூறு போன்ற பழந் தமிழ் நூல்களால் இனிது விளங்கும். சான்றாக, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை வெள்ளைக்குடி நாகனார் பாடிய பாடலைச் சுட்டிக் காட்டலாம்;

.........கூர்வேல் வளவ!

..........................

பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே

..........................

பகடு புறந்தருநர் பார மோம்பிக்
குடிபுறந் தருகுவை யாயினின்
அடிபுறந் தருகுவ ரடங்கா தோரே!

—(புறம், 35)

'கூர்மையான வேல் உடைய சோழனே! போர் புரியும் படை தரும் வெற்றியும் உழுகின்ற கலப்பை நிலத்தின் கண்ணே ஊன்று சாலிடத்து விளைந்த நெல்லினது பயன்........ஏரைப் பாதுகாப்பாருடைய குடியைப் பாதுகாத்து அக்காவலாலே ஏனைக் குடிகளையும் பாதுகாப்பாயாயின், நின் அடியைப்போற்றுவர் நின்பகைவர்' என்ற அழகிய கருத்துக்களைத் தெரிவிக்கின்றது மேற்கண்ட புறப்பாடல். இக் கருத்துக்களையே, 'இரப்போர் சுற்றமும் புரப் போர் கொற்றமும் உழவிடை விளைப்போர்' என்ற, நெஞ்சை யள்ளும் செஞ்சொல் சிலப்பதிகார அடிகள் எதிரொலி செய்கின்றன.

## சமய காலம்

இவ்வாறு சங்க காலத்தில் போற்றப்பெற்ற உழவர் பெருமை, சங்க காலத்தை அடுத்து வந்த சமய காலத்திலும் தனிச்சிறப்பைப் பெறலாயிற்று. சங்க காலத்தில் கருவாய் இருந்த பல கருத்துக்கள் சமய காலத்தில் பேருருக் கொண்டன; அணுவாய் இருந்த பல சிந்தனைகள் சமய காலத்தில் 'விசுவ ரூபம்' தாங்கின. எண்ணமாய் இருந்த பல உண்மைகள் இயக்கங்களாய்ச் சமய காலத்தில் வீறு கொண்டன. சங்க காலம் இலக்கிய ஆறுகளைக் கண்டது; சமய காலமோ இலக்கியக் கடல்களைக் கண்டது. சங்க காலம், கிறித்து சகாப்தத்திற்குச் சில பல நூற்றாண்டுகட்கு முன் தொடங்கி, கி. பி. 3 ஆம் நூற்றாண்டு வரை நீடித்தது. சமய காலமோ அதற்குப்பின் தொடங்கி, ஏறத்தாழ ஆயிரத்து அறு

நூறு ஆண்டுகட்கு—பதினைறு நூற்றாண்டுகட்கு—தமிழகத்தில் நிலவியது. அக்காலத்தில் பல்வேறு சமயங்களையும் சார்ந்த பாவலர் பெருமக்கள், தொண்ணூற்றாறு வகைப்பட்ட சிற்றிலக்கியங்களாகிய பிரபந்தங்களை ஆயிரக்கணக்கில் பாடிச் செந்தமிழ் மொழி செழிக்கச் செய்தனர். அப் பிரபந்தங்களுள் ஒன்றாய்க் கருதப்பெறும் பெருமை வாய்ந்ததே 'உழத்திப்பாட்டு' என்றும், 'பள்ளு' என்றும் சிறப்பித்துக் கூறப்பெறும் இலக்கியம்.

இயல் இசை நாடகம் என்னும் மூன்றன் சுவையும் முக்கனியின் சுவையென ஒருங்கே அமைந்த இலக்கியங்களாகிய பள்ளுப் பிரபந்தங்கள், தமிழிலக்கியத்தில் தனிச்சிறப்பு வாய்ந்தவை. உழவர் இலக்கியமாய் விளங்கும் இந்நூல்கள், பாமரர் வாழ்வைப் பண்டிதரும் சுவைக்கும் வகையில் பேசுவன. உழவர் வாழ்வையும் உணர்வுகளையும் உள்ளவாறு எடுத்தோதும் இந்நூல்கள் பல, 17-ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு தமிழ் மொழியில் நூற்றுக்கணக்கில் தோன்றின. அவற்றில் ஒரு சிலவே இப்பொழுது கிடைக்கின்றன. முக்கூடற் பள்ளு முதல், அண்மையில் யான் வெளியிட இருக்கும் மோகனப்பள்ளு என்ற பழையதொரு பள்ளு நூல்வரை எத்தனையோ பள்ளுநூல்களைத் தமிழ்ப் புலவர்கள் விரும்பிப் பாடியுள்ளனர். அவை யாவும் உழவர் இலக்கியங்களே. தமிழ் நாட்டு உழவனின் பயிர்த்தொழிற் புலமையையும் அழகுணர்ச்சியையும், வாழ்க்கைச் சிக்கல்களையும், பல்வேறு கோணங்களிலும் இருந்து விளக்கும் பான்மையயன இப்பள்ளுப் பிரபந்தங்கள்.

மலை நிலத்துக் குறமகள் பாட்டாகத் தொடங்கிய குறத்திப்பாட்டு, 'குறமாய்' 'குறவஞ்சி'யாய்ப் பின்னளில் உருக்கொண்டது. உழவர் மகள் பாட்டாய் உதித்த உழத்திப்பாட்டும் அவ்வாறே பள்ளாய் மலர்ந்தது. இவ்விருவகை இலக்கியங்களுமே தமிழ் மொழியில் உள்ள தனிச்சிறப்பு வாய்ந்த மக்கள் இலக்கியங்கள் (people literature) ஆகும்.

பள்ளுப் பிரபந்தங்களுள் தலைமை சான்ற முக்கூடற்பள்ளினைமனத்தில்கொண்டு இருநூறு ஆண்டுகட்குமுன் சதுரகராதி செய்த வீரமாமுனிவர் தம் அகாரதியில் மூன்ருவதாகிய தொகையகராதியில் 320–21 பக்கங்களில் 'உழத்திப்பாட்டு' என்னும் தலைப்பில் தந்துள்ள குறிப்பு, பள்ளுப் பிரபந்தத்தின் நோக்கையும், போக்கையும் நன்கு விளக்கும் நலம் உடையது. இத்தாலியநாட்டுத் துறவியர் பெருமகனும், தமிழ்ப் பேராசானும், தேம்பாவணி பாடிய கவிஞர்பிரானு மாகிய வீரமாமுனிதன் உள்ளத்தையும் கொள்ளைகொண்டது முக்கூடற்பள்ளு. பள்ளு நூல்களுள் எல்லாம் சிறந்த அப் பள்ளு நூலில் உள்ள எல்லாப் பாடல்களிலும் சிறந்ததொரு பாடல்வருமாறு:

**மழைக்குறி**

ஆற்று வெள்ளம் நாளை வரத்தோற்று தேகுறி—மலை
யாள மின்னல் ஈழ மின்னல் சூழ மின்னுதே
நேற்று மின்றும் கொம்பு சுற்றிக் காற்ற டிக்குதே—கேணி
நீர்ப்படு சொறித் தவளை கூப்பி டுகுதே

சேற்று நண்டு சேற்றில்வளை ஏற்ற டைக்குதே—மழை
தேடி யொரு கோடி வானம் பாடி யாடுதே
போற்று திருமாலழகர்க் கேற்றமாம் பண்ணைச்—சேரிப்
புள்ளிப் பள்ளர் ஆடிப் பாடித் துள்ளிக் கொள்வோமே.(35)

## சமதர்மகாலம்

இவ்வாறு சமய காலத்தில் சிறந்து வளர்ந்த பள்ளுப் பிரபந்தங்கள் மக்கள் மன்றில் எழுப்பிய மக்கள் இலக்கிய—உழவர் இலக்கிய-உணர்ச்சியை நன்கு பயன்படுத்திக்கொண்டார் சமய காலத்தை அடியொற்றித் தோன்றிய சமதர்மயுகத்தின் கவிஞராகிய பாரதியார். 'பாரத சமுதாயம் முழுவதும் விடுதலை பெற வேண்டும். விடுதலைபெற்ற பாரத சமுதாயம்—'முப்பது கோடி ஜனங்களின் சங்கம்'—முழுமைக்கும் பொது உடைமைவேண்டும் என்று முழங்கிய மகாகவி பாரதியார், மழைக்குறிகண்டு 'சேரிப் புள்ளிப் பள்ளர் ஆடிப் பாடித் துள்ளிய' காட்சியை வருணிக்கும் பள்ளுப்பாடல் உணர்ச்சியை உள்ளத்துள் கொண்டு பாடிய அழியாத் தமிழ்க் கவிதையே அவர்தம் 'சுதந்திரப் பள்ளு'. விடுதலைக்கான அறிகுறியை எவ்வாறோ மனத்தகத்தே மின்னிய சிந்தனை மின்னலால் அறிந்து தீர்க்க தரிசியாராய், வராளிப் பண்ணில், ஆதி தாளத்தில், உணர்ச்சி பொங்க,

ஆடுவோமே—பள்ளுப்—பாடுவோமே;
ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட் டோமென்று

என்பது அவர் அருமையான பாடல். சேரிப்பள்ளர் 'மழைக்குறி' கண்டு ஆடிப்பாடியது முக்கூடற் பள்ளில்; சேரிப்பள்ளர் 'சுதந்திரக்குறி' கண்டு ஆடிப் பாடியது பாரதி பாட்டில். பள்ளர்--பதினேழாம் நூற்றாண்டு உழவர்—தோற்றுவித்த இலக்கியம், இயற்கை அழகையும், இறைவழிபாட்டு உணர்வையும் ஊட்டுவது; அடிமைத்தளை முறித்து விடுதலை காண விழைந்த பள்ளர்—இருபதாம் நூற்றாண்டு உழவர்—தோற்றுவித்த இலக்கியம் சுதந்திர வெறியைச் சமதர்ம ஆவேசத்தை மூட்டுவது. சேரிப்பள்ளர் களியாட்டமாகப் பாரதியார் பாடிய சுதந்திரப் பள்ளு, இன்று செந்தமிழ் நாடு முழுவதும் ஒலிக்கிறது.

உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனைசெய்வோம்—வீணில்
உண்டுகளித் திருப்போரை நிந்தனை செய்வோம்
விழலுக்கு நீர்பாய்ச்சி மாயமாட்டோம்—வெறும்
வீணருக்கு உழைத்துடலம் ஓயமாட்டோம்.
நாமிருக்கும் நாடு நமது என்பதறிந்தோம்—இது
நமக்கே உரிமையாம் என்பதறிந்தோம்—இந்தப்
பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம் பரி
பூரணனுக் கேயடிமை செய்து வாழ்வோம்.

என்ற கவியரசர் பாடல்கள், இருபதாம் நூற்றாண்டு உழவர் இலக்கியமாய் மட்டுமன்று—மனித குலத்தின் உரிமைச் சாசனமாயும் காட்சியளிக்கின்றன.

# 17. மோகனப் பள்ளு

தைத்திங்கள் முதல்நாள் தமிழர் திருநாள்; உழவர் பெருநாள். இப்பொன்னாளில் உழவர் வாழ்வை ஒட்டி எழுந்த ஓர் இலக்கியத்தை—தமிழிலக்கியக் கருவூலத்துள் ஒளிந்து ஒளிரும் ஒரு நூலை—நினைவு கூரல் பொருத்தமும், பயனும் உடையதன்றோ?

தமிழ் இலக்கியத் தொகையுள்ளே பள்ளு நூல்கள் தனிச்சிறப்பு வாய்ந்த ஒருவகைப் பிரபந்தங்கள். ஏர் பிடித்துச் சீர்பெருக்கும் காராளர் வாழ்வைப் பாடும் வன்மை நிறைந்தவை அப் பிரபந்தங்கள். ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகட்கு முன்னே அவை தோன்றின எனலாம்.

பள்ளுப் பிரபந்தங்களுள் தலை சிறந்ததாய்ப் போற்றப்படுவது முக்கூடற் பள்ளு. அந்நூலைத் தமிழறிஞர் திரு. மு. அருணாசலம் அவர்கள் 1940 ஆம் ஆண்டில் அரிய ஆராய்ச்சி முன்னுரையுடன் அழகுறப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள். 1943-ஆம் ஆண்டில் தளவாய்புரம் திரு. அருணாசலம்பிள்ளை அவர்கள் எழுதிய குறிப்புக்களுடன் 'வையாபுரிப் பள்ளு' வெளியிடப் பெற்றுள்ளது. 1944-ஆம் ஆண்டு 'முக்கூடற் பள்ளு' வெளியிட்ட திரு. மு. அருணாசலம் அவர்கள் எழுதிய செறிவுடைய முன்னுரையையும், சிறந்த குறிப்புரைகளையும் கொண்ட

பதிப்பாக ‘திருமலை முருகன் பள்ளு’ வெளியிடப் பெற்றுள்ளது. இரண்டாண்டுகட்கு முன் 1957-இல் செந்தமிழ் ஞாயிறு திரு. சேதுரகுநாதன் அவர்கள், ‘முக்கூடற் பள்ளு’ நூலை அரிய ஆராய்ச்சி முன்னுரையுடனும், பயனுடைய புதிய குறிப்புக்களுடனும் வெளியிட்டுள்ளார்கள். இந்நூல்கள் எல்லாம் சிறந்த முறையில் வெளிவரற்கு நேராகவும், மறைமுகமாகவும் துணைபுரிந்த பெரியார், காலஞ்சென்ற தமிழ்ப் பேராசிரியர் திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள். இவ்வுண்மை மேற்குறிப்பிடப் பெற்ற பதிப்புக்களின் முன்னுரைகளைப் படிப்பார்க்கு எளிதின் விளங்கும். மேலும் பள்ளுப் பிரபந்தங்களைப் பற்றிய சரியான வரலாறும் கண்ணோட்டமும் அமைவதற்குப் பெருந்துணை புரிந்தது திரு. வையாபுரிப் பிள்ளையவர்கள் 1932-ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற ‘குருகூர்ப்பள்ளு’க்கு வரைந்துள்ள சிறந்த முன்னுரையே என்றல் மிகையாகாது.

இந்நாள்வரை அச்சில் வெளிவந்துள்ள தமிழ் நூல்களைப்பற்றியும் அச்சேறாது துயின்று கொண்டு இருக்கும் தமிழ் இலக்கியங்கள் பற்றியும் எவரும் சரியானதொரு பட்டியலை முழுமையாகத் தயாரிக்கவில்லை. அதனால் பல்வேறு உண்மைகளை நாம் அறிந்துகொள்ள இயலாமல் தவிப்பது போன்றே, தமிழில் உள்ள பள்ளுப் பிரபந்தங்கள் பற்றியும் நாம் முற்ற உணர முடியவில்லை. ‘முக்கூடற்பள்ளு’க்கு திரு. மு. அருணசலம் அவர்களால் எழுதப் பெற்றுள்ள அரிய ஆராய்ச்சி முன்னுரையால் 23 பள்ளு

நூல்கள்பற்றி இப்போது தெரிய வருகிறது. அவற்றுள் ஒன்றே மோகனப்பள்ளு. இந்நூல்தவிர வேறு மூன்று பள்ளு நூல்களின் பெயரும் திரு. ந. சி. கந்தையா பிள்ளையால் அரிதின் முயன்று வெளியிடப் பெற்றுள்ள 'தமிழ் இலக்கிய அகராதி'யால் தெரியவருகிறது. அவையாவன: 1. என்னயினு புலவர் இயற்றிய முக்கூடற்பள்ளு 2. முருகர் பள்ளு 3. வேதாந்தப்பள்ளு.

இனி 'மோகனப்பள்ளு' பற்றிய சில முக்கிய செய்திகளை மட்டும் சிந்திப்போம். 'மோகனப் பள்'ளின் பழைய அச்சுப் பிரதி ஒன்றைப் பல ஆண்டுகட்கு முன் யான் காண நேர்ந்தது. அப் பள்ளின் பெயரே என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது! 'மோகனப் பள்ளு' நூலின் பழைய அச்சுப் பிரதியின் முகப்பில் முதற் பக்கத்தில் காணப்பெறும் குறிப்பு வருமாறு:

'தத்துவாங்கந் துணை—பொய்கைப் பாக்கம் சின்னண்ண முதலியார், இவர் கனிஷ்டர் நல்லண்ண முதலியார் இவர்கள் பேரில் கும்பகோண மடம் தத்துவலிங்கையரவர்கள் பாடிய மோகனப்பள்ளும் மேற்படி நல்லண்ண முதலியார் பொய்யா மொழியீஸ்வரர் பேரில் பாடிய நற்றாய் நன் மொழியும்—இவை சென்னீர்க்குப்பம் கிராமத்தாராகிய புதுவை பெரியசாமி முதலியார் கேட்டுக்கொண்டபடி பொய்கைப்பாக்கம் சுப்பராய முதலியார் குமாரர் சபாபதி முதலியாரால் பார்வையிடப்பட்டு மெய்

ஞான விளக்க அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது. விரோதிகிருது ௵ வைகாசி ௴ 22'.

இக்குறிப்பால் விளங்கும் உண்மைகள் பல: அவற்றுள் முதலாவதாகக் குறிப்பிடத்தக்கது, இந் நூல் வெளியான ஆண்டாகிய விரோதிகிருது ஆண்டு அறுபது ஆண்டு வட்டத்திற்குள் இருப்பின் கி. பி. 1911 ஆண்டாகவோ, அறுபது ஆண்டு வட்டத்திற்கு அப்பாற்பட்டதாயின் கி. பி. 1851 ஆம் ஆண்டாகவோ கொள்ளலாம். அடுத்தது, இந்நூலுக்குரிய பாட்டுடைத் தலைவர்கள் பொய்கைப் பாக்கத்தைச் சார்ந்த சின்னண்ண முதலியார், அவர் இளவல் நல்லண்ண முதலியார் என்னும் உடன்பிறப்பாளர் இருவர் என்பது. இவ்விருவரைப்பற்றியும் நூலுள்ளே பல பாராட்டு மொழிகள் பகரப்பெற்றுள்ளன. காப்புச் செய்யுட்களோடு சேர்ந்து 18 பாடல்களையுடைய இந்நூலில் ஒவ்வொரு பாட்டிலும் இவ்விரு சகோதரர்கள் பற்றிய புகழ் மொழிகள் இடம் பெற்றுள்ளன. மேலும், மூத்தவராகிய சின்னண்ண முதலியாரைக் காட்டிலும் 'அவர் கனிஷ்டர்' நல்லண்ண முதலியார், சிறந்த கல்வியறிவாளர் என்பதும், புலமை நலம் பொருந்தியவர் என்பதும் பொய்யாமொழியீஸ்வரர் பேரில் பாடிய 'நற்றாய் நன்மொழி' அவர் படைத்த இலக்கியம் என்பதும் விளங்கும். அடுத்து இவ்விரு முதலியார்களையும் போற்றும் வகையில் எழுந்த 'மோகனப் பள்ளின்' ஆசிரியர் கும்பகோணம் மடத்தைச் சார்ந்தவர் என்பதும், அவர் பெயர் தத்துவலிங்கையர் என்பதும் பெறப்

படும். 'கும்பகோணம் மடம்' என்பதனுலும், தத்துவலிங்கையர் என்ற பெயராலும், நூலினுள் 'வீர சைவாளுடன் சைவர்க்கும்' என வரும் குறிப்பாலும் நூலாசிரியர் வீரசைவ மரபினர் என்பது விளங்கும். மோகனப் பள்ளின் பாட்டுடைத் தலைவரே பாடிய நூல் 'நற்ருய் நன்மொழி' ஆதலின், இவ்விரு சிறு நூல்களும் ஒன்ருய் அச்சேற்றப்பட்டன போலும்.

மோகனப்பள்ளு மொத்தம் 18 பாடல்களைக் கொண்ட சிறு நூல். அப்பாடல்கள் முறையே தெரிவிக்கும் செய்திகள் வருமாறு,—

1. காப்பு—விநாயகர் வணக்கம்—2 (2) தெய்வ வணக்கம்—1 (3) வெள்ளச்சிறப்பு—1 (4) மீன் சிறப்பு—1 (5) குண்டைச் சிறப்பு—1 (6) நெற் சிறப்பு—1 (7) விதைச்சிறப்பு—1 (8) உழவர் சிறப்பு—1 (9) உழத்தியர் சிறப்பு—1 (10) உழத்தியர் வார்த்தையாடல்—1 (11) விபசாரதண்டனை—1 (12) பள்ளர்கள் வெறியாட்டு—3 (13) அறுப்பறுத்தற் சிறப்பு-3.

மோகனப்பள்ளு அளவால் சிறியது; ஆயினும் தமிழ்ச்சுவையால் சிறந்தது. இதன் தன்மை கருதியே இப்பள்ளு 'மோகனப்பள்ளு' என்று பெயர் பெற்றது என்று கருதவேண்டியுள்ளது. பெயரின் சிறப்புக்கு ஏற்ப, 'மோகனப்பள்ளு' சொற் பொருட் சுவை நிரம்பிய நூல். இந்நூலின் சிறப்பை, இந்நூல் எழுந்த காலத்தைக் கருத்திற் கொண்டே அளவிட்டுக் களிக்கவேண்டும். எளிய சொற்களையும், இனிய

ஓசையையும், அழகிய கற்பனைகளையும், அரிய கருத்துக்களையும் கொண்ட நூல் 'மோகனப் பள்ளு., இந்நூலில்உள்ளபாடல்கள் அனைத்தும் ஒரே சீராக' எளிய இனிய நடையுடன் அசைந்து ஆடிச்செல்லும் அழகு, பள்ளுப் பிரபந்தங்களுள் இந்நூலுக்கு வாய்த்த தனிச்சிறப்பு என எண்ணத்தோன்று கிறது. 'முக்கூடற்பள்ளு'ப்போன்ற நூல்களில் பல பாடல்களில் சொல்லப்படும் கருத்தை 'மோகனப் பள்ளு' ஆசிரியர் ஒரு பாடலிலேயே சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் அழகை எண்ணும்போது, 'மோகனப் பள்ளு, பள்ளு நூல்களின் சாறு' என்று போற்ற நம் மனம் விழைகிறது.

இந்நூலில் உள்ள 18 பாடல்களின் நலத்தை யும் ஆராய்ந்து இச்சிறு கட்டுரையில் விளக்கல் இய லாதவொன்று. எனினும் அழகியதொரு பாடலை— நூலின் முதற் பாடலை—ஈண்டுக்காண்போம்.

ஆற்றில் வெள்ளம்வருகிறது. அந்த வெள்ளச் சிறப்பைப் பார்த்துப் பள்ளர் உள்ளம் துள்ளிக் குதிக்கிறது. ஆற்றின் வெள்ளத்து அழகையும், அதை அனுபவித்து மகிழும் பள்ளர் உள்ளத்து அழகையும் தத்துவலிங்கையர், சமரச வெள்ளம் கவிதைக் கரை புரண்டு பாய்ந்தோடப் பாடும் அழ கே அழகு! முன்னர்த் தோன்றிய பள்ளுப் பிரபந்தங் களில் 'வெள்ளச் சிறப்பை' வருணிக்கும் புலவர் மர பை ஒட்டியே பாடுகிறார் தத்துவ லிங்கையர். என்றா லும், நீர் நிறைந்த காவிரியில் புது நீராடல்

போன்ற பூரிப்பு, மோகனப் பள்ளின் முதற் பாடலைப் படிக்கும்போது ஏற்படுகிறது. பாட்டின் முற்பகுதி பாட்டுடைத் தலைவன் பெருமை பேசுகிறது. பிற்பகுதி ஆற்று வெள்ளம் தோன்றிக் காடுமேடு நாடெல்லாம் சுற்றிக் கடலில் அடங்கும் காட்சியைக் கவினுறக் காட்டுகிறது. குறிஞ்சியில் பிறந்த வெள்ளம்—குமரவேள் பதம் பரவிப் புறப்பட்ட வெள்ளம்—முல்லையிலும், பாலையிலும், மருதத்திலும், நெய்தலிலும் பாயும் காட்சியும், அவ்வாறு நால்வகை நிலங்களிலும் பாயும்போது அந்நால்வகை நிலத்துத் தெய்வங்களையும் பரவிப்பாயும் அழகும் புலவர் பெருமானல், அழகொழுகும் கவிதையாக எழுதிக் காட்டப் பெறுகின்றன. இதோ அந்தப் பாடல்.

## வெள்ளச் சிறப்பு

முகிலை நிகர்க் கரத்தினன்—மலர்ச் சரத்தினன்-சிவன் வரத்தினன்
முதறி வாலுயர் கருத்தினன்—புக ழிருத் தினன்-சத்கிருத்தினன்
நகபுயன் கனதியாகியான்—பிறர் நாரியர் பால்மனம் மோகியான்
நல்லா னுங்கூர் வல்லான் சின்னணன் நல்லண நாடு தழைக்கவே,
மிகவுங் கடலை யடுத்தே—அதின் வெள்ள நீரைக் குடித்தே
மின்னிக் குமுறி யெழுந்தே—புயல் மேற்றிசை மலையிற் பொழிந்தே
அகலக் குறிஞ்சி தேடியே—வெள்ளம் அருட்கு கன்பத நாடியே
ஆயர் பாடியை நிரவியே—அதி லரிபொற் றுளைப் பரவியே
புகலும் பாலையைத் தாண்டியே—எட்டுப் புயக்கொற் றவ்வையை
வேண்டியே

பொன்விளை மருத நண்ணியே—சசி புருட னைத்துதி பண்ணியே
துகளில் பம்பையைக் கூடியே—நெய்தல் துறையைக் காணக்
கொண் டாடியே
சுழிசு ழிப்பதுங் கரைகி ழிப்பதுந் திரைகொ ழிப்பதும் பாரும்
பள்ளீரே !

*அருமை—எளிமை — இனிமை இம்மூன்றும் படைத்த இப்பாடல் — முதற்பாடல்-மோகனப்பள்ளின் பண்பிற்கு ஓர் சான்று; நற்சான்று.*



# 18 பூமிக்குப் பாரம்; சோற்றுக்குக் கேடு

பழமொழிகள் ஒரு நாட்டின் அரிய பெருஞ்செல்வம். அதன் சிறப்பை உணர்ந்த நல்லறிஞர் தம் இலக்கியப் படைப்புக்களில் பழமொழிகளைப் பண்பறிந்து போற்றிப் பயன் கொள்ளல் கண்கூடு. அந்த வகையில் வள்ளுவப் பெருந்தகையாரும் தம் தெய்வத்திருநூலில் பழமொழிகள் பலவற்றை எடுத்தாண்டு சிறப்பித்துள்ளார். வள்ளுவர் தெள்ளு தமிழ் மறையில் எடுத்தாண்ட பழமொழிகளில் ஒன்று 'பூமிக்குப் பாரம்; சோற்றுக்குக்கேடு' என்பது. பயனற்ற மனிதவாழ்க்கை, 'பூமிக்குப்பாரம்; சோற்றுக்குக்கேடு' என்பதே இவ்வாசகத்தின் உட்பொருள். இந்த உண்மையை உணர்ச்சியுடன் வெளியிடும் இந்தப் பழமொழியில் ஈடுபாடு கொண்ட வள்ளுவப் பெருந்தகையார், தம் நூலுள் பல இடங்களில் இப்பழமொழியின் ஒளிபடருமாறு செய்துள்ள நயனும், பயனும் அறிந்துபோற்றற்குரியன.

சமுதாயத்தில் உள்ள தீமைகளுள் மிகவும் கொடிய ஒன்று புறங்கூறல். இக்கொடிய நோய்க்கு இரையாகி வாழ்வதைவிட இறப்பதே மேல் என்பது வள்ளுவர் கருத்து. புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழும் வாழ்வின் இழிவையும்,

அந்த இழிவுதீரும் வழியையும் கூறும் வள்ளுவர், ஒரு குறளில் 'புறங் கூறித் திரிவோரையும் பூமி சுமக்கின்றதே' என்று வியக்கின்றார். பொறையின் பெருமையை ஓதிய—பூமியிலும் பொறையுடையாள் வேறில்லை என்பதை உணர்ந்த—திருவள்ளுவர் நில மகளின் கருணை நெஞ்சை—அறவுணர்வை நினைக்கின்றார்; அகழ்வாரைத் தாங்கும் அந்த அன்னையின் அறவுள்ளமே, ஒருவரைப்பற்றி அவரில்லாதபோது பிறரிடம் குறைபேசித் திரியும் சிறியோர்களைத் தாங்கும் கருணைப் பண்பிற்குக் காரணம் என்று கருதுகிறார்; கருதி, அக்கருத்தினை வெளியிடும் குறள் இது:

'அறன் நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை' (189)

(ஒருவர் நேரில் இல்லாதது கண்டு பழிச்சொல் கூறுவோனுடைய உடல் பாரத்தை, 'இவனையும் சுமப்பதே எனக்கு அறம்' எனக் கருதி நிலம் சுமக்கின்றதோ?—டாக்டர். மு. வ.)

புகழோடு வாழ்வதே வாழ்வு. அந்த வாழ்வு பெறாதார் வாழ்க்கை பூமிக்குப்பாரம். இந்தக் கருத்தைப் 'புகழ்' என்னும் அதிகாரத்தில் வலியுறுத்திப் பேசுகின்றார் வள்ளுவர். தகுதி வாய்ந்த செயல்களைச்செய்து புகழ் எய்தாதார் உடலைச் சுமப்பதால் நிலத்தின் வளம் குன்றிவிடுமோ என்று கவல்கின்றார் வள்ளுவர்.

'வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம். (239)

என்பது அக்கவலையால் அவர் வாய் மலர்ந்த குறள்.

(புகழ் பெறாமல் வாழ்வைக் கழித்தவருடைய உடம்பைச் சுமந்த நிலம், வசையற்ற வளமான பயனாகிய விளைவு இல்லாமல் குன்றிவிடும்–டாக்டர். மு.வ)

பூமிக்குப் பாரமாய் இருப்பவர்களைப்பற்றி அறத்துப்பாலில் எண்ணியது போன்றே, திருவள்ளுவர் பொருட்பாலிலும் அவர்களைப்பற்றி எண்ணி மனம் புழுங்குகிறார்.

'வெருவந்த செய்யாமை' என்ற அதிகாரத்தில், கடுங்கோலின் கொடுமையால் விளையும் ஏதங்களை எடுத்துரைக்கிறார். 'எங்கள் அரசன் கடுமையானவன்' என்று மக்களால் தூற்றப்படும்படி ஆட்சி செலுத்தும் மன்னவன் கோல் கடுங்கோல். அந்தக் கடுங்கோலுக்கு—அச்சம் நிறைந்த ஆட்சிக்கு—கல்வி அறிவு இல்லாதவர்களே 'அமைச்சர்'களாய் இருப்பார்கள். அத்தகைய ஆட்சியையும் ஆட்சியாளரையும் போல நிலத்துக்கு வேறு சுமையில்லை. இதனைக் கூறுங் குறள்,

> **'கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது**
> **இல்லை நிலக்குப் பொறை'** (570)

என்பது.

(கடுங்கோலாகிய ஆட்சிமுறை கல்லாதவரைத் தனக்கு அரணாகச் சேர்த்துக்கொள்ளும்; அது தவிர நிலத்திற்குச் சுமை வேறு இல்லை. —டாக்டர் மு. வ.)

வாழ்க்கையை அழகு செய்யும் சிறந்த பண்புகளுள் ஒன்று கண்ணோட்டம். அளவோடும் கடமைக்கு ஊறில்லா வகையிலும், வாழ்க்கைக்குத் தேவையாகும் அந்த அழகிய நாகரிகப் பண்பாகிய தயவால்தான்—கண்ணோட்டத்தால்தான் — உலகியல் நடைபெறுகின்றது. எனவே அத்தகைய கண்ணோட்டம் இல்லாதார் பூமிக்குப் பாரம்தான்—உண்மையிலேயே பெரும் பாரம்தான். இதனை,

**'கண்ணோட்டத் துள்ளது உலகியல் அஃதிலார்**
**உண்மை நிலக்குப் பொறை.'** (572)

என்னும் குறளால் அறிகின்றோம்.

(கண்ணோட்டத்தினால் உலகியல் நடைபெறுகின்றது; கண்ணோட்டம் இல்லாதவர் உயிரோடு இருத்தல் நிலத்திற்குச் சுமையே தவிர வேறு பயனில்லை. —டாக்டர் மு. வ.)

பூதம் காப்பதுபோல் பொருளைப் பாதுகாத்து யாருக்கும் பயன்படாத வகையில் இறுகப் பிடித்து இருத்தல் அறிவற்ற—அறமற்ற—செயல். ஆனால், உலகில் சிலர் காசை எண்ணிப்பார்ப்பதிலேயே விருப்பம் கொள்கின்றனர். அந்தக் காசை அறமான வழிகளில் செலவு செய்து புகழ் கொள்ளும் நெறியில் அவர்கட்கு ஆசை பிறப்பதில்லை. அத்தகையோர் இந்த உலகில் பிறந்து வாழ்தல் பூமிக்குப் பாரந்தான் என்று திருவள்ளுவர் கூறுதலைக் கீழ்வரும் குறளால் அறியலாம்:

**'ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்**
**தோற்றம் நிலக்குப் பொறை'** (1003)

(சேர்த்து வைப்பதையே விரும்பிப் பற்றுள்ளம் கொண்டு, புகழை விரும்பாத மக்கள் பிறந்து வாழ்தல் நிலத்திற்குப் பாரமே ஆகும்–டாக்டர் மு.வ.)

'பூமிக்குப் பாரம்' என்று இருப்போரைப் பற்றிப் பேசிய வள்ளுவர் 'சோற்றுக்குக்கேடு' என்று இருப்போரைப் பற்றியும் குறிப்பிடுகிறார். வறுமையின் கொடுமையை விளக்கிக் கல்நெஞ்சையும் கரைக்கும் 'நல்குரவு' என்ற அதிகாரத்தில், உப்பிற்கும் காடிக்கும் எமனாய் இருப்போரைச் சுட்டிக் காட்டுகிறார். வறுமையால் மனிதனுக்கு நேரும் பேரிழப்பு அவன் உயிரினும் சிறந்த மானம் அவனைவிட்டுக் காற்றில் பறப்பதே. உண்ணுவதற்கு—நுகர்வதற்குப் பொருள்கள் இல்லாதார்உண்மைத் துறவு—வாழ்க்கைத் துறவு—கொள்ளவேண்டும்; இல்லையேல், பிறர் வீட்டில் உள்ள உப்பிற்கும் காடிக்கும் காலனாகும் 'வாழ்வு' அவர்கட்குக் கிட்டும். மானம் கெட்ட அந்த வாழ்வும் ஒரு வாழ்வா! அன்று; சோற்றுக்குக்கேடே! இவ்வுண்மையை,

'துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று (1050)

என வரும் குறளால் குறிக்கின்றார்.

(நுகரும் பொருள் இல்லாத வறியவர், முற்றுந் துறக்கக்கூடியவராக இருந்தும் துறக்காத காரணம் உப்புக்கும் கஞ்சிக்கும் எமனாக இருப்பதே ஆகும் —டாக்டர். மு. வ.]

வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்! வள்ளுவர்க்குப் பழமொழியும் வயிரப்படை!

# 19. வையையின் வளம்

விழிக்கு வியப்பூட்டி, வாழ்வுக்கு உயிர் ஊட்டும் வளமை படைத்து விளங்கும் ஆற்றை, அழகும் அருளும் நிறைந்த பெண்ணாகப் புனைந்துரைப்பது ஒரு சிறந்த இலக்கிய மரபு. அம் மரபுவழி நின்று இளங்கோ அடிகள் ஓர் ஆற்றை வருணிக்கிறார்.

ஆற்றில் இருகரைகளிலும் எண்ணற்ற எழில் மலர்கள் பூத்துக் குலுங்கிய வண்ணம் இருக்கின்றன. குரவம், வகுளம், கோங்கு, வேங்கை, வெண்கடம்பு, சுரபுன்னை, மஞ்சாடி, மருது, சேடல், செருந்தி, செண்பகம், பாதிரி முதலியவை அம்மலர்கள். இவை கரையின் புறவாய் எங்கும் பூத்துக் கிடப்பது; ஆற்றுப்பெண் உடுத்திய பூந்துகில் போலக் காட்சி அளிக்கிறது. ஆற்றின் அகவாயில் இன்னும் பல எழில்மலர்கள் மலர்ந்து மணம் பரப்புகின்றன. அவை குருக்கத்தி, செம்முல்லை, வளவிய கொடியினையுடைய மோசி மல்லிகை, வெள்ளை நறுந்தாளி, வெட்பாலை, மூங்கில், கொழுவிய கொடியாய்ப் பொருந்தி வளர் சிவத்தை, குட்டிப் பிடவு, இருவாட்சி முதலியன. இவை முகை உடைந்து தகைபெற விளங்குவது, நதிநங்கை உடுத்திய மேகலைபோல் காட்சி அளிக்கின்றது. இத்தகு மலர்களை இருகரைகளிலும் கொண்டு அகன்று உயர்ந்து விளங்கும் கரைகளே அவ்வழகு மகளுக்கு அல்குலாய் அமை

கின்றன. விரிந்த பொலிவினை உடைய ஆற்றிடைக் குறையிடத்து அடிப்பக்கம் அகன்று, பல மலர்களால் உயர்ச்சியுற்று, ஒன்றோடு ஒன்று ஒத்து விளங்கிய குவிந்த மணற்குன்றங்கள் அத்தாயின் கொங்கைகளாய்த் தோன்றுகின்றன. கரைகளில் உதிர்ந்து கிடக்கும் முருக்க மலர்களின் செம்மை, அம்மையின் சிவந்த செவ்வாயாய் விளங்குகின்றன. அருவி நீரோடு கலந்து வந்த அழகிய முல்லை மலர்கள் அவள் முறுவலைக் காட்டுகின்றன. குறுக்கே மறித்தும், நெடுக ஓடியும் திரிகின்ற பெரிய கயல் மீன்கள் அன்னையின் கண்களாய் அமைகின்றன. வாசனை பொருந்திய மலர்கள் நீங்கப் பெறாது விளங்கும் கரிய அறல் மணற், அக்காரிகையின் பெரிய கறுத்த கூந்தல். இத்தகு 'மங்கல நல்லணி' கோலம் கொண்ட அம் மாதரசியின் ஒழுக்கமோ உலகைக் காத்து ஊட்டி வளர்க்கும் உயர்பேர் ஒழுக்கம். ஒழுக்கம் உடையார் புகழுக்கு எல்லையுண்டோ? அவள் 'புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி'. அப்படியா? அவள் பெயர்? 'வையை என்ற பொய்யாக் குலக்கொடி' ஆ! வையை! மதுரை மாநகரையும் பாண்டிப் பெரு நாட்டையும் மகவாய் வளர்க்கும் தாய்!

இதோ ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு அவளைப் பற்றி இளங்கோ அடிகள் படைத்த இலக்கியச் சித்திரம்:

**குரவமும் வகுளமும் கோங்கமும் வேங்கையும்**
**மரவமும் நாகமும் திலகமும் மருதமும்**
**சேடலும் செருந்தியும் செண்பக ஓங்கலும்**

பாடலம் தன்னொடு பன்மலர் விரிந்து
குருகும் தளவமும் கொழுங்கொடி முசுண்டையும்
விரிமலர் அதிரலும் வெண்கூட தாளமும்
குடசமும் வெதிரமும் கொழுங்கொடிப் பகன்றையும்
பிடவமும் மயிலையும் பிணங்கரில் மணந்த
கொடுங்கரை மேகலைக் கோவை யாங்கணும்
மிடைந்துசூழ போகிய அகன்றேந் தல்குல்
வாலுகம் குவைஇய மலர்ப்பூந் துருத்திப்
பால்புடைக் கொண்டு பன்மலர் ஓங்கி
எதிரெதிர் விளங்கிய கதிரிள வனமுலை
கரைநின் றுதிர்த்த கவிரிதழ்ச் செவ்வாய்
அருவி முல்லை அணிநகை யாட்டி
விலங்குநிமிர்ந் தொழுகிய கருங்கயல் நெடுங்கண்
விரைமலர் நீங்கா அவிரறற் கூந்தல்
உலகுபுரந் தூட்டும் உயர்பே ரொழுக்கத்துப்
புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடி.'

(சிலம்பு–13: 151–170)

இவ்வையை ஆற்றின் வடகரைக்கு வந்து சேர்ந்தனர், கோவலனும் கண்ணகியும். கருணை மறவனுக்கும், கற்புச்செல்விக்கும் நேர இருக்கும் தீங்கை நினைந்தாள் முக்காலமும் உணர்ந்த மூதறிவாட்டியாம் வையை! தன்னை ஒத்த தமிழ் மகளுக்கு—கற்பரசிக்கு—நேர இருக்கும் துயரை நினைந்தபோது அவள் 'நெஞ்சு பொறுக்கவில்லை! அவள் கயல் விழிகளில் கண்ணீர் வெள்ளம் பெருகிற்று. ஆனல் 'விருந்தினரா'ய் வருவோர் திடுக்குறும் வண்ணம் அவள் தன் கண்ணீரைக் காட்டிக் கொள்ள விரும்ப

வில்லை. புண்ணிய நறுமலர்களாகிய ஆடையால் தன்னைப் போர்த்துக்கொண்டு, பொங்கி வந்த கண்ணீரையும் மறைத்துக்கொண்டாள். அப்போது அவளைப் பார்த்தவர், 'இது புனலாறு அன்று; பூவாறு' என்றே சொல்வர்! அவ்வளவுப் பூக்களால் தன்னைப் போர்த்து மறைத்துக் கொண்டாள். இந்த உண்மையைக் கவிஞன் கண்டு காப்பியத்தில் பாடுகின்றான்.

'தையற் குறுவது தானறிந் தனள் போல்
புண்ணிய நறுமல ராடை போர்த்து
கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கிப்
புனல்யா றன்றிது பூம்புனல் யாறெனா, (சிலம்பு 13: 171–174)

ஆம். வையைத் தாய் நீர்வளம் மட்டுமன்று; நெஞ்சு வளமும் படைத்தவள்!

அவள் வாழ்க! வளம் கொழித்து வாழ்க!



# 20. இளங்கோ கூறும் 'என்கதை'

தத்தம் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புக்களைத் தாம்தாம் பாடும் பாடல்களிலேயே பொதிந்து வைக்கும் பயன் செறிந்த பண்பைப் பழந்தமிழ்ப் புலவர்கள் பலரிடமும் காண்கிறோம். ஆயினும் காவியச் சுவையோடு கலந்து தம் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்பைப் பாடும் பெருமையை முதன் முதலாகப் பெற்ற பேறு இளங்கோ அடிகள் பெற்ற தனிப் பேறு. இளங்கோ கூறும் 'என் கதை' அவர் படைத்த அழியாப் பேரிலக்கியத்தின் இறுதியில்—வஞ்சிக் காண்டத்து—'வரந்தரு காதை'யின் முடிவில் அமைந்துள்ளது. இழையோடு இழையை இழைத்துவிடும் நெசவாளிபோல, தன் பாட்டுடைத் தலைவியின் கதையோடு கதையாய்த் தன் வரலாற்றைக் கவிதைத் தறியில் இழையோட்டி யிருக்கும் இளங்கோ அடிகளின் கவிதை ஆற்றல் போற்றி இன்புறற் குரியது.

சேரவேந்தன் வீரக் கண்ணகிக்குக் கடல் மலை நாட்டில் கோயில் எடுத்தான். தன்மானம் காக்கப் போர்க்கோலம் பூண்ட தமிழ் நங்கைக்கு, தமிழ் மானம் காக்கப் போர்க்கோலம் பூண்ட தமிழ் வேந்தன் அமைத்த கோயில் அது!

'கண்ணகி கோட்டம்' என்று காசினி புகழ, கற்புத் தெய்வத்திற்கு எடுத்த அக்கோயிலில், காவல்

வேந்தன் செங்குட்டுவன், பிற மன்னரிடம் திறை பெற்று மகிழ்ந்து வீற்றிருந்தான். அந்த நேரத்தில் அரிவையர் நால்வர் அங்கு வந்தனர். அவர்கள் தேவந்தி, காவற்பெண்டு, அடித்தோழி, ஐயை என்போர் ஆவர். அவர்களுள் முதல் மூவரும் சோழ நாட்டின் தலைநகரமாகிய காவிரிப்பூம்பட்டினத்தைச் சேர்ந்தவர்கள்; கண்ணகி நல்லாளோடு நெருங்கிய உறவு பூண்டவர்கள். பொழுது புலராமுன் பூம்புகாரை விட்டு நீங்கிய கோவலன் கண்ணகி வாழ்வை எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தவர்கள்.

ஒருநாள் மாடல மறையோன் வாயிலாக அவர்கள் கேட்ட செய்தி, அவர்கள் இதயத்தை இடியெனத் தாக்கியது. 'கோவலன் ஆராயாமற்கொலை செய்யப்பட்டான். அதை அறிந்து, அவன் வீர பத்தினி பொங்கி எழுந்தாள். அதன் விளைவாகப் பாண்டிவேந்தன், 'யானோ அரசன்? யானே கள்வன்!' என்று மனங்குமுறி உயிர் துறந்தான். இச் செய்தி விளக்கத்தை மாடலன் வாயிலாகப் பெற்ற அம்மகளிர் மதுரை மாநகர்க்குச் சென்றனர். அங்கே சென்ற அவர்கட்கு, மதுரை எரியுண்ட செய்தியும், தன்பால் அடைக்கலமாய் வந்தவர்கட்குத் தீங்கு நேர்ந்தமையால், 'இடையர் குலத்து மக்களே! அடைக்கலப் பொருள் இழந்தேனே! அரசன் செங்கோலும் வெண்குடையும் தவறு இழைத்தனவோ?" என்று அலமந்து நள்ளிரவில் தீப் பாய்ந்தாள் மாதரி நல்லாள்' என்ற செய்தியும் 'வரவு' கூறின.

இச்செய்திகள் அறிந்து பெருந்துன்பம் அடைந்த, கண்ணகியின் பார்ப்பனத்தோழி தேவந்தியும், கண்ணகியின் செவிலித்தாயாகிய காவற்பெண்டும், கண்ணகியின் அடித்தோழியும், மாதரி மகள் ஐயையைக் கண்டு, அவளுடன் வையை ஆற்றின் கரைவழியே சென்று, திருச்செங்குன்று மலை உச்சியில் ஏறிக் கண்ணகி கோயிலை அடைந்தனர். அங்கே பத்தினிக் கடவுட்கு விழாச்செய்த பெருமிதத்தோடு வீற்றிருந்த சேரவேந்தன் செங்குட்டுவனைக் கண்டு தங்கள் வரலாற்றை, உள்ளம் உருக்கும் வகையில் எடுத்து உரைத்தனர். உரைசால்பத்தினி மனித உரு நீத்து மன்னுபுகழ்த்தெய்வ உருப்பெற்ற சிறப்பை ஏத்திப் போற்றினர்.

அந்நிலையில் செங்குட்டுவன் விழிகள் அகன்று நோக்க, தெய்வ வடிவில் ககன வெளியில் காட்சி தந்தாள் கண்ணகி. அவள் திருவடிகளைப் பொற்சிலம்புகள் அணி செய்தன; இடையினை மேகலை அணி செய்தது; திருக்கரங்களில் வளையல்கள் ஒளி வீசின; திருச்செவிகளில் நல்வயிரப் பொற்றோடு கதிர் விட்டது. இன்னும் சாம்பூநதப் பொன்னால் ஆகிய ஆபரணங்கள் பல அழகு செய்ய, மின்னற் கொடி போல் வானத்தில் விளங்கிய கண்ணகியின் திருவுருவைக் கண்டு, 'என்ன! இஃதென்ன! இஃதென்ன கொல்! என்று வியந்து நின்ற சேர வேந்தன் செவி குளிர

'தென்னவன் தீதிலன் தேவர்கோன் தன்கோயில்
நல்விருந் தாயினன் நானவன் தன்மகள்

வென்வேலான் குன்றில் விளையாட்டு யானகலேன்
என்னோடும் தோழியீர் எல்லீரும் வம்மெல்லாம்

(வாழ்த்துக் காதை—10)

என்று கண்ணகியின் தெய்வமணிக்குரல் கேட்டது.

அது கேட்டே வஞ்சி மகளிரும், ஆயத்தாரும் அம்மானை வரியாலும், கந்துக வரியாலும் கண்ணகி தெய்வத்தையும் தமிழ் நாட்டு மூவேந்தரையும், அமிழ்தினும் இனிய பாடல்களால் வாழ்த்தினர். அற்றை நாள் அரசர் பெருமக்களை வாழ்த்திய அவர்கள் வாழ்த்தில் இற்றைநாள் ஒற்றுமைத் தமிழகத்திற்குரிய உணர்ச்சி விதைகள் வீழ்ந்திருப்பதைக் காணும்போது, வியப்பும் மகிழ்வும் நம்மை ஆட்கொள்கின்றன. கலைச் சுவையும் வீரச் சுவையும் களி துளும்ப, வஞ்சிமகளிர் பாடிய வாழ்த்திற்கு வைரமுடி சூட்டினாற் போல, பத்தினிக் கடவுள் கண்ணகியும், 'நீடூழி செங்குட்டுவன் வாழ்க!' என்று திருவாய் மலர்ந்து வாழ்த்தினாள்.

இவ்வாழ்த்துக் காதையின் தொடக்கத்தில் கண்ணகியின் திருவுருவச் சிலையை முதல் முதல் கண்டதும் தேவந்தியும் காவற் பெண்டும், அடித்தோழியும் புலம்பிய புலம்பலால், 'கண்ணகி, கோவலன் இறந்த செய்தி கேட்டு அவர் அன்னையர் ஆவி துறந்தனர்', என்பதையும், 'தந்தையர் துறவு நெறிமேற்கொள்ளத் துணிந்தனர்', என்பதையும் 'மாதவியும் துறந்தாள்; அவள் மகள் மணிமேகலையும் துறந்தாள்' என்பதையும், 'அடைக்கலப் பொருளை இழந்தேனே!

என்று ஆற்றுத்துயர் அடைந்து மாதரி மாண்டாள்' என்பதையும் அறிந்து கொள்ளும் வாய்ப்பினைச் செங்குட்டுவன் பெற்றான். அதன் காரணமாகச் செங்குட்டுவன் முதலில் மணிமேகலையின் துறவு வரலாற்றைத் தேவந்தி வாயால் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

அரசர் பெருமானுக்குத் தேவந்தி இளம் பருவத்திலேயே மணிமேகலை இன்ப வாழ்வைத் துறந்து கடுந்தவம் மேற்கொண்ட செய்தியை உணர்ச்சியோடு கூறிக்கொண்டிருந்தபோது அவளுக்குத் தெய்வ ஆவேசம் வந்து விட்டது. அப்போது தேவந்திமேல் ஆவேசித்த பாசண்ட சாத்தன் இட்ட கட்டளையின் வழி, அங்கிருந்த மாடல மறையோன், தன் கை உறியிலிருந்த தெய்வத் தன்மை வாய்ந்த நீரைக் கண்ணகி கோயிலுக்கு வழிபாடு செய்ய வந்திருந்த இளமகளிர் மூவர்மீது தெளித்தாள். உடனே அவர்களது முற்பிறப்பு உண்மை விளங்கிற்று. அம்மூவரும் போன பிறப்பில் கண்ணகி தாய், கோவலன் தாய், மாதரி என்பதையறிந்த செங்குட்டுவன் பெருவியப்பு அடைந்தான். அவன் வியப்பை உணர்ந்த மாடல மறையோன், அவர்கட்கு அப்பிறப்பு வாய்த்த வரலாற்றை விரித்து உரைத்தான்! அதை அறிந்து அகமிக மகிழ்ந்த செங்குட்டுவன் கண்ணகி கோயிலுக்கு அருச்சனை முதலியன நாளும் தவறாமல் நடைபெற, வரியில்லாமல் இறையிலி நிலம் விட்டு ஏற்பாடு செய்தான். தினமும் தெய்வ வழிபாடு நிகழ்வதற்கான கட்டளைகளைச் செய்தான்.

அத்துடன் மனித உருவில் வாழ்ந்தபோது எந்தத் தேவந்தி கண்ணகிக்குத் தோழியாக விளங்கினளோ அவளைப் பார்த்து, 'சந்தன முதலியன சாத்துதல், மலரால் அருச்சித்தல், நறும்புகை எடுத்தல் ஆகிய நற்பணிகளைக் கண்ணகி கோயிலில் நாளும் செய்வா யாக!' என்று அருள் ஆணை பிறப்பித்தான்.

பின்னர்ப் பத்தினி கோட்டத்தை மூன்று முறை வலம்வந்து வணங்கி நின்றான் உலக மன்னவ னாகிய செங்குட்டுவன். அவ்வமையம் அவன் முன் னிலையில் அப்போதுதான் சிறையினின்றும் விடு தலை பெற்ற ஆரிய அரசரும், முன்னரே வஞ்சிமா நகரில் சிறைப்பட்டு இருந்து அந்நேரத்தில் விடுதலை பெற்ற பிற வேந்தரும், குடக நாட்டுக் கொங்கரும், மாளுவ தேயத்து மன்னரும், கடல்சூழ்ந்த இலங்கைக் காவலன் கயவாகுவும் வந்து நின்றனர். அவர்கள் அனைவரும் கண்ணகி தெய்வத்தை நோக்கிக் கை கூப்பி வணங்கி, 'தாயே நாங்கள் எங்கள் நாட் டில் நினக்குக் கோயில் எழுப்பிய செங்குட்டுவன் பிறந்த நாளில் செய்யும் வேள்வியில் எழுந்தருள வேண்டும்' என்று பணிந்து வேண்டினர். மாநில மன்னர் மனமுருகிச் செய்து கொண்ட வேண்டு கோட்குச் செவி சாய்த்தது கண்ணகி தெய்வம். 'தந்தேன் வரம்' என்று எழுந்தது ஒரு குரல். அது கேட்டுச் செங்குட்டுவனும் ஏனைய அரசர்களும், அவர்தம் பெருஞ்சேனைகளும் பத்தினி தெய்வத்தின் புகழ் போற்றினர்.

முத்தி இன்பத்தையே கண்டவர் போன்று மகிழ்ந்து உண்மை நெறியினை உவந்து போற்றும்

மாடலனோடும் சேர்ந்து மாநில வேந்தர் மகிழ்ந்து போற்ற வேள்விச் சாலைக்குள் நுழைந்தான் வீர வேந்தன் செங்குட்டுவன். அப்போது அச்சேர வேந்தன் தம்பியார்—அரசு துறந்திருந்தவர்—கண்ணகி தெய்வத்திற்கு, 'நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்' என்று காவியக் கோயில் கட்டிய கலைச் செல்வர்—இளங்கோவடிகள்—பத்தினிகோட்டத்திற்குள் அடியெடுத்து வைத்தார். அப்போது நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறும் நிலையில் தான் இளங்கோ அடிகள் தம் சரிதையைத் தாமே கூறுகிறார். தம் வாழ்க்கையின் வரலாறு கண்ணகி தெய்வத்தின் திருவாயால் வெளிப்பட்ட பான்மையையும் புலப்படுத்துகிறார்.

பத்தினி கோட்டத்துள் இளங்கோ அடிகள் நுழைந்ததும், பார்ப்பனத் தோழி தேவந்தி மேல் கண்ணகி தெய்வம் எழுந்தருளிக் கவிச் செல்வரின் கதையைக் கூறியது. அது வருமாறு:

'வஞ்சிமாநகரத்தில் அரண்மனை அத்தாணி மண்டபத்தில் நின் தந்தையின் அருகே இருந்தாய்; அப்போது உன்னை நோக்கிக் (காலத்தின் இயல்பைக் கணித்துச் சொல்லும்) கணி ஒருவன், 'அரசை வீற்றிருக்கும் அழகிய வடிவிலக்கணம் நின்னிடத்தே உண்டு' என்று கூறினன். அவனை நீ வெகுண்டு நோக்கினாய். அதோடு மணங் கமழும் நறிய மாலையினையும், கொடி கட்டிய தேரினையும், நால்வகைப் படையினையும் உடைய உன் அண்ணன் செங்குட்டுவன் ('அண்ணன் இருக்கத் தம்பி ஆளு

வதா?' என்று எண்ணி வருந்தும்) துன்பம் ஒழியு மாறு, கதிரவன் தோன்றும் கிழக்காகிய திசையாற் பெயர் படைத்த குணவாயிலின்கண் முனிவர்கள் எதிரே, அகன்ற இடத்தினை உடைய இந்நில வுல கைத் தாங்கும் சுமை உன்னை விட்டொழிய விலக்கி, உள்ளமும் சென்று உணர இயலாத மிக்க நெடுந் தொலைவில் உள்ள முடிவில்லாத இன்பத்தினை உடைய முத்தி உலக அரசினையாளும் மன்னன் ஆயினை!'

இக்கருத்துக்களை இளங்கோ அடிகள் படைத்த இலக்கியம் இயம்பும் திறம் வருமாறு:

யானும் சென்றேன் என்னெதிர் எழுந்து
தேவந் திகைமேல் திகழ்ந்து தோன்றி,
வஞ்சி மூதூர் மணிமண் டபத்திடை
நுந்தை தாள்நிழல் இருந்தோய்! நின்னை
'அரைசுவீற் றிருக்கும் திருப்பொறி உண்'டென்று
உரைசெய் தவன்மேல் உருத்து நோக்கிக்
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச்
செங்குட் டுவன்தன் செல்லல் நீங்கப்
பகல்செல் வாயிற் படியோர் தம்முன்
அகலிடப் பாரம் அகல நீக்கிச்
சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்து
அந்தமி லின்பத் தரசாள் வேந்தென்று
என்திறம் உரைத்த இமையோர் இளங்கொடி'

(வரந்தரு காதை—171-183)

இளங்கோ அடிகள் வரலாற்றை அறியத் தேவந்திக்கு அந்நாள் வரை எந்த வாய்ப்பும் இல்லை.

கண்ணகிக்கும் மண்ணுலக வாழ்வில் இருக்கும்வரை அடிகளாரின் சரிதையை அறிந்து கொள்ள ஏது ஏதும் இல்லை. எனவே தெய்வமாய் ஆன நிலையில் தான் கண்ணகி தேவி கடந்த கால நிகழ்ச்சிகளை விண்ணுலக வாழ்வில் தெரிந்து கொண்டு, தேவந்தி வாயிலாகக் கூறித் துறவியர் பெருமானை மகிழ்வித்திருக்க வேண்டும். அற்புதத்தை நம்பாதவர்கட்கு இது அதிசயமாகலாம்; 'கலையுரைத்த கற்பனை' யாகவே தோன்றலாம். உண்மை எவ்வாறாயிருப்பினும் இளங்கோ அடிகளின் வரலாற்றை அவர் வாயாலேயே கேட்கும் வாய்ப்பு நமக்குக் கிடைத்து விடுகிறது. கலையும், வரலாறும், சமயமும் கலந்தால் கிடைக்கும் 'கூட்டுக்களி' இன்பமும், நம் இதயவீட்டை நிரப்பிக் கொள்கிறது. அம்மட்டோ? நாம் ஆர்வமுடன் படித்த ஒரு பெருங்காப்பியம் ஐயாயிரத்தொரு வரிகள்—வெறுங் கற்பனையல்ல—வரலாற்று அடிப்படைமேல் வானுயர எழுந்த காவியப் பெருங் கோயில் என்ற உண்மை நம் உள்ளத்தில் ஒளி வீசும். அவ்வொளியின் பயனாய்ப் பத்தினி கோட்டத்துள்—காவியக் கோயிலுள் — கொலுவிருக்கும் அன்னையின் — கண்ணகி தெய்வத்தின் — காலடிகளில் நம்மையும் அறியாமல் நாம் வீழ்ந்து வணங்கி வாழ்த்துவோம். அப்போது, இளங்கோ கூறும் 'என் கதை' 'சுவை நிறைந்தது; பயனும் செறிந்தது,' என்று காவியக் கோயிலின் மணியோசை கணீரென்று முழங்குவதும் நம் காதுகளில் ஒலிக்கும்.